# இன்பமான கனவுகள் உட்வர்ட்ஸுக்கு நன்றி!




மந்தம், புளிப்பு, உப்புசம் மற்றும் பல்முளைக்கும்போதுள்ள உபாதை களிலிருந்து உடனடி நிவாரணம்பெற உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர் உபயோகியுங்கள்.

**இது 100 வருடங்களாக புத்திசாலிகளான தாய் மார்களால் உபயோகிக்கப் பட்டு வருகிறது**

Alyers ATC-508 TAM A




# கல்கி


## பொருளடக்கம்


குரோதி ஆவணி 22 ★ செப்டம்பர் 6 1964




கல்கியில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே

## சக்தி

காற்றுக் குதிரைக்குக்
 கடிவாளம் இட்டதன் மேல்
வீற்றிருந்தாள் சக்தி;
 விழுவாளோ என்றெண்ணி
ஓடிப் பிடித் தேன்
 உடனே யோர் மேகத்துள்
ஓடி மறைந் திருந்தாள்
 ஒளி வீசி மின்னலிட்டாள்;
கொட்டிக் குதித் தார்த்துக்
 கொப்பளித்துப் பஞ்சாகி
எட்டத் தூரத்து விற
 எழில ருவி நீரினிலே
சக்தி மறைந் திருந்தாள்.
 சத்தம் நிறைந் திருந்தாள்.
சக்தி தன் உறை விடமும்
 சாவுக்கு நேர ருகோ!

— மஹரி

அந்தத் தலையணை சிறிதுநேரம் தான் உதவும்.
இந்தத் தலையணைதான் நல்லதூக்கம் தரும்!

P.L. 480
உணவு உதவி
அமெரிக்க

விவசாயிக ளுக்குச் சுதந்திரம்





மலர் 24 | தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 6

# வெளியேறிய பின்னும் பொறுப்பு உண்டு

'அகதியானவர்கள் சர்க்காரின் உதவியிலேயே வாழத்தான் விரும்புகிருர்கள்; புனரமைப்புத் திட்டங்களில் ஒத்துழைத்து, போதிய அளவு தங்களின் உழைப்பை அளிக்க அவர்கள் முன் வருவதில்லை' என்று ஒரு கருத்து உள்ளது. பாகிஸ்தானி லிருந்து வந்த அகதிகள் மட்டுமின்றி, தண்டகாரண்ய திட்டம் காரணமாகத் தேசத்தின் ஒரு பகுதியிலிருந்து வேறு பகுதிகளுக்குக் குடியேற்றப்பட்டவர்களிலும் பலர் எவ்வித உழைப்பும் அளிக்காமலே சர்க்கார் தயவில் நிரந்தரமாக வாழ நினைப்பதாக ஒரு கருத்து உண்டு. ஆனல் இதற்கு மாருக, பர்மாவிலிருந்து வந்துள்ள அகதிகள் சர்க்கார் திட்டங்களுக்கு மிகவும் நல்ல முறையில் ஒத்துழைப்புத் தந்து, விரைவிலேயே சுய பலத் தில் ஊன்றி நிற்க ஆர்வமா யிருக்கிருர்களாம். 'ஏனைய அகதிகளைப் போலன்றி பர்மாவி லிருந்து வந்துள்ள அகதிகள் நல்ல முறையில் ஒத்துழைக்கிருர்கள்' என்று மந்திரி ஸ்ரீமதி லக்ஷ்மி மேனன் அவர்கள் கூறியுள்ளார். இவர்களில் பெரும்பாலோர் தமிழர்கள் என்பதை எண்ணும்போது, அவர்களின் அகதி நிலைமைக்கு வருந்தும்போதே அவர்க ளுடைய பண்பை நினைத்துப் பெருமையும் அடைகிருேம்.



அகதிகள் பிரச்னையின் மூலத்தைப் பற்றியும் இப்போது நம் சிந்தனை திரும்பு கிறது. பர்மாவிலிருந்து பலர் வந்திருக்கிருர்கள்; இலங்கையிலிருந்தும் பலர் வந்திருக் கிருர்கள். மேலும் பலரை அநியாயமாக வெளியேற்ற அந்நாடு பிடிவாதமாக இருப் பதைப் பார்க்கிருேம். இதேபோல் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலிருந்தும் வேறு வல்லரசு களின் ஆதிக்கங்களிலிருந்தும் விடுபட்டுச் சுதந்திரம் அடைந்த பல நாடுகளில் சிறுபான் மையினர் அகதிகளாக வெளியேற்றப்படுகிருர்கள்; அல்லது அந்தந்த நாடுகளிலேயே பல உரிமைகளை இழந்து, பற்பல விதங்களில் பெரும்பான்மையினரால் அடக்கியொடுக்கப் படுகிருர்கள்.

இந்தப் பிரச்னைக்கு எப்படி விமோசனம் ஏற்படும் என்று குழம்புகிருேம். ஒவ்வொரு சுதந்திர நாடும் பெரும்பான்மை பலத்தால் சிறுபான்மையினருக்கு இழைக் கும் தீமைகளை வேறு நாடுகள் விவாதிப்பதை, 'இது எங்கள் உள்நாட்டுப் பிரச்னை' என்ற பெயரில் ஆட்சேபிக்கின்றன. ஐக்கிய நாடுகள் சபையில் அங்கம் வகிக்கும் தேசங்கள் வேறு ஒரு நாட்டின் சிறுபான்மையினர் நலனுக்காகப் பிரேரணைகள் கொண்டு வரக் கூடத் தயங்குகின்றன. இந்நிலையில் சிறுபான்மையினரை யார் இரட்சிப்பது ?

இப்பிரச்னையில் ராஜாஜி கவனம் செலுத்தி, லண்டன் 'டைம்ஸ்' பத்திரிகையின் மூலம் விடை கூறுகிருர். தற்போது சுதந்திரம் பெற்றுள்ள நாடுகளில் முன்பு ஆதிக்கம் செலுத்திய வல்லரசுகளுக்கு இவ்விஷயத்தில் விசேஷமான பொறுப்பு உண்டு என்பது அவர் கருத்து. உதாரணமாக, பிரிட்டன் பல காலனிகளிலிருந்து வெளி யேறியபின் அங்கெல்லாம் மூண்டிருக்கும் பெரும்பான்மை—சிறுபான்மை பேதத்தைத் தீர்த்து வைப்பதில் பிரிட்டனுக்குப் பிரத்தியேகக் கடமை உண்டு என்று அவர் எடுத்துக் காட்டி யிருக்கிருர். பிரிட்டிஷ் ஆட்சி அளித்த ஊக்கத்தின் பேரில்தான் ஏராளமான இந்தியர்கள் இலங்கைக்கும் பர்மாவுக்கும் ஆப்பிரிக்காவுக்கும் தொழில் புரிவதற்காக வும், வியாபாரம் செய்வதற்காகவும் சென்று குடியேறினர்கள். காலனிகளிலிருந்து வெள்ளையர் வெளியேறியவுடன், முன்பு அங்கு குடியேறியவர்களின் பரம்பரை

பெரும்பான்மையினரால் நசுக்கப்படுகிறது. பல தலைமுறைகளுக்கு முன் பிரிட்டிஷ் ஆட்சியில் அங்கு குடியேறியவர்களின் வமிசாவளியினர் இப்போது உரிமைகளை இழந்து நிற்கிறார்கள்; நாட்டிலிருந்து வெளியேற்றப்படுகிறார்கள். இதற்குப் பிரிட்டன்தானே பொறுப்பேற்க வேண்டும்?

'உள்நாட்டு விஷயம்' என்று கூறப்படும் இந்தப் பிரச்னையில் பிரிட்டன் எப்படிச் செயலாற்ற முடியும் என்பதற்கு ராஜாஜி விடை கண்டிருக்கிறார். பிரிட்டன் நேரடியாகத் தலையிட முடியாது எனினும் ஏனைய நாடுகளைப் போல அதுவும் தயங்காமல், பழைய காலனிகளில் கொடுமைக்கு ஆளாகும் சிறுபான்மையினரின் நலனுக்காக ஐ. நா. சபையில் மனித வாழ்க்கை உரிமைகளையொட்டித் தீர்மானங்கள் கொண்டுவர வேண்டும் என்கிறார். விரோத மனப்பான்மை என்று தோன்றாத வகையில் பக்குவமான முறையில் இத் தீர்மானங்கள் அமைய வேண்டும் என்கிறார்.

இரண்டாவதாக, சிறுபான்மையினர் தங்களின் 'பூர்விக நாடு' என்று சொல்லப்படும் தேசத்துக்கு அகதிகளாக வந்து சேர்ந்தபின் அவர்கள் அங்கு நல்ல முறையில் தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொள்வதற்கு பிரிட்டன் நிதி உதவி செய்ய வேண்டும் என்பது ராஜாஜியின் யோசனை. இது, அகதிகளை ஏற்றுக் கொள்ளும் இந்தியாவுக்கு பிரிட்டன் செய்யும் தானமல்ல. பிரிட்டனின் ஆட்சி நீங்கிய ஒரே காரணத்தால் காலனிகளில் பெரும்பான்மையோரால் இன்னலுற்று நாடு கடத்தப்பட்டவர்களுக்கு பிரிட்டிஷ் ஆட்சி கடமைப்பட்டிருக்கிறது. அந்தக் கடமையைச் செலுத்தவே உதவி செய்ய வேண்டும். நல்ல மாறுதல்கள் செய்யும்போதும் சில தீய எதிர் விளைவுகள் நேரிடத்தான் செய்யும். மாறுதலுக்குக் காரணமானவர்கள் அந்தத் தீய விளைவுகளைச் சீர் செய்ய வேண்டியது அவர்களின் பொறுப்பில் ஒன்றாகும் என்கிறார் ராஜாஜி.

பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் தனது காலனி நாடுகளிலிருந்து நீண்ட காலம் ஏராளமான லாபங்களைப் பெற்றுவந்திருக்கிறது. அதில் ஒரு சிறு பகுதிக்கு ஈடாகவே இப்போது அது அகதிகளின் புனரமைப்புக்கு நிதி உதவி அளிக்க வேண்டும்.

தனது ஆதிக்கத்துக்குட்பட்டிருந்த நாடுகளுக்குச் சுதந்திரமளித்து, அவற்றிலிருந்து வெளியேறிய பின்னும் அந்நாடுகள் குறித்துத் தனக்குப் பொறுப்பு உண்டு என்ற அறம் சார்ந்த இந்த யோசனைக்கு பிரிட்டன் இணங்குமானால், காலனிகளுக்குச் சுதந்திரம் அளித்ததன் மூலம் அது பெற்றுள்ள பெரும் புகழ் மேலும் ஓங்கி வளரும்.



தற்போது சுதந்திர மடைந்துள்ள பழைய காலனிகளைக் குறித்து பிரிட்டனுக்கு உள்ள பொறுப்பைப் போலவே, சிறிய நாடுகள் யாவற்றைக் குறித்துமே எல்லா வல்லரசுகளுக்கும் சில பொறுப்புக்கள் உள்ளன. இவற்றை 'ஸ்வராஜ்யா'வில் ராஜாஜி விளக்கியிருக்கிறார். கடந்த இருபதாண்டுகளில் வல்லரசுகளிடையே நேரடியான ராணுவ மோதல்கள் இல்லை. ஆனால் உலகமெங்கிலும் சிறு நாடுகளிடையே ஓயாத பூசலாக உள்ளது. சிறு நாடுகளுக்குள் சற்றுக் கையோங்கியுள்ள ஒருசில, துர்ப்பலமான மற்ற நாடுகளை ஆக்கிரமிப்பது சர்வ சகஜமாகிவிட்டது. இதுபோன்ற சந்தர்ப்பத்தில் ஆக்கிரமிப்புக்கு ஆளான நாடுகளுக்கு வல்லரசுகள் உதவ வேண்டிய பொறுப்புப் பெற்றுள்ளன என்கிறார் ராஜாஜி. வல்லரசுகள் தங்களோடு ராணுவ ஒப்பந்தம் செய்துகொள்ளாத பிற நாடுகள் விஷயத்தில் இப்போது உதாசீனமாகவே இருப்பதுதான் ஆக்கிரமிப்புக்கு இடமளிக்கிறது. ஆனால் தனித் தனியாக வல்லரசுகள் செயல்படும் போது பட்சபாதங்கள் ஏற்படக்கூடும். எனவே, ஐ. நா. சபை இப்பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு உரிய முறையில் சக்திவாய்ந்த உலக மகா ஸ்தாபனமாகப் பலம் பெற வேண்டும். அப்படிப் பலப்படுத்துவது வல்லரசுகளின் பொறுப்பாகும்.

# "பதுக்கல் பணம்"

பம்பாயில் சில சினிமா நடிக—நடிகையர் பதுக்கி வைத்திருந்ததாகக் கருதப்படும் தொகைகளைச் சர்க்கார் கைப்பற்றியுள்ளது. நடிகக் கலைஞர்கள் மக்கள் வாழ்வின் ஒரு தேவையைப் பூர்த்தி செய்த போதிலும், கலை என்ற பெயரில் சமூகத்தில் பலவிதமான ஒழுங்கீனங்கள் பரவவும் ஓரளவு காரணமாக இருந்திருக்கிறார்கள். அந்த ஒழுங்கீனங்களைக் கண்டித்து நடவடிக்கை எடுக்க இன்று யாருக்கும் அதிகாரமில்லை. கள்ளப் பணமாகக் கருதப்படுவ

தைப் பறிமுதல் செய்யும் அதிகாரம் ஒன்றுதான் இன்று சர்க்காருக்கு இருப்பதாகத் தெரிகிறது. கலைக்கு உரிய நியாயமான ஆதரவையோ, போற்றுதலையோ மட்டுமின்றி, அர்த்தமற்ற பக்தியைப் பெற்றுள்ள நடிக—நடிகையர்களும் மற்ற சாமானிய மானுடர்களைப் போன்றவர்களே என்று மக்கள் தெரிந்து கொண்டு, மோக பாசத்திலிருந்து விடுபடச் சர்க்காரின் நடவடிக்கை உதவக் கூடும்.

பாட்டாளி மக்களுக்காகப் பரிந்து பரிந்து வசனங்களைப் பொழிகிற நடிக-நடிகையர் சம்பாதிக்கும் லட்சக்கணக்கான ரூபாய்கள் ஏழை மக்கள் டிக்கட்டுக்குத் தருகிற சிறு சிறு தொகையில்தான் உருவாகின்றன. சினிமாவின் மூலம் நாட்டில் நற்பண்புகளைப் பரப்ப முடியுமோ முடியாதோ, 'பொழுது போக்கு' என்ற பெயரிலேயே இத்தொழிலை ஆதரித்து, சினிமாக் கலைஞர்கள் பெறும் உயர்ந்த சம்மானங்களை யாரும் ஆட்சேபிக்க முடியாதிருந்தது. ஆனாலும் நடிக நடிகையர் மனச்சாட்சியுடன் நடந்து கொண்டு உரிய வரிகளைச் செலுத்தியிருந்தால் அது ஓரளவு மக்கள் நலனுக்குப் பயனுகியிருக்கும். அவர்கள் இவ்வாறு செய்வதில்லை என்று பல நாட்களாகவே பேசப்பட்டு வந்திருக்கிறது. பம்பாயில் பிடிபட்ட ஒரு சிலரைப் பற்றிமட்டுமின்றி மற்றும் பலரைக் குறித்தும் இப்படி ஒரு பகிரங்க ரகசியம் உள்ளது.

இதெல்லாம் ஒருபுறம் இருந்தாலும் சர்க்கார் நடவடிக்கையின் இன்னொரு புறத்தையும் நாம் கவனிக்க வேண்டும். சர்க்காரின் சிக்கலான வரிமுறைகள், அர்த்தமற்ற சட்டதிட்டங்கள் இவை காரணமாக, சம்பாதித்த பணத்தை பாங்கிகளில் போட்டு வைக்காமல் சிலர் வீட்டில் வைத்திருப்பதாக வைத்துக் கொள்வோம். பணம் சம்பாதித்ததோ, பாங்கியில் போடாமல் வீட்டில் வைத்திருந்ததோ குற்றம் என்று சொல்லி விடலாமா? வருமான வரி இலாகா, போலீஸ் இலாகா அதிகாரிகளால் பாங்கியில் போடப்படாத பணம் கண்டுபிடிக்கப்பட்டு விட்டதால், முகாந்திரங்கள் பூரணமாக நிரூபணமாகும் வரையில் அப்பணம் இருட்டுப் பணம் என்று முடிவு கட்டிவிடலாகாது. வருமான வரி இலாகாவுக்குக் காட்டப்படாத வருமானம் என்று தெரிந்தால் வருமான வரி இலாகா தனக்குரிய வரிப் பணத்தையும் அபராதத்தையும் எடுத்துக்கொள்ளலாமே தவிர முழுத் தொகையையும் சர்க்காருடையது என்று ஆர்ஜிதம் செய்யுமானால் அது சர்வாதிகாரப் போக்கே யாகும். யாரையும் சந்தேகிக்கலாம், யார் வீட்டில் வேண்டுமானாலும் அதிகாரிகள் புகுந்து சோதனை செய்யலாம் என்று நேரிட்டால் வாழ்க்கையின் கௌரவம் நாசமாகிவிடும்.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு காங்கிரஸ் அக்ராசனராக இருந்த ஸ்ரீ டி. சஞ்சீவய்யா, 'நேற்றுவரை பரம ஏழைகளாக இருந்த காங்கிரஸ்காரர்கள் எல்லாம் இன்று லட்சாதிபதிகளாகவும் கோடீசுவரர்களாகவும் ஆகிவிட்டார்கள்' என்று வெளிப்படையாகக் கூறினர். அவர்கள் மேல் காங்கிரஸ் ஸ்தாபனமோ சர்க்காரோ இதுவரை போதிய நடவடிக்கை எடுத்துக்கொள்ளவில்லை. குற்றவாளி என்று கருதப்பட்ட கெய்ரோன் மீதுகூட சர்க்கார் எந்த வித நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளவில்லை. இனியேனும் எடுத்துக்கொள்ளப்படுமா என்பதே சினிமாக் கலைஞர்களின் சோதனைக்குப் பின் நாடு முழுவதும் வினவப்படும் கேள்வி.

# சதாசாரம் தேய்கிறது!

ஸ்ரீமதி இந்திரா காந்தி அவர்கள் லஞ்ச ஊழலைப் பெரிதுபடுத்தலாகாதெனக் கூறியிருப்பதை அடுத்து, பல காங்கிரஸ்காரர்கள் அதே ரீதியில் பேசத் தலைப்பட்டிருக்கிருர்கள். ஊழல்களை விளம்பரப்படுத்துவதால் நாட்டின் அரசியல் வாழ்வு மாசுபடும், ஜனநாயக அமைப்பு பலம் குன்றும் என்று அவர்கள் சொல்கிருர்கள்.

உண்மையில் ஜனநாயகத்தைப் பற்றியோ நாட்டின் அரசியல் வாழ்வைப் பற்றியோ அவர்களுக்குக் கவலையில்லை. கட்சியின் பெயர் கெட்டுவிடுமே என்பதொன்றுதான் அவர்கள் கவலை.

இதனுல்தான் சதாசார சமிதியை ஆதரிக்கவும் அவர்கள் தயங்குகிருர்கள். காங்கிரஸ் செயல் கமிட்டிக் கூட்டத்தில் சிலர் சமிதியின் செயல் முறையைப் பற்றிச் சந்தேகம் தெரிவித்ததாகக் கூறப்படுகிறது. உண்மையாகவே, சமிதிக்கு அனுப்பப்பட்டுள்ள மூவாயிரத்துக்கு மேற்பட்ட குற்றச்சாட்டுகளில் சுமார் ஐம்பதைத்தான் அதனுல் விசாரிக்க முடிந்திருக்கிறது. இவற்றை

யும் உரிய நடவடிக்கைக்காக அரசாங்கத்துக்குத்தான் அனுப்ப வேண்டும். அப்படியானால் உள்துறை மந்திரி காரியாலயம் என்று ஒன்று இருக்கும்போது இந்தச் சமிதி எதற்கு என்ற நியாயமான கேள்வி எழுகிறது.

காங்கிரஸுக்கு நல்ல பெயர் வாங்கித் தருவதற்குத்தான் சதாசார சமிதி இருக்கிறது. ''இது அரசியல் சார்புள்ளதல்ல; கட்சிச் சார்புள்ளதுமல்ல'' என்று ஸ்ரீ நந்தா கூறினாலும் இச்சமிதி கட்சி முன்னேற்றத்துக்காக ஏற்பட்டதுதான். 'சமுதாய அபிவிருத்தித் திட்டம்', 'பஞ்சாயத்து ராஜ்யம்', 'ஐந்தாண்டுத் திட்டம்' இவை போலக் காங்கிரஸின் கிளையாகவே சமிதி கருதப்படும். காமராஜ் திட்டம் காங்கிரஸின் 'தியாக சீலத்தை'ப் பிரகடனப் படுத்தி விட்டு அல்பாயுளில் மரணம் அடைந்தது போல், சதாசார சமிதி காங்கிரஸின் 'தூய்மை'யைச் சிறிது காலம் விளம்பரப்படுத்தி விட்டு மறைந்து போகும்!

# என்ன சேதி?

### நிதி வசூல்

காங்கிரஸ் அக்கிராசனர் திரு காமராஜ் பஞ்சாப் ராஜ்யத்தில் சுற்றுப் பிரயாணம் செய்யப் போகிறார் என்றும், அப்போது ஒரு லட்ச ரூபாய் நிதி வசூலித்துக் கொடுக்கப் போகிறார்கள் என்றும் செய்தி வெளியாகி யிருக்கிறது. இரண்டு ஆண்டுகள் கழித்து வரும் தேர்தலுக்குக் காங்கிரஸ் இப்போதிருந்தே நிதி திரட்டத் தொடங்கி விட்டது. எதிர்க்கட்சிகள் நிதி உதவி பெறாதவாறு, பதவியிலிருக்கும் காங்கிரஸ் முந்திக் கொள்ளப் பார்க்கிறது. பெர்மிட்டும், லைசென்ஸும் வைத்திருக்கும் ஆட்சியாளரும், வருமான வரி விற்பனை வரி இவற்றைக் கொண்டு கெடுபிடி செய்யச் சக்தி பெற்றுள்ள தலைவர்களும் இப்போது பிடித்தே தொழில் — வர்த்தகத் துறையை அணுகினால் காங்கிரஸ் கஜானாவுக்கு வானமே வரம்பாகும். எதிர்க் கட்சிகளுக்குத் தற்போது கிடைக்கும் சொற்ப நிதி உதவியும் குன்றிப்போகும். காங்கிரஸ் கட்சிக்கு உதவினால் வருமான வரி, விற்பனை வரி கெடுபிடிகளிலிருந்து தப்பலாம் என்று தொழில் துறையினர் நினைப்பது நியாயமே. இப்படி எண்ணித்தான் பம்பாய் சினிமா அதிபர்களும் நடிகர்களும் ஸ்ரீ வி. கே. கிருஷ்ண மேனனுக்குச் சென்ற தேர்தலில் உதவினார்கள். அவர்களுடைய நிலை இன்று எப்படி ஆயிற்று என்பதை வர்த்தக சமூகத்தினர் நினைத்துப் பார்த்து எச்சரிக்கையாக இருக்க வேண்டும்!

### பிரதமரைப் பாராட்டுகிறோம்

பிரதமர் லால்பகாதுரின் பிறந்த நாளின்போது ஒரு நினைவு மலர் வெளியிடப் போவதாக ஒரு குழு அறிவித்திருந்தது. அத்தகைய நினைவு மலர் வேண்டாம் என்று கண்டிப்பான முறையில் பிரதமர் லால்பகாதுர் ஓர் அறிக்கை வெளியிட்டிருக்கிறார். இது பிரதமரின் அடக்கத்தையும் உயரிய பண்பையும் காட்டுகிறது. பதவியிலிருப்பவர்களைப் பொய்யாகப் புகழ்ந்து நாத்தழும்பேறினவர்களுக்குக் கோபமாகக்கூட இருக்கும்!

லால் பகாதுர் அவர்கள் மற்றொரு நல்ல காரியமும் செய்திருக்கிறார். ''தயவுசெய்து என் மனைவியைப் பொது மேடைகளுக்கும் பொது நிகழ்ச்சிகளுக்கும் அழைக்காதீர்கள்! அவளுக்கு வீட்டிலேயே ஏராளமான வேலை இருக்கிறது!'' என்று கூறியிருக்கிறார். 'முன்னேற்றம்' 'நவநாகரிகம்' என்றெண்ணி உண்மையான பாரத நாகரிகத்தையும் பண்பையும் சமீப காலமாக இந்தியப் பெண்கள் இழந்து வருகின்றனர். பற்பல வீடுகளின் தனி வாழ்க்கைகள் ஒன்று சேர்ந்துதான் நாட்டின் வாழ்க்கை உருவாக வேண்டும். வீட்டை நல்ல முறையில் கவனித்து அங்கு அன்பும் பண்பும் பெருகச்செய்வதாலேயே பாரதப் பெண் மனைவி என்றும் இல்லாள் என்றும் கிருகலக்ஷ்மி என்றும் விசேஷமாகப் போற்றப் படுகிறாள். சமூக வாழ்வில் பெண்கள் செலுத்தும் கவனம் வீட்டு வாழ்க்கையைப் பாதிக்க விடக்கூடாது. இதைப் பெண்குலம் அறிய வேண்டிய தற்சமயத்தில் பிரதமரின் மனைவி பாரதப் பெண்ணின் பண்பை வாழ்ந்து காட்ட முன் வந்திருப்பதும், அதனைப் பிரதமர் பெரு மகிழ்ச்சியுடன் அங்கீகரித்திருப்பதும் மனத்துக்குப் பெரும் ஆறுதல் அளிக்கின்றன.

### நாடு முழுதும் சிறைச்சாலையா?

தெருக்கள் தோறும் அரிசி எடுத்துச் சென்று விற்பனை செய்வது தஞ்சை மாவட்டத்தில் ஒரு சாமானிய நிகழ்ச்சி. இது நிகழ்கால அரசாங்க 'நீதி' முறை

யில் ஒரு குற்றமாகிவிட்டது! தெருவோடு எடுத்துச் சென்று விற்கும் சிறு வியாபாரிகள் சர்க்காரின் நிர்ணய விலைக்குத்தான் விற்பார்கள் என்று ஊர்ஜிதம் செய்ய முடியாதல்லவா? இது தான் அவர்கள் செய்யும் 'குற்றம்'.

சின்னஞ் சிறு நில உடைமைகளில் பயிர் செய்பவர்கள் தங்களின் சொந்தத் தேவைக்குப் பயனுனது போக மிஞ்சும் சிறு அளவு தானியங்களை நேரடியாக வீட்டுக்கு விடு விற்பனை செய்வது கிராமப்புறங்களில் நீண்ட நாளைய வழக்கம். இவ்வாறு சிறு நிலச் சொந்தக்காரர்களிடம் மீதமுள்ள தானியங்கள் வெளி வருவதைத் தடுக்கும் அவிவேகத்தைத்தான் இப்போது சர்க்கார் செய்திருக்கிறது. பகுத்தறிவுக்கு முதலிடம் தந்து வீம்புக் கொள்கையை விலக்குவதே நேர்மையான நிர்வாகம்.

தெருவில் அரிசி வியாபாரம் செய்பவர்கள் அதன் வழியே தங்கள் வாழ்வையே நடத்த வியாபாரம் செய்பவர்கள். அவர்கள் கணக்குப் புத்தகங்களுடனும், அதிகாரிகளுடனும் ஈடு கொடுக்கத் தெரியாத எளிய மக்கள். அவர்களை இம்சை செய்வதும், இனித் தலைமறைவாகத் திருடர்கள் போல வியாபாரம் செய்யத் தூண்டுவதும் பாபம். ஆட்சியாளர்கள் மனிதாபிமானம் என்பதை அறவே களைந்து விட்டு மூர்க்கத்தனமாகக் கட்டுத்திட்டம் செய்யத் தலைப்பட்டால் நாடு முழுதும் சிறைச்சாலையாக வேண்டியதுதான்.

## சந்தர்ப்ப வாதம்!

ஒருவனுடைய தாடி பற்றி எரியும் போது அதில் கடலைக்காய் சுட்டுக் கொள்ளச் 'சந்தர்ப்பவாதி' ஒருவன் முயன்றதாகக் கதை. அதே ரீதியில் நாட்டு மக்கள் யாவரும் விலைவாசி உயர்வில் அவதியுறும்போது காங்கிரஸ்காரர்களும் கம்யூனிஸ்ட் கட்சிக்காரர்களும் இந்தச் சூழ்நிலையைப் பயன் படுத்திக் கொண்டே தங்கள் பலத்தைப் பெருக்கிக்கொள்ள முயல்கிறார்கள்.

கொள்கையளவில் காங்கிரஸும் கம்யூனிஸ்ட் கட்சியும் ஒரே சந்நிதானத்தில் வழிபடுபவைதான். எனவே கம்யூனிஸ்டுகளால் காங்கிரஸின் உணவுக் கொள்கையை எதிர்க்க முடியவில்லை. இதனால்தான் கிளர்ச்சிகளும் ஆர்ப்பாட்டங்களும் செய்தே விலையைக் குறைக்க அவர்கள் மகத்தான யத்தனம் செய்கிறார்கள்! கம்யூனிஸ்ட் கட்சி இழந்துள்ள செல்வாக்கை மீண்டும் பெறுவதற்காகச் செய்யும் தந்திரம் தான் இந்தக் கிளர்ச்சி.

காங்கிரஸ் கட்சி வேறொரு வழியைப் பின்பற்றுகிறது. அடக்குமுறை பயங்கரத்தின்மூலம் விலையைக் குறைக்க முயல்வதாகக் காட்டி, முதலாளிகளைக் கொடுமைப்படுத்தி மக்களை வசியம் செய்வதே அதன் உபாயம். பயங்கர ஆட்சி நடத்துவதால் வியாபாரம் நசிக்கும்; பற்றாக்குறைகள் மேலும் அதிகமாகும்.

ஊதாரித் திட்டங்கள், நில உடைமைப் பறிமுதல் சட்டங்கள், பண வீக்கம், கூட்டுச் சேராத அந்நியக் கொள்கை இவற்றைக் கைவிட்டால் தான் விலைவாசிகள் தாமாகவே இறங்கும். வேறு முறைகளால் பயன் கிட்டாது.

## மாணவர்களுக்குச் சபாஷ்!

தமிழ் மொழியிடம் நமக்குள்ள பற்றையும் பக்தியையும் வார்த்தைகளில் வெளியிட வேண்டிய அவசியம் இல்லை. என்றாலும் மொழிப் பற்று என்ற பெயரில் மனப்பான்மை குறுகி விடுவதை நாம் ஒரு நாளும் ஒப்ப முடிந்ததில்லை. இதனால்தான் 'கல்லூரிகளில் ஆங்கில போதனை கூடாது. தமிழ் போதனையே வேண்டும்' என்று கிளர்ச்சி செய்தவர்களை நாம் ஆதரிக்க முடியவில்லை. 'தமிழில் மட்டும் கற்றவர்கள் தமிழகத்தை விட்டு வேறெங்கும் வாழ இயலாதே; அன்புக்குகந்த தாய்மொழியின் பெயரால் மாணவர்களைக் கவர்ந்திழுக்கிறார்களே!' என்று வருந்தினோம். நம் மாணவ சமுதாயத்தின் புத்திசாலித்தனத்தைப் பின்னர் கண்டு மகிழ்ச்சியுற்றோம். தாய் மொழியிடம் நல்ல பற்றுள்ள நமது இளைஞர்கள் தாய்மொழிக் கல்வியால் அகில பாரதத்திலும் தங்களுக்குள்ள வாய்ப்புக்கள் குன்றுவதை உணர்ந்து, தமிழ் போதனை முறைக்கு ஆதரவைக் குறைத்துக் கொண்டார்கள்.

துரதிருஷ்டவசமாக, முன்பு 'தாய் மொழிப் போதனை' என்று கிளர்ச்சி செய்தவர்கள் இப்போது மீண்டும்தீவிரம் அடைந்திருக்கிறார்கள். இச்சமயத்தில் தான், சென்னைப் பல்கலைக் கழகத்தின் பட்டமளிப்பு விழாவுக்குத் தலைமை தாங்கிய ஸ்ரீ ஸி. டி. தேஷ்முக் அவர்கள் நம் மாணவர் சமுதாயத்தின் விவேகத்தைப் பாராட்டி யிருக்கிறார். தங்களுடைய பகுத்தறிவுக்குப் பொருந்திய முடிவில் இளைஞர்கள் உறுதியாக நிற்க ஸ்ரீ தேஷ்முக் அவர்களின் பாராட்டு துணை செய்யும் என்று நம்புகிறோம்.

# வளரும் விஞ்ஞானம்

குறைப் பிரசவம் ஏற்பட்டால் முன்பெல்லாம் அந்தக் குழந்தை பிழைப்பதே அரிது. ஆனால் இன்று மூன்று மாதங்கள் முன்னதாகப் பிறந்த குழந்தையானாலும் அதனைச் செயற்கைக் கர்ப்பப் பைக்குள் வைத்துக் காப்பாற்றுகிறார்கள். (படம்) இந்தக் கண்ணாடிப் பெட்டியினுள்ளே தாயின் கர்ப்பப் பைக்குள் சிசு அநுபவிக்கக் கூடிய அதே வெப்ப நிலை இருக்கும். பாலை உறிஞ்சிக் குடிக்கக் குழந்தைக்குத் தெரியாது என்பதால் அதன் இரைப்பை வரை ஒரு மெல்லிய ரப்பர்க் குழாயைச் செலுத்தி அதன் மூலம் தாய்ப்பாலைப் புகட்டுகிறார்கள். குழந்தை மீது கைபடாமல் அதனை மென்மையான பஞ்சு கொண்டு சுத்தம் செய்வார்கள். எடை பார்ப்பார்கள். அதன் உடல் உஷ்ணத்தை ஒரு நாளைக்கு எட்டு தடவை சரி பார்த்துக் குறித்துக் கொள்வார்கள். இருதயத் துடிப்பைக் கூட டெலிவிஷன் திரையில் கண்டு சரியாக உள்ளது என்று டாக்டர்கள் திருப்திப்பட்டுக் கொள்ளலாம். இத்தனைக்கும் சிசுவைச் செயற்கைக் கர்ப்பப் பையை விட்டு வெளியே எடுக்கவே வேண்டாம்! பன்னிரண்டு குழந்தைகள் பிறந்தால் அவற்றில் ஒன்று குறைப் பிரசவத்தில் பிறந்ததாக உள்ள மேற்கு ஜெர்மனியில், இந்த நவீன சாதனத்தைப் பெருமளவுக்குப் பயன்படுத்தி அதன்மூலம் சிசு மரணங்கள் அதிகரிக்காமல் பாதுகாக்கிறார்கள்.



ஃ ஃ ஃ

சந்திரனை எட்டிப் பிடிப்பதிலும் மக்களுக்கு உதவ நவீன சாதனங்களைக் கண்டு பிடிப்பதிலும் விஞ்ஞானம் வளர்ந்து கொண்டே போகையில் மற்றொரு பக்கத்தில் தொல் பொருள்களை ஆராய்ச்சி செய்யும் விஞ்ஞானிகளும் பின்னோக்கி முன்னேறிக் கொண்டுதான் இருக்கிறார்கள்! சமீபத்தில் ஹங்கேரி தேசத்தைச் சேர்ந்த ஒரு விஞ்ஞானி தம் நாட்டில் வாழ்ந்த சரித்திர காலத்துக்கும் முற்பட்ட ஒரு பிராணியின் அடிச்சுவட்டைக் கண்டுபிடித்து உலகப் புகழ் பெற்றார்! இந்தப் பிராணி இருபது கோடி வருஷங்களுக்கு முன் ஹங்கேரியில் வாழ்ந்தது என்கிறார் மேஜரோஸ். இவர் கண்டுபிடித்த அடிச்சுவடுகள் ஆறு முதல் எட்டு சென்டிமீட்டர் வரை நீளமுள்ளவையாக, பூமி மட்டத்தின் பல்லாயிரக் கணக்கான வருஷ அழுத்தம் காரணமாகப் பாறைகளில் அப்படியே பதிவாகி யிருந்தன. ஊர்ந்து செல்லும் வர்க்கத்தைச் சேர்ந்த இந்தப் பிராணிகள் ஒரு மீட்டர் நீளமுள்ளவையாக விளங்கினவாம்!

ஃ ஃ ஃ

பிராணிகளைப் பற்றி எண்ணும்போது தற்காலத்தில் நம்முடன் வாழும் ஜந்துக்கள் மிருகங்கள் இவற்றைக் குறித்து விஞ்ஞானிகள் எத்தனை விஷயங்களை அறிந்து வைத்திருக்கின்றனர் என்பதைப் பார்த்தால் பிரமிப்பாக இருக்கிறது. 'சிலந்தி மிகவும் அறிவுள்ள ஜந்து! வலையை அசைப்பதே அது பேசும் பாஷை!' என்கிறார் டிரக்ஸல் என்கிற ஜெர்மானிய உயிரியல் நிபுணர். சில பிராணிகள் தான் ஈன்ற குட்டியையே தின்று விடுவதுபோல் சிலந்தி செய்வதில்லை. தன் குஞ்சுகளை அது மிகுந்த தாயன்புடன் பாதுகாக்கிறது. தான் பின்னும் வலையில் இன்னொரு சிலந்தி சிக்கிக்கொண்டால் அதை அது தின்பதில்லை. தன் குஞ்சுகளுக்கு அபாயம் வருவதை உணர்த்தவும் வலையில் உணவு சிக்கிக்கொண்டிருப்பதை உணர்த்தவும் வலையை விதம் விதமான முறைகளில் சிலந்தி அசைக்கிறது!

ஃ ஃ ஃ

சமீபத்திய 'டைம்' பத்திரிகையில் வெளியாகி யிருக்கும் ஒரு விவரம் மிகவும் ஆச்சரியமளிப்பதாய் உள்ளது. பசுக்களுக்குச் செயற்கைக் கருத்தரிப்பு முறை நடைமுறையில் இருந்து வருகிறது அல்லவா? ஆனால் கன்று காளையாக இருக்குமா, மோழையாக இருக்குமா என்பதை முன்கூட்டியே நிர்ணயிக்க முடியுமா? 'முடியும்' என்று நிரூபித்திருக்கிறார் பாய்ராப் சந்திர பட்டாச்சாரியா என்கிற மிருக சாஸ்திர நிபுணர். செயற்கைக் கருத்தரிப்புக்குப் பயன்படும் விந்துவில் பசுங் கன்றை உருவாக்கும் உயிரணுக்கள் கனம் மிகுந்தவையாகையால் கீழே படிந்து விடுகின்றன என்றும், காளைக் கன்றை உருவாக்கும் உயிரணுக்கள் ஒப்புநோக்குகையில் லேசாக இருப்பதால் மேலே மிதக்கின்றனவென்றும் கண்டுபிடித்தார். இதன் பிறகு இவர் ஜெர்மனிக்குச் சென்று செய்த ஆராய்ச்சிகள் இவரது இந்த முடிவு சரியே என்று உறுதிப்படுத்தின. பெரிய பால் பண்ணைகளில் காளைக் கன்றுகளை விடப் பசுங் கன்றுகளுக்கு அதிகத் தேவையும் மதிப்பும் இருக்குமல்லவா? இதற்குப் பட்டாச்சாரியாவின் ஆராய்ச்சி பேருதவி புரியும்!

## ஐந்தாம் அத்தியாயம்

# நடு வழியில்

கயல் விழி

அகிலன்

கொடுங்குன்றத்தை விட்டு அவர்கள் புறப்பட்டுத் தென் பாண்டிப் பகுதியில் சுற்றிவரத் திட்டமிட்டார்கள். பிரயாணத்துக்கு வேண்டிய முன்னேற்பாடுகள் சுறுசுறுப்பாக நடந்தன. கயல் விழியின் தந்தை ஆதிச்சதேவர் கலைக் குழுவைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். ஏற்கனவே அதில் பழுத்த அநுபவம் பெற்றவர் அவர்.

பைந்தமிழ்க் குமரனுக்குப் புலவர்களிடம் வேலை இருந்தது. தவிரவும் தனிமையில் அடிக்கடி அவன் விழுப்பரையருடன் ஆலோசனைகள் செய்து வந்தான். அவனுடன் அவர் இனிமேல் உடன் இருக்க முடியாதென்பதால், அவனுக்கு இரகசியமாகச் சில செய்திகளைக் கூறினர்.

''இளவரசே! தாங்கள் பாண்டிய மண்டலத்தைச் சுற்றி வரும் போது மிகவும் விழிப்போடு இருக்க வேண்டும். போருக்கு முன்பாகவே பொது மக்களில் பலருக்குத் தங்களை நேரில் தெரியாது என்பதால், இப்போதும் அவர்களால் தங்களை இனம் கண்டு கொள்ள முடியாது. அது நமக்கு ஒருபாதுகாப்பு. ஆனால், முன்பு தங்களோடு நெருங்கிப் பழகியவர்கள் யாரும் இப்போது நெருங்கிப் பழகினால் எப்படியும் கண்டுபிடித்து விடுவர்.''

''கூடிய வரையில் விழிப்போடுதான் இருக்கிறேன்.''

''அரங்கத்தில் தோன்றித் தாங்கள் அடிக்கடி பலர் கண்களில் படாமல் இருந்தால்கூட நல்லதுதான். கூத்திலும் தாங்கள் நடிக்க வேண்டும் என்பதில்லை. செய்வதைப் பிறர் அறியாதவாறு செய்ய முயலுங்கள்.''

''கூத்தில் இனி நான் இப்போதைக்குத் தோன்றப் போவதில்லை. ஆனால் புலவர் கூட்டங்களில் மறைந்திருந்து எதையும் செய்ய முடியாது. என்றாலும் எச்சரிக்கையாக இருக்கிறேன்.''

''திருவிழாவின் போதுகூட சந்தேகத்துக்கிடமான வகையில் யாரோ இருவர் கூட்டத்துக்கிடையில் நடமாடியதைக் கண்ணுற்றேன். அது போன்ற சமயங்களில் திருடர்களும் நடமாடக் கூடும். ஆனால் வந்த இருவரும் திருட வந்தவர்களாகத் தோன்றவில்லை. கூட்டத்தைத் தள்ளிக் கொண்டு அரங்கத்துக்கு அருகில் நெருக்கமாக அவர்கள் வரப்பார்த்தார்கள். நான் அவர்களைத் தடுத்துத் தொலைவுக்குச் செல்ல ஏற்பாடு செய்தேன்.''

''ஒற்றர்களாக இருக்குமோ?''

''இருக்கலாம்'' என்று சொல்லிவிட்டுச் சிறிது நேரம் மௌனமாக இருந்தார் விழுப்பரையர். பிறகு மேலே பேசினர். ''இப்போதைக்கு நம்முடைய பெரிய பாண்டியரிடம் ஆட்சிப் பொறுப்பைக் கொடுத்து விட்டுக் குலோத்துங்கர் போயிருக்கிறார். ஆனால் பழையபடி



சயங்கொண்ட சோழ வல்லபரே இங்கு அமைச்சராக இருக்க வேண்டுமென்ற பிடியை மட்டும் அவர் விட்டுவிடவில்லை. சயங்கொண்ட சோழ வல்லபருடைய பழைய பொறுப்பான ஒற்றர்களையெல்லாம் நாம் இந்தப் போரில் ஒழித்துக் கட்டி விட்டோம். இதனால் இப்போது சயங்கொண்ட சோழ வல்லபர் [முன்னிலும் பன்மடங்கு வஞ்சங் கொண்டிருப்பார். ஆனால் எதையும் வெளியில் காட்டிக் கொள்ளாமல் மறைவாகச் செய்யக் கூடியவர் அவர். அவருடைய புதிய ஒற்றர்களால் தங்களை எளிதில் கண்டுபிடிக்க முடியாது என்றாலும், அவருக்கு இதுபோன்ற நிகழ்ச்சிகள் இங்கு நடைபெறுவதைக் கூடப் பொறுக்க முடியாது.''

''நம்முடைய அரசருக்குமே தெரியாமல் நான் வாழ வேண்டிய நிலை வந்திருக்கிறது. தாங்கள்தாம் பாண்டியரை அருகிலிருந்து பார்த்துக் கொள்ள வேண்டும். அவருடைய மன வேதனை எவ்வாறு இருக்கும் [என்று நினைக்கும் போதுதான் என்னால் தாங்க முடியவில்லை'' என்று கலங்கிய குரலில் கூறினான் இளவரசன்.

''அவருடைய கவலையை நான் மாற்ற முயல்கிறேன். செய்திகள் அனுப்ப வேண்டுமென்றால் அம்பலக் கூத்தன் இருக்கிறான். நானும் அவ்வப்போது வந்து தங்களைச் சந்திக்கிறேன்.''

விழுப்பரையர் தம்முடைய உயிரை விட்டுப் பிரிவதுபோல் அவனிடம் விடை பெற்றுக் கொண்டார். கொடுங்குன் றம் நகரத்தை விட்டுப் புலவர் படை யும் கலைஞர் படையும் புறப்பட்டு விட்டன. நகரத்துப் பெருமக்கள் அவர் களுக்கு வண்டிகளையும் மாடுகளையும் குதிரைகளையும் வழங்கி யிருந்தார்கள். குதிரைகளில் செல்பவர்கள் முன்னதாக விரைந்து சென்று, தொடர்ந்து வருவோ ருக்கு வேண்டிய வசதிகளைக் கவனிக்க வேண்டும் என்று ஏற்பாடாகி யிருந்தது.

நான்கு பெரிய கூண்டு வண்டிகள் ஒன்றாகப் புறப்பட்டன. முதல் வண்டி யில் கயல்விழியின் கலைத் துறைத் தோழிகள் இருந்தார்கள். அடுத்த வண்டியில் கயல்விழி, ஆதிச்ச தேவர், உய்யவந்தான் ஆகியோர் இருந்தனர். கயல்விழி விழுப்பரையரிடமும் திரு உடைத் தேவியாரிடமும் அநுமதி பெற்று உய்யவந்தானைத் தன்னோடு அழைத்துக் கொண்டாள். மூன்றாவது வண்டியில் இசைக் கருவிகளைக் கொண்டு பல்லியம் முழங்குவோரும், கடைசி வண்டியில் புலவர்களும் இருந்தார்கள்.

புலவர்களின் வண்டிக்குள் ஏதோ பூகம்பம் நடப்பது போல் சத்தம் கேட் டது. அவர்கள் ஒருவருக்கொருவர் தமது குரல்களை உயர்த்திச் சொற்போர் புரிந்து கொண்டு வந்தார்கள். நக்கீரர் பரம்பரையல்லவா! சிறிதும் விட்டுக் கொடுக்காமல் முன்னேறிச் சொற்களால் தாக்குதல் புரிந்தார்கள். பைந்தமிழ்க் குமரன் போரில் கலந்து கொள்ளாமல், வாயை மூடிக் கொண்டு செவிகளைத் திறந்து கொண்டு கூர்ந்து கவனித்து வந்தான். கருத்துக்களில் தெளிந்த வற்றைத் தனக்குள்ளே மௌனமாகப் பத்திரப்படுத்திக் கொண்டான்.

அவர்களுக்கு உணவோ, உடையோ, உறைவிடமோ ஒரு பொருட்டல்ல. ஆனால் அவர்களால் சொற்போர் நடத் தாமல் மட்டிலும் இருக்க முடியாது!

கயல்விழியின் வண்டியில் வந்த ஆதிச்சதேவருக்கு அங்கே இருப்புக் கொள்ள வில்லை. புலவர்களுக்கு மத்தி யில் குதித்துத் தம்முடைய கைவரிசை களைக் காட்டத் துடித்தார் அவர். பேசும் போது அவர் சிரிக்க மாட்டார். ஆனால் மற்றவர்களைச் சிரிக்க வைப்பார்.

''பார், பார்! ஏட்டுச் சுவடிகளைக் கரைத்துக் குடித்து விட்டு எப்படி மோதிக் கொள்கிறார்கள், பார்! ஒவ் வொருவருக்கும் தாமே அதிகம் கற்றவர் என்று எண்ணம். அதை நிலைநாட்டா விட்டால் அவர்களுக்குத் தலை வெடித்து விடும். வள்ளல்களையும் அரசர்களையும் இப்படித் தங்கள் கல்வியால் பய முறுத்தியே இவர்கள் பரிசில்கள் பெறு வது வழக்கம்.''

கயல்விழியும் உய்யவந்தானும் தங்க ளுக்குள் நகைத்துக் கொண்டார்கள்.

''ஆனால் இந்த இளம் புலவரோ பொல்லாத பிள்ளையாக இருக்கிறார்! 'கற்றவர்கள் கற்றதோடு நிறுத்திக் கொள்ளக் கூடாது; கற்றபடி நடந்து காட்ட வேண்டும்; மற்றவர்களையும் நடக்கத் தூண்ட வேண்டும்' என்கிறார். இதுதான் ஆபத்தான வேலை!''

''இதில் ஒன்றும் ஆபத்து இல்லையே?'' என்றான் உய்யவந்தான்.

''ஆபத்து இனிமேல்தான் வரப் போகிறது!'' என்று கூறினார் ஆதிச்ச தேவர். ''பொருள் தேடிக் குவிக்கிற வர்களிடம் போய் நீங்கள் பொன் காக் கும் பூதங்கள் என்றால் அவர்கள் பொறுத்துக் கொள்வார்களா? எல்லாமே தங்களுக்கு வேண்டும் என்று பேராசைப் படுகிறவர்களிடம் போய் உங்களை வள்ளுவர் உயிரில்லாப் பிணங்களென்று சொல்கிறார் என்றால் அவர்கள் என்ன செய்வார்கள்? அப்படிச் சொல்கிற புலவர்களையே பிணங்களாகப் புரட்டி எடுத்துவிட மாட்டார்களோ? செல்வர் களிடம் போய் 'இந்திரன், சந்திரன்' என்று புகழ வேண்டும். 'அழகில் மன் மதன், வீரத்தில் வீமன்' என்று பாட வேண்டும். அவர்கள் கொடுக்கும் பரி சில்களை வைத்துக் கொண்டு வயிற் றைக் கழுவ வேண்டும். புலமைக்கு அழகு இதுதான்!''

பெண்கள் இருவரும் சிரித்தார்கள். வண்டிகள் மட்டியூர் எல்லைக்கு வந்த போது மெய்யாகவே அவர்களுக்கு ஆபத்து வந்துவிட்டது. செவிகளைத் துளைக்கும் வாழ்த்தொலிகளை அவர்கள் முழங்கினார்கள்.

ஊர்ப் பெருமக்களின் அன்பை அவர் களால் மறுக்க முடியவில்லை. கீழே இறங்கி, புதிதாக எழும்பிக் கொண்டி ருந்த சிற்றூரின் தோற்றத்தை அவர்கள் கவனித்தார்கள். சில மாதங்களுக்கு முன்பு போர் நடந்து தரை மட்டமாகப் போயிருந்த அதே ஊர்தானா இது!

வரிசை வரிசையாகச் சின்னஞ்சிறு கூரை வீடுகள் எழும்பிக் கொண்டிருந் தன. கொடுங்குன்றத்து மலைச்சாரல் களின் மூங்கில்கள் அங்கே கட்டுக் கட்டாகக் கிடந்தன. மக்களின் முகங் களில் அந்த ஊரின் புதுமை வளம்

# இருமலை நிறுத்த
# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்
## சாப்பிடுங்கள் சிவப்பு லேபில்




விடாது தொடர்ந்து தொல்லை கொடுக்கும் இருமலைப் பற்றி அசிரத்தையாக இருக்கக் கூடாது. அது உடலைப் பலவீனப்படுத்தி, நோய்களை எதிர்க்கும் சக்தியைக் குறைத்து, நோய்கள் எளிதில் பீடிக்கும் நிலையை ஏற்படுத்துகிறது. வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் மூன்று விதங்களில் அளிக்கும் பலன் ஒப்பற்றது. அதிலுள்ள கிரியோஸோட் மற்றும் க்வயகால் இருமலை குணப்படுத்துகிறது. இரும்பு சத்து, பலமளிக்கும் சத்துக்கள், மால்ட் மற்றும் ஸ்ப்ளீன் சாரங்கள், பசியைத் தூண்டுகின்றன, இழந்த சக்தியை ஈடு செய்கின்றன, குணமான நோய் மீண்டும் வராமல் தடுக்கும் சக்தியை யூட்டுகின்றன.

எல்லாக் கால நிலைகளிலும் நோய்களை எதிர்க்கும் சக்தி பெற சிவப்பு லேபிலுள்ள வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிடுங்கள்.






வாட்டர்பரீஸ் காம்பவுண்டில் கலந்துள்ள கிரியோஸோட் மற்றும் க்வயகால், சுவாசக் குழாய்களில் கிருமிகளால் அபாயம் ஏற்படாமல் பாதுகாக்கின்றன. கபத்தை 'இளக்கி வெளியேற்றி சுவாசப்பைகளை சுத்தமாக வைக்கின்றன. இருமல், ஜலதோஷம், சுவாசக்குழாய்களில் கபம் கட்டுதல், காச சம்பந்தமான உபாதைகள் முதலியவற்றை எதிர்க்கவும் மீண்டும் வராமல் தடுக்கவும் உதவுகின்றன.

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

**இருமல், ஜலதோஷம், சுவாசக் குழாய்களில் கபம் கட்டுதல், காச சம்பந்தமான உபாதைகள் முதலியவற்றை எதிர்க்கும் சக்தியை உடலுக்கு அளிக்கிறது**

வார்னர்-லாம்பர்ட் ∴ பார்மஸூடிகல் கம்பெனி
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பட்டது)

JWT-WL. 3394

துள்ளி விளையாடியது. நன்றிப் பெருக்கை எப்படி வெளியிட்டுக் கொள்வது என்று தெரியாமல் ஆனந்தக் கண்ணீர் பொங்க மக்கள் கூட்டம் தடுமாறியது.

''இது தாங்கள் அளித்த வாழ்வு!'' என்று ஊர்த் தலைவர் பைந்தமிழ்க் குமரனிடம் நாத் தழுதழுக்கக் கூறினர்.

''இல்லை; கொடுங்குன்றத்து மக்கள் உங்களுக்குக் கை கொடுத்திருக்கிறார்கள். அவர்களுக்காக நீங்கள் செய்த தியாகத்தை அவர்கள் மறக்கவில்லை; அவ்வளவுதான்'' என்றான்.

''தாயே, தாயே, எங்கள் செல்வமே!'' என்று கூறிக் கொண்டு பெண்கள் கூட்டம் கயல்விழியைத் திணறச் செய்தது. ஆதிச்ச தேவர் தமது நெடுநாள் வாழ்வில் இப்படி ஓர் அன்புக் குமுறலைக் கண்டதில்லை.

மட்டியூரில் உண்டு களைப்பாறி விட்டு மாலையில் வண்டியைக் கட்டிக்கொண்டுதெற்கே கிளம்பினார்கள் அவர்கள். உண்ட களைப்பு இன்னும் தீரவில்லையாதலால் புலவர்களால் தங்களுடைய அடுத்த சொற்போரை இன்னும் தொடங்க முடியவில்லை. பனைநுங்கு, இளநீர், தேன், அறுசுவை உண்டி இவ்வளவும் கொடுத்து அவர்களை அயரச் செய்து வீழ்த்தி விட்டார்கள் மட்டியூர்ப் பெருமக்கள்.

''தமிழ்ப் பெருமக்களிடமும் ஒரு பொல்லாத குணமிருப்பதை இப்போதுதான் கண்டு பிடித்தேன்'' என்றார் ஆதிச்ச தேவர். ''நாமுந்தான் மாளிகையில் வாழ்ந்தோம்; ரதங்களில் ஊர்ந்தோம்; பணியாட்கள் பலரை வைத்துக் கொண்டு அரச போகத்தில் வாழ்ந்தோம். அப்போது மக்கள் நம்மை மதிக்கவில்லை. புகழவில்லை; இப்போது தலைக்கு மேல் தூக்கி வைத்துக் கொண்டு கூத்தாடுகிறார்கள்.''

போகுமிடங்களிலெல்லாம் கூட்டம் கூடியதைத் தந்தையார் மறந்து விட்டுப் பேசுகிறாரோ என்று நினைத்தாள் கயல்விழி.

## விசித்திரப் பேட்டி

''தோ! தோ! தோ...உத்ச்...ச்....''

''என்னையா கூப்பிடறீங்க? என்ன சமாசாரம்?''

''உங்களைப் பேட்டி கண்டு போகலாம்னு வந்திருக்கேன். உமக்கு வாசம் இத் தெருவிலேயா?''

''ஆமாம். கீழே பூமி, மேலே ஆகாயம். பூமியில் அகப்பட்டதைத் தின்றுவிட்டு, ஆகாயத்தில் உதயமாகும் சந்திரனைப் பார்த்துக் குரைக்கிறோம்.''

''சந்திரனைப் பார்த்து நாய் குரைத்தால் சந்திரனுக்கு என்ன குறைந்து போகுமென்பாங்களே?''

''கிடக்காங்க, விஷயம் தெரியாதவங்க. நிலவைத் தருதேன்னு சந்திரன்கிட்டே நன்றியில் நாங்க குரைக்கிறோம்; அவ்வளவுதான்.''

''ஆமாம், நாயென்றால் நன்றிக்கு ஓர் உதாரணமாச் சொல்றாங்களே!''

''வாஸ்தவம். உங்களில் சிலர் தேர்தலில் ஜெயித்ததும் வோட்டுப் போட்டவங்களை மறந்துடறாங்களே; நாங்க அப்படியில்லே. சோறு போட்டவங்ககிட்டே என்னிக்கும் நன்றியோடு இருப்போம்.''

''வீடுகளில் வளர்க்கப்படும் நாய்களுக்கும் தெரு நாய்களுக்கும் என்ன வித்தியாசம்?''

''வீட்டு நாய்களுக்கு நல்ல ஆகாரம், வீட்டுக்குள்ளே வருபவர்களை மோப்பம் பிடித்து நல்லவனா திருடனான்னு பார்க்கிறதே பெரிய ஜோலி. பல சமயங்களில் திருடனை உள்ளே விட்டு வீட்டுக்கு நல்ல சமாசாரமோ மணியார்டரோ கொண்டு வரும் தபால்காரரையே துரத்த நேர்ந்து விடுகிறது.''

''சரி! வளர்ப்பு நாய்கள் காரில் போகும்போது உங்களுக்கு அதைப் பார்த்துப் பொறாமை வருவது சகஜம்தானே?''

''எங்க மாதிரி சுதந்திரமாக இருக்க முடியல்லையே என்று அவை வேணுமானால் பொறாமைப்படலாம். ஆனால் எங்க இனத்திலே மனுஷனைப் போல் பொறாமை கிடையாது.''

''பெரிய வீடுகளில் 'நாய்கள் ஜாக்கிரதை' என்ற போர்டுகள் தொங்குகின்றனவே....?''

''ஏதோ சில நாய்ப் பிரியர்கள் நாய்களுக்கு ஆபத்து என்று எச்சரிக்கிறார்கள் என்றுதான் முதலில் நினைத்தேன். அப்புறம்தான் எங்கப்பா சொன்னார்....''

''ஆமாம்! சந்தோஷத்தில் வாலாட்டுகிறீர்கள். பயம் வந்தால் வாலை உள்ளே மடக்கிக் கொள்கிறீர்களே, அது ஏன்?''

''நீங்கதானே சொல்லுவீங்க, பந்தமும் பாசமும் இருந்தால் தானுடா விட்டாலும் சதை ஆடும் என்று!''

''லைசென்ஸ் இல்லாமல் ரோட்டில் திரியும் நாய்களைப் பிடித்துப் போய்க் கொன்று விடுகிறார்களே. உங்களுக்கு அதைப் பற்றிக் கவலை இல்லையா?''

''நாய்களுக்குப் பைத்தியம் பிடித்தால் எல்லோரையும் கடித்துவிடும் என்பதற்காக அவர்கள் பிடித்துப் போகிறார்கள். கழுத்தில் லைசென்ஸ் கட்டி விட்டால் பைத்தியம் பிடிக்காதுன்னு என்ன நிச்சயமுங்க? அது சரி! மனுஷ வர்க்கத்திலே ஏதோ (பெர்மிட்) லைசென்ஸ்களுக்காகப் பைத்தியம் பிடித்து அலையறாங்களாமே.....?''

''ஒய்! நாயாரே! என்ன நீரே என்னைப் பேட்டி காண ஆரம்பித்து விட்டீர். போய் வருகிறேன்!''

"கூட்டம் கூடிப் பலன் என்ன? ரதத்தில் நாம் போய் இறங்கினாலும் "அதோ பார், கயல்விழி வருகிறாள். இதோ பார் கூத்தன் போகிறான்!' என்று தானே ஒருமையில் நம்மை இகழ்ந்து பேசினார்கள்? அவர்கள் கொடுப்பதை வாங்கிக் குனித்துக் கொண்டு ஆடுகிறவர்கள்தானே இவர்கள் என்ற எண்ணம் அவர்களுக்கு. ஆனால், இப்போதோ, 'தாயே!' என்கிறார்கள்; 'தெய்வமே!' என்று கும்பிடுகிறார்கள். பொல்லாதவர்கள் நம்முடைய மக்கள்!"

கயல்விழிக்குத் தன் தந்தையின் மனமாற்றம் பெருத்த ஆறுதலைத் தந்தது. குதிரைகள் பூட்டிய ரதங்களில் போவதையேதான் பழக்கமாகக் கொண்டிருந்தவர் அவர். பெரும் பொருளைக் கொண்டுவந்து அவர் முன் கொட்டினாலல்லாது அவர் கூத்து நடத்த இசைய மாட்டார். செல்வச் செருக்கால் சித்தம் வீங்கியிருந்தவர் அவர்.

"ஆமாம், பிறக்கும்போது கழஞ்சுப் பொன் கொண்டு வருவதில்லை; சாகும்போது சாம்பல்தான் எஞ்சியிருக்கிறது! முடிந்தமட்டும் புகழ் சேர்க்க ஆசைப்படுவோம். எவ்வளவுக்கெவ்வளவு புகழ் சேர்க்கிறோமோ அவ்வளவுக்கும் நமக்குப் பின்னால் நாலுபேர்கள் பேசுவார்கள். என்னால் ஆசைப்படாமல் மட்டும் இருக்க முடியாது. போனால் போகிறது. உன் புலவருக்காகப் பொருள் ஆசையை விட்டுவிட்டு, புகழ் ஆசையாய் மாற்றிக்கொள்ளுகிறேன்!"

"பொருளும் கிடைத்ததே ஐயா!" என்றாள் கயல்விழி. "இப்போது கிடைத்த அறுசுவை உண்டி பொருள் இல்லையா?"

"அறுசுவை உண்டியா? இந்தப் புலவர்களை நம்பினால் ஆறு நாள் பட்டினி கிடக்கும்படியாகவும் செய்து விடுவார்கள். அவர்களுக்கென்ன? சொற்களைக் குடித்தே பசியாறி விடுவார்கள். நம்மால் அது முடியாது. நீ அந்தப் பைந்தமிழ்க் குமரனிடம் இதைமட்டும் சொல்லிவிடு, சுவையான உணவு கிடைத்தாலே ஆட்டமும் சுவையாக இருக்கும் என்று!"

உய்யவந்தாள்கூட இதைக் கேட்டுச் சிரித்தாள்.

மாலை மயங்கி இருட்டிக்கொண்டு வந்தது. பெண்களை வண்டியில் வைத்துக்கொண்டு இரவில் பிரயாணம் செய்ய வேண்டாம் என்று யோசனை கூறினார் ஆதிச்ச தேவர். நள்ளிரவுக்குள் அடுத்த ஊரை அடைந்துவிடலாம் என்பதால், வண்டிகளை விரைந்து போகச் செய்தான் பைந்தமிழ்க்குமரன். முதல் வண்டியில் தீப்பந்தம் ஒன்றைச் செருகி வைத்திருந்தார்கள்.

தேய்பிறைக் காலமாதலால் காட்டு வழிப் பாதை இருண்டு கிடந்தது. வழக்கமாகவே அங்கு கள்வர் பயமில்லை என்பதை முன்னதாகவே கேட்டு வைத்திருந்தான் இளைஞன். தனி வண்டியாகச் சென்றாலும் அச்சத்துக்கு இடமுண்டு. நான்கு வண்டிகள் ஒன்றாகச் சென்றதால் யாரும் கவலைப் படவில்லை. குதிரைகளில் முன்பு சென்றவர்கள் அடுத்த ஊரில் காத்திருந்தார்கள். தங்குவதற்கான இடத்தையும் அவர்கள் சித்தப்படுத்தி யிருந்தார்கள்.

தொலை தூரத்தில் ஏதோ விறகு வெட்டுகிற சத்தம் போல் கேட்டது. அந்த இரவு நேரத்தில் அப்படி யார் அங்கு வந்து விறகு வெட்டப் போகிறார்கள்? சத்தம் நெருக்கத்தில் வந்தது. வண்டிகள் மெதுவாகச் சென்றன. பாதையின் ஓரத்தில் கன்னங் கரேலென்ற தோற்றத்துடன் நின்ற ஒரு மரம் அசைவதைக் கூர்ந்து கவனித்தான் முதல் வண்டிப் பணியாள். அசைந்த அந்த நெடுமரம் தன் கிளைகளோடும் தழைகளோடும் பயங்கரமான சத்தத்துடன் குறுக்கே விழுந்தது.

முதல் வண்டியிலிருந்த பெண்கள் அனைவரும் 'ஓ'வென்று கூக்குரலிட்டுக் கதறினார்கள். உய்யவந்தாள் நடுக்கத்துடன் கயல்விழியைக் கட்டிப் பிடித்துக் கொண்டாள். ஆதிச்ச தேவருக்கு அபயக்குரல் எழுப்பக்கூட உள்ளத்தில் வலுவில்லை.

இருட் புதர்களிலிருந்து வாளும் வேலும் தாங்கிய சில நெடிய உருவங்கள் அந்த வண்டிகளை நோக்கிப் பாய்ந்து வந்தன.

### ஆறாம் அத்தியாயம்

## ஒற்றருக்கு ஒற்றன்

தொலைதூரத்தில் மரம் வெட்டுவது போல் சத்தம் கேட்டவுடனேயே விழிப்படைந்து விட்டான் பைந்தமிழ்க் குமரன். வண்டிக்குள்ளிருந்த புலவர்களிடம் ஏதோ கூறி விட்டு, கயல்விழியின் வண்டிக்கு வந்தான். சத்தம் கேட்டுக் குழம்பியிருந்த ஆதிச்சதேவர் இருளில் வந்த பைந்தமிழ்க் குமரனை

**ஆம், அவள் சகுந்தலா! ஆடையணிகளுக்கும் சட்டைகளுக்குமான ப்ரிண்ட்கள்**

ராஜேஷ் டெக்ஸ்டைல்ஸ்—பருத்தித் துணிகளில் வாங்க லாபகரமானவை நீடித்துழைக்கும் பருத்தி ஃப்ராக்குகள், ப்ரிண்டட் புடவைகள், நாள் பூராவும் புதுமைப் பொலிவுடன் குளுகுளுப்பூட்டும் பாப்ளின் சட்டைகள்—இவற்றில் எது தேவையானாலும் ராஜேஷ் டெக்ஸ்டைல்ஸ் என்று வற்புறுத்திக் கேட்டு வாங்குங்கள்.




**ராஜேஷ் டெக்ஸ்டைல்ஸ் மில்ஸ் லிட்.**
**பம்பாய்-13**



இது ஒரு ரோஹித் க்ரூப் ஸ்தாபனம்

SI-RH-I TAM

# அதிசயமான புதுமுறை தயாரிப்பு

## பெப்ஸோடெண்டின் அற்புத நுரை உங்கள் பற்களின் வெண்மையை பளிச்சிடச் செய்யும்

எப்படி என்று பாருங்கள்: புது முறைப்படி தயாராகும் பெப்ஸோடெண்டில் மட்டுமே அற்புத நுரையை உண்டுபண்ணும் 'இரியம் ப்ளஸ்' உள்ளது. இந்த அற்புத நுரை பற்களைப் பாழாக்கும் பழுப்பை அகற்றி அவைகளை இயற்கை வெண்மையுடன் பிரகாசிக்கச் செய்கிறது...வாயைச் சுத்தம் செய்வதுடன் பெப்பர்மிண்டின் சுவையையும் அளிக்கிறது.




இந்துஸ்தான் லீவர் லிமிடெட்
இந்தியாவில் தயாரிப்பது

இனம் கண்டுகொள்ளாமல் அலறிப் புடைத்துக் கொண்டு அவன்மீது பாயப் போனார். கயல்விழி கலீரென்று சிரித்து விட்டாள்.

''கயல்விழி! ஒருவேளை கள்வர்கள் நம்மை வழி மறித்தால், அவர்கள் எண்ணிக்கை நமக்குத் தெரிய வேண்டும். தீப்பந்தங்களைச் சித்தமாக எடுத்து வைத்துக் கொள்ளுங்கள். நீயும் உன் தோழிகளும் இதைச் செய்தால் போதும்'' என்று அவளிடம் மெல்லக் கூறினான். பிறகு ரகசியமாகவும் அவனுக்கொரு கட்டளையிட்டான்.

மரம் விழுந்த மறுகணத்தில் பேரிரைச்சலுடன் சிலர் ஓடி வந்து வழி மறித்தார்கள். அவர்கள் கைகளில் தென்பட்ட ஆயுதங்கள் அந்த மங்கலான இருளிலும் பளபளவென்று ஒளி வீசின. அவர்களை அடுத்து மேலும் சிலர் ஆர்ப்பரித்துக் கொண்டே வந்து சேர்ந்தார்கள்.

''ஐயகோ, கள்வர்களா!'' என்று உரக்கக் கூவிப் பதறினார்கள் சில புலவர்கள். ''அடப் பாவிகளா!'' என்றார்கள் சிலர். அவர்கள் பயத்தினால் நடுங்கி உளறும் குரல்கள் வந்தவர்களை நகைக்கச் செய்தன.

வண்டியிலிருந்து குதித்த ஒரு புலவர், ''ஐயன்மீர்! கள்வர் பெருமக்களே! யாம் கூறுவதைச் சற்றே செவிமடுத்துவிட்டு நீவிர் யாது வேண்டுமானாலும் செய்க!'' என்று கூவிக் கொண்டே அவர்களை நாடி ஓடினார்.

''புலவர்களாகிய எம்மிடம் எதைக் கவர்ந்து போகலாமென்று வந்தீர்? தமிழ்ச் செல்வம் வேண்டிய மட்டும் எம்மிடம் இருக்கிறது. வாரி வாரி வழங்குகிறோம். உங்களுக்கு எந்தச் சுவடிகள் வேண்டும்? நீங்கள் இப்படி ஆயுதங்களை வைத்துக் கொண்டு எங்களை அச்சுறுத்துவதை மட்டும் நிறுத்தி விடுங்கள்!''

''பாவிப் பாண்டியா! புலவர்களை வழிமறித்துப் பிடுங்கும் அளவுக்கு உன்னுடைய நாட்டில் பஞ்சம் வந்து விட்டதே!'' என்று பெரும் குரலில் ஓலமிட்டார் பின்னால் ஒரு புலவர்.

வளைத்துக் கொண்டு நின்றவர்களுக்கு என்ன செய்வதென்று ஒரு கணம் விளங்கவில்லை. அதற்குள் இரண்டு பெண்கள் தீப்பந்தங்களுடன் அச்சமின்றி அவர்களை நெருங்கினர்.

கள்வர்களின் தலைவன் போல் தோற்றமளித்தவன், ''உங்களுடைய மட்குடத்தில் நீங்கள் சேகரித்த பெரும் செல்வத்தை எங்கே வைத்திருக்கிறீர்கள்?'' என்றான்.

''பொன் காக்கும் பூதமென்று புலவர்களை மதிக்கிறீர்! மட்டியூரைப் போய் நீவிர் காணவில்லையா?''

''புலவரே!'' என்று அதட்டினான் கள்வர் தலைவன். ''வள்ளுவர் பெயரைச் சொல்லியே பெரும் பொன் கவர்ந்த அந்த ஒரே ஓர் இளைஞனை மட்டும் எங்களிடம் விட்டு விடுங்கள். மறுத்தீர்களோ, எல்லோருமே எங்கள் வாளுக்கு இரையாகி விடுவீர்கள்.''

''பிறகு எங்கள் நாட்டிய மங்கையையும் சேர்த்துக் கேட்பீர்கள் போல் இருக்கிறதே!''

''அவள் எங்களுக்கு வேண்டாம்.''

தீப்பந்தங்களின் ஒளியில் வந்தவர்களின் எண்ணிக்கை ஒன்பது அல்லது பத்துப் பேர் என்பது தெரிந்தது. அது வரை பெருங் குரலெடுத்துப் பயந்து நடுங்கிய புலவர்கள் யாவரும் பாய்ந்து வந்தனர் வெம் புலிகளாய். வேல்கள் குறி தவறாது பாய்ந்தன. வாட்கள் மின்னல் காட்டி, இடி இடித்து, செங்குருதி மழை கொட்டின.

ஆதிச்ச தேவர் தம் கண்களைக் கசக்கி விட்டுக்கொண்டு பார்த்தார். பெண்கள் கூட்டம் காட்டிய தீப்பந்தங்களின் ஒளியில் புலவர்கள் போர் புரிந்து கொண்டிருந்தார்கள்! 'சொற்போர் வீரர் மற்போர் புரிகிறார்களே! நாவைச் சுழற்றுபவர் வாளைச் சுழற்றுகிறார்களே!' — துணிந்து அவரும் குதித்து விட்டார்.

வந்தவர்கள் பைந்தமிழ்க் குமரனைக் கவர்ந்து செல்லும் நோக்கத்துடன் வந்த தால், யாரும் அவர்களிடம் இரக்கம் காட்டவில்லை. அஞ்சி ஓடிய இருவரைத் தவிர அறுவரைத் தரையில் சாய்த் தார்கள். ஒருவனைப் பிடித்துக் கைகளை யும் கால்களையும் கட்டி வண்டியில் போட்டார்கள். தப்பிச் சென்றவர் களை அம்பலக் கூத்தன் துரத்திப் பிடிக்க முயன்றபோது, பைந்தமிழ்க் குமரன் அவனைத் தடுத்து நிறுத்தினன். ''வீழ்ந்து கிடப்பவர்களை நீ கவனித்துப் பார்; நாங்கள் மரத்தை அப்புறப் படுத்துகிறேம்.''

ஒரு முரடன் ஏதோ தனக்குள் முனகிக் கொண்டிருந்தான். அதை உற்றுக் கேட்டான் அம்பலக் கூத்தன்.

''எங்களுக்கு ஏதும் தெரியாது.... அவங்கதான் கூப்பிட்டாங்க... வண்டி யிலே குடம் குடமாப் பொன் வரு துன்னு சொன்னுங்க.... ஒரு ஆள் மட்டும் அவுங்களுக்கு, பொன் எங் களுக்குன்னு பேச்சு..... நாங்களா வரல்லே.....''

கூத்தனின் நெற்றி சுருங்கியது. அடுத்தாற் போல் மற்ெருருவன் உயி ருக்கு மன்ருடித் துடித்துக் கொண்டிருப் பது தெரியவே, அவனை நெருங்கினன். அம்பலக் கூத்தனைக் கண்டவுடன் அவ னுடைய துடிப்பு சிறிது சிறிதாக நின்றது.

''யார் நீ? உண்மையைச் சொல்லி விடு... !''

காதில் விழாதவன் போல் அவன் கூத்தனை உற்றுப் பார்த்தான்.

''சொல்கிருயா இல்லையா?''

அவன் தன் வாயைத் திறக்கவில்லை.

''சயங்கொண்ட சோழ வல்லபரின் ஒற்றன்தானே நீ?''

இதைக் கேட்டவுடன் அவன் முகத் தில் படர்ந்த பீதி அவனைக் காட்டிக் கொடுத்து விட்டது.

அம்பலக் கூத்தனின் முகத்தை விகாரமாக்கிய தழும்புகூட அவனுக்கு இப்போது மறந்து விட்டது. ஆருத புண்ணுகிய அவன் உள்ளக் கொதிப்பு அவனை இப்போது ஆட்டி வைத்தது. தீப்பந்தத்தை அவன் முகத்தருகில் கொண்டு போய், ''உண்மையைக் கூறி விடு ! இல்லையேல்?......'' என்று தன் கண்களை உருட்டி விழித்தான்.

''ஆமாம், ஆமாம்'' என்று கிணற் றுக்குள்ளிருந்து பேசுவதுபோல் பேசி ஞன் அவன். ''சக்கரவர்த்திக்கு எதி ராக..... உங்கள் புலவர் பாண்டியர் களைத் தூண்டுவதால்....... அவரை.... அவரை.......''

சொற்களை முடிக்கு முன்பே அவன் தலை சாய்ந்து விட்டது.

அம்பலக் கூத்தனின் மனத்திலிருந்த ஒரு பெருஞ் சுமை நீங்கியது. ''உங்கள் புலவர்'' என்று அவன் கூறியதிலிருந்து, 'யாரோ ஒரு புலவர்' என்ற வரையி லும்தான் சோழ வல்லபர் தெரிந்து கொண்டிருக்கிருர். பாண்டிய நாட்டில் புதிதாகத் தோன்றியுள்ள புலவரால் மக்கள் விழிப்படைந்து விடுவார்கள் என்ற அச்சம் அவருக்கு. அந்தப் புலவர் யாரென்று இன்னும் தெரிந்துகொள்ள வில்லை அவர்!

வண்டிக்குக் கீழே வைக்கோல் அடைத்திருந்த பகுதியில், அந்தப் பகைவனைப் படுக்க வைத்தார்கள். வண்டிகள் விரைவாகச் சென்றன.

''கயல்விழி! எனக்கொரு சந்தேகம்'' என்ருர் ஆதிச்சதேவர். ''நம்மை வழி மறித்தார்களே, அவர்கள் கள்வர்களா? அல்லது நம் கூட்டந்தான் கள்வர் கூட்டமா?''

உய்யவந்தாள் கலீரென்று சிரித்தாள்.

''அவர்களுடன் போய்ச் சொற் போர் நடத்தலாம் என்றுதான் நானும் இது வரை நினைத்தேன். இனி அதுவும் ஆபத்தென்று தெரிகிறது. வாய்ப் போருடன் நிறுத்தாமல் கைப்போரும் நடத்துகிருர்கள்!''

''பெண்கள் கூட்டத்தை வைத்துக் கொண்டு பல ஊர்களுக்குப் போவதென் ருல் பாதுகாப்பு வேண்டாமா?''

''அப்படியானுல் இனி நானும் பழக வேண்டியதுதான்.''

கடைசி வண்டியில் வந்த பைந்தமிழ்க் குமரனிடம் அம்பலக் கூத்தன் செய்தி களைக் கூறினன். பைந்தமிழ்க் குமரனின் மனம் சிந்தனையில் ஆழ்ந்தது. சயங் கொண்ட சோழ வல்லபர் திட்டமிட் டுத்தான் இதைச் செய்திருக்கிருர். அமைச்சர் என்ற முறையில் பாண்டிய நாட்டின் நீதி முறைப்படி ஒரு புல வனைத் தண்டிக்க முடியாது. பாண்டிய ரிடமும் முறையிட்டு இந்தச் செயலைத் தடுக்க இயலாது. ஆகவே, இரகசிய மான வழிகளில் இறங்கி விட்டார்.

''அவருடைய ஒற்றர்கள் சிலர் நம்முடைய நாட்டுக் கள்வர்களோடு தொடர்பு கொண்டு இங்கு வந்திருக் கிருர்கள். கள்வர்களுக்குப் பொரு ளாசை காட்டியிருக்கிருர்கள்'' என்று அவன் காதுகளில் கூறினன் கூத்தன்.

''நம்மிடம் அகப்பட்டிருப்பவன்?''

''ஒற்றன்.''

அதன் பின்னர் வண்டிக்குள் மௌனம் நிலவியது. **(தொடரும்)**

இன்சொற்செல்வி, வான்மதிவதனி,
மென்மலரன்ன எழில்மேனி!
நவிர, மல்லிகையின் மணம் கமழும்
இவள் அழகே அழகு.

# இவள் ஜெய் மங்கை...

நீங்களும் ஜெய் சோப் உபயோகியுங்கள். மிருதுவான அதன் நுரை, உங்களுக்குப் புது மலர்ச்சியும், மல்லிகையின் நறுமணமும் அளிக்கிறது. ஜெய் சோப் உங்கள் மேனி எழிலை மேன்மையுறச் செய்கிறது.

★ மிதமிஞ்சிய மல்லிகை மணம்!
★ இளஞ்சிவப்பு நிறம்!
★ பளபளக்கும் ரேக்கு 'ராப்பர்'!

# மதிவதனி!



உங்கள் மேனி எழில் பெருக

**ஜெய்** அழகு சாதன சோப்




BI-TJS-74 TAM

டாடா தயாரிப்பு

# நங்கையர் செய்யும் நற்பணிகள்





பத்மா சேஷாத்திரி பள்ளிக்கு ராஜாஜி வருகிறார்.

ஜான் ஹாப்கின்ஸ் சர்வகலா சாலை வைத்தியப் பள்ளியில் சேர வேண்டுமென்று 1890ம் வருஷத்தில் காரே தாமஸ் ஆசைப்பட்டாளாம். அந்த வைத்தியப் பள்ளியில் பெண்களை சேர்த்துக் கொள்ளப்படுவது கிடையாது. கடைசியில் காரே தாமஸின் பிடிவாதத்தைக் கண்டு, அவள் ஒரு திரைக்குப் பின்னால் இருந்துகொண்டு பேராசிரியர்களின் உரைகளைக் கேட்கச் சம்மதமானால் அனுமதிப்பதாகப் பள்ளி நிர்வாகிகள் முன் வந்தனர். அந்த மாதிரியே காரே தாமஸ் படித்துப் பட்டம் பெற்றுப் பெரன்மோர் கல்லூரியின் தலைமைப் பதவியை ஏற்றாள். இப்பொழுது காலம் எவ்வளவோ முன்னேறி விட்டது. நுங்கம்பாக்கம் மாதர் சங்கத்தினர், தாங்களாகவே சுய முயற்சியில் பள்ளி நிறுவி, அதற்கு நிதி தேடி, பெண் குழந்தைகளைப் பள்ளியில் சேர்த்துக் கொள்வதோடு சிறுவர்களுக்கும் இடம் தருகிறார்கள். இப்பொழுது எட்டாவது வகுப்பு வரை உள்ள இந்தப் பள்ளியில் மெட்ரிகுலேஷன் வரை படிக்க வசதி செய்து தரப் போகிறார்கள். சென்னை சர்வகலாசாலையுடன் இணைந்துள்ள இந்தப் பள்ளியில் ஆங்கிலத்திலேயே போதனமொழி நடக்கிறது.

அன்னதானம் செய்வதும் அன்ன சத்திரம் ஆயிரம் வைப்பதையும்விட ஏழை ஒருவனுக்குக் கல்வித் தருமம் செய்வது சாலச் சிறந்தது என்றார் பாரதியார். நூற்றுக் கணக்கான குழந்தைகளின் அறியாமையை நீக்குகின்றனர் நுங்கம்பாக்கம் மாதர் சங்கத்தினர்.

முதலில் நுங்கம்பாக்கத்தில் பொழுது போக்கவும், பால் விநியோகம் சரியாகக் கிடைக்கவும் ஸ்ரீமதி காதர் ஒரு சங்கத்தைத் தோற்றுவித்தாள். இந்தப் பேட்டைக்குக் குடி வந்த ஸ்ரீமதி ராஜலக்ஷ்மி பார்த்தசாரதி இந்த மாதர் சங்கத்தின் மற்றொரு பணிக்குக் காரணமாக இருந்தாள். தம் வீட்டு மாடியில் சிறு குழந்தைகள் நர்ஸரிப் பள்ளியைத் தொடங்கலாம் என்ற யோசனையைப் பகர்ந்தாள். பிரபல வழக்கறிஞர் ஸ்ரீ டி. ஆர். வேங்கடராம சாஸ்திரி அவர்களின் பேத்தி மீனாக்ஷி பி. ஏ. பட்டதாரியாகி வீட்டில் சும்மா அமர்ந்திருந்தாள். சும்மாயிருப்பது கஷ்டமல்லவா? அவர் இந்த நர்ஸரிப் பள்ளியில் குழந்தைகளுக்குக் கல்வி புகட்ட இசைந்தாள். நர்ஸரிப் பள்ளி சிறிய அளவில் செயலாற்றத் தொடங்கியது. நாளுக்கு நாள் நர்ஸரிப் பள்ளியில் சிறுவர், சிறுமிகள் சேர வந்தனர். மாடி இடம் போதவில்லை. ஓலைக் குடிசைகள் போட்டுத் தற்போதுள்ள இடத்தில் பள்ளியைத் தொடங்கினர் மாதர் சங்கத்தார். அதோடு பள்ளிக்குக் கட்டடம் எழுப்ப நாடகங்கள் நடத்திப் பொருள் சேர்ப்பதில் முனைந்தனர், ஸ்ரீமதி பார்த்தசாரதியையும் ஸ்ரீமதி ராஜேசுவரி சுந்தரத்தையும் செயலாளர்களாகக் கொண்ட இம் மாதர் சங்கத்தினர். இத் தருணத்தில் ஸ்ரீ ஆர்.எம். சேஷாத்திரி தமது மனைவி பத்மாவின் நினைவாக முப்பதினாயிரம் ரூபாய் தாராளமாக வழங்கி ஓலைக் குடிசைகள் மாடிக் கட்டடமாக உருவாக வழி வகுத்தார். இவரது கொடைத் திறமை மறக்காதிருக்கப் பள்ளிக்கே பத்மா சேஷாத்திரி பாலபவன், உயர்நிலைப் பள்ளி என்று நாமத்தைச் சூட்டினர் மாதர் சங்கத்தினர். இதன் பிறகு ஸ்ரீ எஸ். எஸ். வாசன், இந்தியா சில்க் ஹவுஸ் உரிமையாளர்கள் ஆகியோர் பத்தாயிரம் ரூபாய் நிதி வழங்கினர். பிரபல திரைப் பட நடிகர் எம். ஜி. ராமச்சந்திரன் தம் தாயாரின் நினைவாக 'சத்யபாமா' பிளாக் கட்ட முன்வந்தார்.



ஆர். எம். சேஷாத்திரி



தட்டெழுத்தும், தையல் வேலையும் கற்கும் பெண்மணிகள்.

இந்தப் பள்ளியில் ஒரு விசேஷம், மாதர் சங்கத்தினரில் பட்டதாரிகளாயுள்ள பலர் ஆசிரியைகளாகத் தொண்டாற்றுகிறார்கள். சென்னை உதவி போஸ்ட் மாஸ்டர் ஜெனரலின் மனைவியார் ஸ்ரீமதி சகுந்தலா ஜானகிராமன் தம் பொழுதை வீணாக்காமல் இங்கே குழந்தைகளுக்குக் கல்வி போதிக்கிறார்.

அவர்களது கல்வித் தொண்டைத் தவிர சங்கம் புரிந்து வரும் மற்றப் பணிகளைக் காரியதரிசி ஸ்ரீமதி பார்த்தசாரதி விவரித்தார்.

''எங்கள் மாதர் சங்கத்தினர் ஒரு பள்ளியை நிர்வகித்து நடத்துவதைப் பெருமையாகக் கருதுகிறோம். எங்கள் மாதர் சங்கத்திலே மாதர்களுக்குத் தையல் கற்றுத் தருகிறோம். இப்பொழுது பெண்களுக்கு உத்தியோக வாய்ப்பு நிறைய இருப்பதால் அவர்களுக்குத் தட்டெழுத்தும், சுருக்கெழுத்தும் கற்றுத் தருகிறோம். விரைவிலேயே செக்ரடேரியட் பயிற்சியளிக்க உத்தேசித்திருக்கிறோம்!'' என்றார் ஸ்ரீமதி ஒய். ஜி. பி.

பெண்களுக்குக் கல்வி அவசியம் என்பதை விளக்கிய ஓர் அறிஞர், ''பெண்களுக்கு நகைகளை அணிவித்து அனுப்பினால் அவற்றைக் கணவன் விற்றுவிடலாம்; அல்லது கள்வன் கவர்ந்து கொண்டுவிடலாம். கல்விச் செல்வம் பெற்றுச் செல்லும் பெண்களுக்கு அது நிரந்தரச் செல்வமல்லவா? அதைக் கவர முடியுமா?'' என்று கேட்டிருக்கிறார். அந்த நிரந்தரச் செல்வத்தை நுங்கம்பாக்கம் மாதர் சங்கத்தினர் வழங்குகிறார்கள். பல தையல் நாயகிகள் இயந்திரத்தில் தையல் கலை பயில்வதும், தட்டெழுத்துக் கற்பதும் கண்கொள்ளாக் காட்சியாக இருக்கின்றன.

''நாங்கள் விதைகளும் உரங்களும் வாங்கிச் சங்க அங்கத்தினர்களுக்கு விநியோகம் செய்து காய்கறித் தோட்டம் வீட்டில் பயிரிட வழி செய்கிறோம். உணவைப் பாதுகாக்கும் முறை பற்றி அந்தத் துறை நிபுணர்கள் எங்கள் சங்கத்தில் பேசவிருக்கிறார்கள்!''

''நாடகத் துறையில் உங்கள் சங்கம் ஈடுபட்டுள்ளதா?''

''ஓ! எங்கள் பள்ளியில் உள்ள சிறுவர் சிறுமிகள் நடிக்கும் நாடகங்களைக் கண்டு பலர் பாராட்டியுள்ளார்கள். மாதர் சங்கத்திலுள்ள நாங்களே பல நாடகங்கள் போட்டிருக்கிறோம். 'அபாய அறிவிப்பு', 'பாவம், பலராமன்' ஆகியவற்றை நடித்திருக்கிறோம்!''

என்று அவர் கூறிக்கொண்டிருக்கும்போதே, மாதர் சங்கத்தின் மற்றொரு காரியதரிசி ஸ்ரீமதி ராஜேசுவரி சுந்தரம் வந்து சேர்ந்தார்.

''ராஜேசுவரி! பெண்களுக்குத் தொழில் வசதி செய்யவிருப்பதை நீதான் இவர்களுக்கு விளக்க வேண்டும்!'' என்றார்.

''ஆமாம்! எங்கள் நுங்கம்பாக்கம் மாதர் சங்கத்துக்கு மத்திய சமூக நல போர்டு (Central Social Welfare Board) இரண்டு லட்சத்துக்கு மேல் நிதி கொடுப்பதாகச் சொல்லி, மாதர் தொழில் யூனிட் தொடங்கும்படி கூறியிருக்கிறது. நாங்கள் இந்த வருஷ இறுதிக்குள் இருபத்தைந்து மாதர்கள் பணிபுரியக் கூடிய தொழில் யூனிட் ஒன்றைத் தொடங்கி அதில் இரும்புத் திருகாணிகளும் மரைகளும் தயாரிக்க விருக்கிறோம்!'' என்று பெருமையுடன் பகர்ந்தார் ஸ்ரீமதி சுந்தரம்.

இப்படிக் கல்வித் துறை, தொழில் துறைகளில் முக்கிய கவனம் செலுத்தும் நுங்கம்பாக்கம் மாதர் சங்கத்தினர் பொழுது போக்கு விளையாட்டுக்களுக்கும் வசதி செய்திருக்கிறார்கள். மாதர்களுக்காக ஒரு நூலகமும் இயங்கி வருகிறது.

''வீட்டில் குழந்தைகளைக் கவனித்தல், சமையல் செய்தல் ஆகிய கடுமையான பணிகளில் ஈடுபட்டுவிட்டு இப்படி இங்கும் வந்து மாதர்கள் தையல் வேலைகளில் ஈடுபடுகிறார்களே, அவர்களால் அது எப்படி முடிகிறது?'' என்று கூட வந்தவர் வியந்தார்.

வீட்டில் கடுமையான வேலை, அதன் மாற்றம் இந்தப் பணி. பொழுதுபோக்கு என்பது வேலை மாற்றம்தானே? ஓய்வைவிட இவர்களுக்கு இந்தப் பணி அதிக இன்பமளிப்பதில் அதிசயமென்ன?

— காமு






பாத்திரங்கள்:

1. பரமேசுவரன் — ஓர் ஓய்வு பெற்ற அரசாங்க அதிகாரி.
2. பார்வதம் — அவருடைய மனைவி.
3. சாரதா — மேற்படியார்களின் ஏக புத்திரி.
4. சுரேஷ் — மேற்படியார்களின் ஏக புத்திரன்.
5. சந்திரன் — சாரதாவின் காதலன்.

### காட்சி — 1

சாரதா: ஏம்மா, அப்பா ஒரே கத்தலாகக் கத்திக் கொண்டிருக்கிறாரே, ஏன்?

பார்வதம்: அது இப்போதுதான் உன் காதில் விழுகிறதா? காலையிலிருந்து இந்தக் கூத்துத்தான். அவர் ரிட்டயராகி வீட்டில் உட்கார்ந்ததால் வந்த வினை!

சுரேஷ்: அப்பா என்னம்மா பண்ணுவார்? இத்தனை நாட்களும் அதிகாரியாக இருந்தவர். முப்பது வருஷமா கீழே உள்ளவர்களை விரட்டி விரட்டிப் பழக்கம். அது இலேசில் விட்டு விடுமா? நம்மை விளாசுகிறார்.

பார்வதம்: அதெல்லாம் ஒன்றுமில்லே. உங்கள் அப்பா ஆர்ப்பாட்டத்துக்கெல்லாம் காரணம் வேறு. அவர் நம்ம வீட்டில் ஒரு 'ப. பிளானை' அமுல் நடத்தப் போகிறாராம்.

சாரதா: ப. ப்ளானா? ஓஹோ, பரமேசுவரன் பிளானா? என்ன அது?

பார்: அவர் முப்பது வருஷ காலமா வீட்டைப் பற்றிக் கவலைப்படாமல், 'ஆபீஸ் ஆபீஸ்' என்று இருந்ததால் இங்கே வீட்டிலெல்லாம் நாசமாகப் போய் விட்டதாம். அதற்காக இனிமேல் அவருடைய உத்தியோக அநுபவத்தை வைத்து வீட்டுக் காரியங்களை யெல்லாம் அரசாங்க பாணியில் சிக்கமா நடத்திச் சீர்திருத்தம் பண்ணப் போகிறாராம்.

சுரேஷ்: ஆ! அரசாங்க பாணியிலா? என்னென்ன நடக்கப் போகிறதோ!.... இந்தக் கன்றாவிக் கூத்துக்களிலிருந்து தப்பிக் கொஞ்ச நேரம் வெளியே போய் விட்டு வருகிறேன். சினிமா பார்க்க இரண்டு ரூபாய் கொடு.

பர்: சரி சரி, போ! இந்தா ரூபாய்!

[இந்த நேரத்தில் பரமேசுவரனின் பிரவேசம்.]

பரமேசுவரன்: இங்கே என்ன பணப் பட்டுவாடா நடக்கிறது? இந்தக் காஷ் பேமெண்டுக்குப் பில் இருக்கிறதா? சாங்ஷன் ஆகி யிருக்கிறதா? லெட்ஜரிலே பதிந்தாச்சா?

பார்வதம்: என்னங்க இது! பையனுக்கு இரண்டு ரூபாய் செலவுக்குக் கொடுக்கிறதுக்குப் போய்ப் பில்லு மல்லு என்று சொல்லிக் கொண்டு......! இதுக்கெல்லாம் என்ன கணக்கு?

பரமேசு: ஓகோ! இப்படித்தான் கணக்கில்லாமல் காரியங்கள் நடக்கிறதோ! நான்சென்ஸ்! பில் இல்லாமல் பேமெண்டா? பேசப்படாது! வரவு செலவு சரியில்லாமல் அவனவன் மந்திரி பதவியை இழந்திருக்கிறான்! சும்மா விளையாட்டா? தயிர்க்காரிக்குப் பணம் கொடுத்தாலும் 'தம்ப்—இம்பிரஷ' னவது வாங்கியாகணும், ஆமா!

சுரேஷ்: சரிதான். இனிமேல் நாம் தயிர், பால் இழந்தோம். ரேகை போட்டுப் பணம் வாங்கித் தயிர் ஊற்றுகிற தயிர்க்காரிகளை இனிமேல் அமெரிக்காவிலிருந்து இறக்குமதி செய்தால்தான் உண்டு!

பரமேசு: ரொம்ப நல்லது! ஏழை இந்தியாவில் உங்களுக்குப் பால் கேட்கிறதோ பால்! நேஷனல் எமர்ஜன்ஸி வேறே அமுலில் இருக்கு, ஞாபகம் இருக்கட்டும்! (போகிறார்)

பார்வதம்: ஏண்டி சாரதா, உங்கப்பா போகிற வேகத்தைப் பார்த்தால் உன் பவுடருக்கும் ஸ்நோவுக்கும் எமர்ஜன்ஸி வந்து விடும் போல் இருக்கே!

சுரேஷ்: ஆமாம்மா. அக்காளுக்குக் காலா காலத்திலே ஒரு கலியாணத்தைச் செய்தால் தான் பிழைத்தோம்!

பார்வதம்: ஏண்டா?

சுரேஷ்: பவுடர் ஸ்நோ இத்தியாதி மேக்கப்களுடன் அக்காள் நடமாடும்போதே ஒரு மாப்பிள்ளைப் பயலும் அவளை இலட்சியம் பண்ண மாட்டேனென்கிறான். அந்த மேக்கப்புக்கும் மோசம் வந்து விட்டால் என்ன செய்வது!

### காட்சி — 2

சாரதா: ஏனம்மா, அழுகிறாய்?

பார்வதம்: பின்னே என்னடி செய்யச் சொல்கிறாய்? உங்கப்பாவுக்குப் பிடித்திருக்கிற பைத்தியத்தைப் பார்த்தால், நான் சாகிறதுக்குள் உனக்கு ஒரு கல்யாணத்தைச் செய்து பார்ப்பேனா என்று சந்தேகமாக இருக்கிறது!

சாரதா: பயப்படாதே அம்மா! அப்பா உன்னை அவ்வளவு இலேசாகச் சாக விடமாட்-

# தேவை!

**தாமரைமணாளன்**



டார். எமனிடமே, 'என்னய்யா என் மனைவியின் உயிரை வாங்கிக் கொண்டு போக சாங்ஷன் ஆர்டர் வாங்கி விட்டாயா?' என்று அனுப்பி விடுவார்.

பர்: போடி உனக்கு விளையாட்டாக இருக்கிறது. எனக்குக் கவலையாக இருக்கிறது. அந்தப் பையன் சந்திரனுக்கும் உனக்கும் கல்யாணம் நடந்து விட்டால் எனக்கு நிம்மதி. உங்கப்பா இசைகேடாக நடந்து எல்லாவற்றையும் கெடுத்து விடுவாரோ என்று பயமாக இருக்கிறது.

சாரதா: அப்படி ஒன்றும் ஆகாது அம்மா. அவர் என் மேல் உயிரையே வைத்திருக்கிறார்.

பர்: அவன் உயிரை வைத்திருக்கிறது சரி. அவன் வைக்க விடாமல் அவன் உயிரை உங்கப்பா எடுத்து விடுவாரே! ம்.... எதற்கும் உங்கப்பாவுடைய அசட்டுத்தனம் அதிகமாக முற்றுவதற்குள் பேசிப் பார்க்கிறேன்.

### காட்சி – 3

பர்வதம்: என்னங்க, சாரதா கலியாணத்தைப் பற்றி என்ன முடிவு செய்திருக்கிறீர்கள்?

பரமேசு: இப்படித் திடீரென்று கேட்டால் எப்படி? அது சம்பந்தமா ஏதாவது ஒரு ரிப்போர்ட் கொடு. நடவடிக்கை எடுக்கிறதைப் பற்றி யோசிக்கிறேன்.

பர்வதம் (எரிச்சலுடன்): நீங்க ஒன்றும் புதிசா யோசிக்க வேண்டாம். மாப்பிள்ளையைப் பற்றி ஏற்கனவே முடிவு செய்தாகி விட்டது. மாப்பிள்ளை வக்கீல் வரதப்பருடைய பிள்ளை சந்திரன். ரொம்ப நல்ல இடம். சாரதாவும் சம்மதப்பட்டு முடிவு சொல்லி விட்டாள்!

பரமேசு: என்ன இது! சாரதா முடிவு சொல்லி விட்டாள் என்கிறாய்! என்னிடமும் முடிவு கேட்கிறாய்! ஒரே குழப்பமாக இருக்கிறதே! சட்டப்படி முடிவு சொல்லுகிற அதிகாரம் யாருக்கு? அதைப் பற்றி ஒரு பெரிய வக்கீலை வேண்டுமானாலும் கலந்தாலோசித்துச் சட்டப் பாயின்டோடு விவரமா ஓர் அறிக்கை எழுதிக் கொண்டு வா.

பர்வதம்: கர்மம், கர்மம்! ஒன்று சொல்கிறேன், கேட்டுக் கொள்ளுங்கள். காலா காலத்திலே ஒரு பெண்ணைப் பெற்ற தகப்பனாரா, இலட்சணமா நடந்து கொண்டால், முடிவு பண்ணுகிற அதிகாரம் உங்களிடம் இருக்கும். இல்லையென்றால் அவளே முடிவு செய்து முடித்துக் கொள்ளுவாள்!

பரமேசு: ஓகோ! அதிகாரத்தை இப்படி இரண்டாகப் பிரித்துக்கொடுத்திருக்கிறார்களா! நானே உடனடியாக நடவடிக்கையை எடுக்கிறேன். என்ன செய்ய வேண்டும் சொல்லு.

பர்வதம்: முதலில் பத்தாயிரம் ரூபாய் பணத்தைத் தயார் செய்யுங்கள்.

பரமேசு: பத்தாயிரமா? எதற்கு?

பர்வதம்: வரதட்சிணை, சீர் கொடுக்க வேண்டாமா?

பரமேசு: வரதட்சிணையா, அதையெல்லாம் ஒழிக்க எப்போதோ சட்டம் போட்டாயிற்று!

பர்வதம்: ஆமாம்! வரதட்சிணை கொடுக்கக் கூடாது என்றுதான் சட்டம் போட்டிருக்கிறது. வரதட்சிணை கொடுக்காததனால் கல்யாணமே ஆகாமல் இருக்கும் பெண்களை எந்தக் குளத்தில் தள்ளுவது என்று இன்னும் சட்டம் போடலை. கொடுக்க வேண்டியதைச் சீர் என்ற பெயரிலாவது கொடுத்தாகணும்.

பரமேசு: பேரை மாற்றி அட்ஜஸ்ட் பண்ணிக் கொண்டால் சரி. சட்டத்தை மீறக் கூடாது. அவ்வளவுதான்! ஆமாம்! மாப்பிள்ளைக்கு எவ்வளவு கொடுக்கணும்?

பர்: ஐயாயிரமோ, ஆறாயிரமோ அவங்க கேட்கிறதை அநுசரித்துக் கொடுக்கவேண்டும்!

பரமேசு: நோ! நோ! அவங்க கேட்கிறபடி கொடுத்து விடுவதா? கூடவே கூடாது. அது பொருளாதார தத்துவத்துக்கே விரோதம். ஆயிரக்கணக்கான பண விவகாரத்திலே எக்கனமிக்கல் பாலிஸிபடிதான் நடக்கணும். பேசாமல் பேப்பரிலே விளம்பரம் போட்டு டெண்டர் கேட்டுடுவோம்.

பர்: என்னது டெண்டரா?

பரமேசுவரன்: ''சல்லிசான தொகைக்கு ஒரு மாப்பிள்ளை அவசரமாகத் தேவை! உடனே சகல விவரங்களுடன் மனுச் செய்து கொள்ளவும். குறைந்த தொகைதாரருக்குப் பெண்ணை ஜாரி செய்து தரப்படும்'' என்று விளம்பரம் கொடுத்து விடுவோம்!

பர்வதம்: கர்மம், கர்மம்! இப்படி விளம்பரம் போடுங்கள். தெருவிலே இருக்கிற அத்தனை பிச்சைக்காரனும் அநாதைகளும் மனுக்கொடுப்பானுக.

பரமேசு: ஓ. கொடுக்கட்டுமே! இந்திய அரசியல் சாஸனப்படி எல்லாருக்கும் சம வாய்ப்புக் கொடுத்தாகணும், தெரியுமோ!

பர்வதம்: ஒரு கன்றாவியும் வேண்டாம். அந்தப் பையன் சந்திரனுக்கே முடிப்போம்.

பரமேசு: நீ ஏன் அந்த ஒரே பையனுக்கே சிபாரிசு செய்கிறாய்? எனக்குச் சந்தேகமாக இருக்கிறது. அவன் ஏதாவது இலஞ்சம் கொடுத்தானா? லஞ்ச ஒழிப்பு அதிகாரிக்கு ரிப்போர்ட் செய்து விடுவேன், ஜாக்கிரதை!

பர்: ஆண்டவா! நீதான் என் பெண்ணைக் காப்பாற்ற வேண்டும்!

## காட்சி — 4

சந்திரன்: சாரதா! உங்கப்பா இப்படி விளம்பரம் கொடுத்திருக்கிறாரே, அவருக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறதா?

சாரதா: ஒன்றும் இப்போது சொல்வதற்கில்லை. எங்க வீட்டில் இப்போது எங்கப்பாவுக்கும் எங்களுக்குமாக ஒரு பலத்த மூளைப் போராட்டம் நடந்து கொண்டிருக்கிறது. முடிவில் யாருக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறது என்று ஒரு வாரம் கழித்துப் பேப்பரில் வெளியாகும்போதுதான் தெரியும்.

சந்தி: இப்போது என்னை என்ன செய்யச் சொல்லுகிறாய்?

சாரதா: எனக்காக நீங்களும் ஒரு மனுப் போடுங்கள்.

சந்திர: ஐயய்யோ! மனுவைப் போட்டு விட்டு உங்கப்பாவுடைய பைத்தியக்காரத் தனத்தில் என்னையும் மாட்டிக் கொள்ளச் சொல்கிறாயா ?

சாரதா: இவ்வளவுதானா உங்கள் அன்பு! உங்களால் சமாளிக்க முடியாதா என்ன?

சந்திரன்: ஓகோ! உங்கப்பாவுடைய பைத்தியத்தைச் சமாளிக்கக் கூடிய சரியான ஜோடிப் பைத்தியம் நான்தான் என்கிறாயா? ம்....உனக்காக எழுதுகிறேன்!

## காட்சி — 5

பரமேசுவரன்: டேய் சுரேஷ்! இன்றைக்குத்தானே கலியாண மனுக்கள் விசாரணை? மனுதாரர்களுக்கு ஒழுங்காக நோட்டீஸ் அனுப்பி விருந்தாயா?

சுரேஷ்: எல்லாருக்கும் அனுப்பியிருந்தேன். எல்லாரும் இப்போ வரணும்.

பர: சரி, சரி. எல்லா மனுக்களையும் பிரித்துக் குறிப்பு எழுது.

சுரேஷ்: எல்லாம் பிரித்து விட்டேன்.

பரமேசு: மொத்தம் எத்தனை?

சுரேஷ்: கரெக்டா நூறு. அதை இரண்டு பிரிவா பிரித்திருக்கிறேன்.

பரமேசு: என்ன?

சுரேஷ்: காலாவதி மனுதாரர்கள் எல்லாம் ஒரு பிரிவு.

பரமேசு: காலாவதி மனுதாரர்களா ?

சுரேஷ்: ஆமாம், அறுபத்து ஐந்து வயதுக்கு மேற்பட்ட மனுதாரர்கள். எல்லாரும் ரிட்டையர்ட் மாப்பிள்ளைகள்!

பரமேசு: ஓ, ஐ ஸி!

சுரேஷ்: அவங்க மனுக்கள் 99 வந்திருக்கிறது! ஆனால் அவர்கள் டெண்டர்தான் ரொம்ப லாபகரமா யிருக்கிறது. ஒருவரும் பணமே கேட்கவில்லை! பெண் போதுமாம்!

பரமேசு: பிரமாதம்! என் பிள்ளை அழகாக வேலை செய்கிறது. ஆங், அடுத்த மனு யாருடையது?

சுரேஷ் : சந்திரனுடையது.

பரமேசு : சரி! டயம் ஆகி விட்டது வந்திருக்கிறவங்களை இண்டர்வ்யூவுக்கு அனுப்பு

(சுரேஷ் வெளியே போய் வருகிறான்)

சுரேஷ்: அப்பா, சந்திரன் ஒருவர்தான் வந்திருக்கிறார்.

பரமேஸ்: மற்றவங்க?

(அச்சமயம் வேலைக்காரன் ஒரு கட்டுத் தந்திகளுடன் வருகிறான்)

வேலைக்காரன்: மொத்தம் 99 தந்தி வந்திருக்குங்க.

பரமே: சுரேஷ்! எல்லாவற்றையும் படி.

சுரேஷ் (வாசித்தவாறு): அப்பா, எல்லாம் நம்ம காலாவதி மனுதாரர்களிடமிருந்து வந்திருக்கிறது. எல்லாருமே இண்டர்வியூவைத் தள்ளி வைக்க வேண்டும் என்று கேட்கிறாங்க.

பரமேசு: ஏனாம்?

சுரேஷ்: ஒருவருக்குத் திடீரென்று காலில் வாதம் அதிகமாகி விட்டதாம், நாளைக்கு வருவாராம்! இன்னொருவருடைய மூக்குக் கண்ணாடியை அவருடைய பேரன் உடைத்து விட்டானாம்; புதுக் கண்ணாடி வாங்கி மாட்டிக் கொண்டு வருவாராம்! மற்றொருத்தருக்கு ஆஸ்த்மாவாம்.....!

பரமேசு: போதும் நிறுத்து! இந்த மாதிரி சால்ஜாப்பெல்லாம் என்னிடம் நடக்காது. டயத்துக்கு வரவில்லையென்றால் ரத்து பண்ண வேண்டியதுதான்.

சுரேஷ்: என்னப்பா, தாத்தாக்களுடைய மனுக்களையா தள்ளுபடி செய்வது? அவை தானே மலிவு டெண்டர்கள்?

பரமேசு : ஐ டோண்ட் கேர்! இன்னொரு டெண்டர் கேட்டேனா, இவங்களென்ன, இவங்களோட தாத்தாக்களெல்லாம் கிடைப்பார்கள். கவலைப்படாதே! அந்தச் சந்திரனையும் வரச் சொல். (சந்திரன் நுழைதல்)

பரமேசு: மிஸ்டர் சந்திரன்! உங்கள் மனுவைப் பார்த்தேன். அதை எப்போதோ தள்ளுபடி செய்ய வேண்டியது! ஆனால் மற்ற மனுதாரர்கள் வராததால்தான் உங்கள் மனுவைப் பரிசீலிக்க வேண்டியதாகி விட்டது.

சந்திரன்: ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்?

பரமேசு: உங்கம்மா விரும்புகிற ஆயிரம் ரூபாய்க்காவது சீர் வரிசை செய்ய வேண்டும் என்று எழுதியிருக்கிறீர்கள். அதுவே தள்ளுபடி செய்யப் போதுமான காரணம். மற்ற ஒரு மனுதாரரும் அப்படிக் கேட்கவில்லை.

சுரேஷ் (குறுக்கிட்டு): அப்பா! மற்ற ஒருவருக்கும் அம்மா கிடையாது. அதனால்தான் கேட்கவில்லை போல் இருக்கிறது. ஆனால் ஒருவர் எழுதியிருந்தார். அவருடைய பேத்தி விருப்பப்படி நூறு ரூபாய்க்காவது சீர் செய்ய வேண்டும் என்று குறித்திருந்தார்.

பரமேசு: நீ குறுக்கே பேசாதே! ஆயிரம் ரூபாய்க்கு நூறு ரூபாய் எவ்வளவு லாபம்! ஆங், மிஸ்டர் சந்திரன் உங்க கேஸ் இன்னொரு விஷயத்திலும் மோசமாக இருக்கிறது.

சந்திரன்: என்ன சார்?

பரமேசு: அதுதான் முன் அநுபவ சமாசாரம்! மற்றவங்களெல்லாம் நல்ல அநுபவசாலிகள்! இரண்டு மூன்று கல்யாணம் வரை செய்தவர்கள். இதில் உங்க விஷயம் ரொம்ப பூஜ்யம். முன் அநுபவமில்லாத சிப்பந்திகளை வைத்து வேலை வாங்குகிறது எவ்வளவு கஷ்டம் என்று என் முப்பது வருஷ சர்வீஸில் தெரிந்து வைத்திருக்கிறேன்.

சந்: எனக்கும் தெரியும் சார். நானும் அரசாங்க ஊழியன்தான் சார்.

பரமேசு: அப்படியா? பரவாயில்லையே ! உங்களிடமும் கொஞ்சம் நல்ல அம்சம் இருக்கிறது போலிருக்கே!

சந்: அது மட்டுமல்ல, சார்! இன்னொரு விஷயத்திலே நான் உங்க சிஷ்யன் மாதிரி.

முற்றும் புதியது!

# 3 ரம்மியமான, புகழ் பெற்ற வாசனைகள்...
# கால்கேட் பெர்பியூம்டு கோகோனட் ஹேர் ஆயில்

**உங்கள் கேசத்திற்குப் போஷாக்கும் நறுமணமும் கொடுத்து புதிய வசீகரத்தையளிக்கிறது**







**கால்கேட்டிலிருந்து மிகவும் பரபரப்பூட்டும் ஹேர் ஆயில் செய்தி**

தினந்தோறும் கால்கேட் பெர்பியூம்டு கோகோனட் ஹேர் ஆயிலைக் கேசத்தில் தேய்த்துக்கொள்ளுவது நீண்ட, செழிப்பான வெளிவெளியான கூந்தல் வளர்ச்சியை விருத்திசெய்ய உதவுகிறது. உங்கள் கூந்தலுக்குப் புத்துயிரும், பளபளப்பும் அளித்து அதைச் செழிக்கச் செய்கின்றது...மேலும் உங்களுக்குப் பிடித்தமான கூந்தல் அலங்கரிப்பை எடுத்துக்காட்டும்படி செய்யும் விசேஷ காந்தியையும், இலகுவான அமைப்பையும் அளிக்கிறது.




3 வசீகரிக்கும் சுகந்தங்களில்
ரோஜா
லவண்டர்
மல்லிகை

## புதியது! கால்கேட் பெர்பியூம்டு கோகோனட் ஹேர் ஆயில்

**உங்கள் கேசத்தை அழகுபடுத்தி நறுமணமளிக்கிறது**




உங்கள் கேசத்தின் உண்மையான அழகை வெளிப்படுத்த உதவுவதும்...
உங்கள் குடும்பம் முழுவதும் மிகவும் விரும்பும் நறுமணம் கொண்டதுமான

## கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயிலுடன்

மற்றொரு சேர்த்தியான துணைத்தயாரிப்பு

COHO. G.G TAM.

# காஷ்மீர் பொக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும் புதுமையுடனும் இருங்கள்



உன்னதமான காஷ்மீர் பொக்கேயின் தரம், ஒரு அழகுசாதன டால்க்... ஒரு குழந்தைக்கான பவுடர் இவ்விரண்டையும் அளிக்கிறது.

காஷ்மீர் பொக்கே டால்க்கின் குளுமையான, பூவிதழ்போன்ற மென்மையான ஸ்பரிசத்தை நீங்கள் உணரும்பொழுது ஒரு பூச்செண்டிற்குள் இருப்பது போலவே தோன்றும். உடல் முழுவதும் தடவிக் கொண்டு அதன் ஊற்றுப்பெருக்கென எழும் புதிய நறுமணத்தில் திளைத்து மகிழுங்கள்



குழந்தையை இதமுடனும் சுகமுடனும் வைத்திருங்கள். காஷ்மீர் பொக்கே, எந்த ஒரு விசேஷ குழந்தைக் கான பவுடரைப் போலவே, மிருதுவும் பட்டுப்போன்றதுமானது. நீங்கள் இருவருமே உபயோகிக்கக்கூடிய அவ்வளவு சௌகரியமான ஒரே பவுடர்!




## காஷ்மீர் பொக்கே

'டால்கம் பவுடர்—ஆடவர் விரும்பும் சுகந்தமுள்ளது!'

பரமேசு: என்ன?

சந்: நீங்க எதையும் நம்ப உத்தியோக பாணியிலேயே செய்வீர்களாம். எனக்கும் அப்படிச் செய்வதுதான் பிடிக்கும்.

பரமேசு: ஆகா! நீங்களே எனக்கு ஏற்ற மாப்பிள்ளை. உங்க மற்றக் குறைகளை மன்னிக்கிறேன். டேய் சுரேஷ், அம்மா அக்கா எல்லாரையும் கூப்பிடு. (எல்லாரும் வருகிறார்கள்)

பரமேசு: பார்வதம், மாப்பிள்ளை செலக்ஷன் ஓவர்! இந்த 87ம் நம்பர் மனுதாரரான சந்திரனை செலக்ட் பண்ணியாச்சு.

பார்வதம் (மகிழ்ச்சியுடன்): அப்படியா?

பரமேசு: இவரை எனக்குப் பிடித்திருக்கிறது. அவரும் என்னைப்போலவே அரசாங்க பாணியிலே காரியம் பண்ணுவாராம்!

சந்: சார்! அப்போ அக்ரிமெண்ட் எழுதிக் கொடுத்து விடுகிறீர்களா?

பரமேசு: என்ன அக்ரிமெண்ட்?

சந்: அதுதான் உங்க பெண்ணை எனக்குக் கொடுக்கிறதாக ஒப்பந்தம்!

பரமேசு: எஸ் எஸ்! என் பிள்ளை என்னை விடப் பிரமாதமா நீங்க கடைப்பிடிக்கிறீர்!

பார்வதம் (சாரதாவிடம்): என்னடி இது, கூத்து! பைத்தியத்தில் ஒருவரை யொருவர் மிஞ்சி விடுவார்கள் போல் இருக்கிறதே!

சாரதா: அவர் அப்பாவுடைய அறைக்குள் நுழையும் வரை நன்றாக இருந்தாரே!

பரமேசுவரன் (சந்திரனிடம்): இந்தாங்க ஒப்பந்தம்! சரி, இனி கல்யாணத் தேதி நிச்சயம் பண்ணி விடலாம். அது சம்பந்தமா ஜோசியரைக் கலந்து ஓர் அவசர அறிக்கை அனுப்புங்க.

சந்திரன்: கல்யாணத் தேதிக்கு என்ன அவசரம்? உங்க ஒப்பந்தத்தை நம்ப அரசாங்க பாணியிலே பரிசீலனை செய்ய வேண்டாமா?

பரமேசு (திகைப்புடன்): என்ன பரிசீலனை?

சந்திரன்: என் மைத்துனர் குடும்பம், மாமா குடும்பம், சித்தப்பா குடும்பம் என்று ஏகப்பட்ட டிபார்ட்மெண்டுகள் இருக்கின்றன. ஒவ்வொருத்தருடைய அபிப்பிராயத்துக்கும் உங்க ஒப்பந்தத்தை அனுப்ப வேண்டும். அவங்க அபிப்பிராயத்தை வாங்கி நானும் எங்கப்பாவும் பரிசீலனை பண்ண வேண்டும். இதெல்லாம் முடிய எப்படியும் பத்து வருஷங்கள் ஆகும். அதற்குப் பின்னாலே கல்யாணத் தேதி நிச்சயம் பண்ணுவோம்.

பரமேசு: என்னய்யா விளையாடுகிறீர்! உம்முடைய செலக்ஷன் ரத்து!

சந்திரன்: ஓகோ, நான் விட்டு விடுவேனா? நீங்க எழுதிக் கொடுத்த ஒப்பந்தம் என்னிடம் இருக்கிறது. ஜெயிக்கிறதோ இல்லையோ, சுப்ரீம் கோர்ட் வரை போவேன்!

பரமேசு: என்னய்யா வம்பு? விடமாட்டேனென்கிறீர்! உம் நோக்கம்தான் என்ன?

சந்திரன்: என் காதலி சாரதாவையும் இழக்க மாட்டேன். என் அருமை மாமனாரின் பிளானையும் விட மாட்டேன். பத்து வருஷங்கள் கழித்து ஜாம்ஜாமென்று கல்யாணம்! நமக்கெல்லாம் பத்து வருஷத் தாமதமெல்லாம் தண்ணீர்ப்பட்ட பாடாச்சே!

பார்வதம்: ஐயோ! இரண்டு பேரும் பேசுகிறதைப் பார்த்தால் யாருக்காவது ஒருவருக்கு உண்மையிலேயே பைத்தியம் பிடித்து விடும் போல் இருக்கிறதே!

பரமேசு: ஹ! ஹா! (திடீரென்று அட்டகாசமாகச் சிரிக்கிறார்.)

சுரேஷ்: அம்மா! அப்பா சிரிக்க ஆரம்பித்து விட்டார். நீ சொன்னபடி அப்பாவுக்குப் பைத்தியம் பிடிக்க ஆரம்பித்து விட்டது. இனி மாப்பிள்ளையைப் பற்றிக் கவலை இல்லை.

பரமேசு: ஹா! ஹா! (மீண்டும் சிரித்தவாறு) எனக்குப் பைத்தியம் இல்லை. இது வரை அப்படி நடித்தேன். பிளான் அது இது என்று அசட்டுத்தனமா கெடுபிடி செய்தாலும் மாப்பிள்ளைக்கு நம்ப பெண் மேல் அன்பு குறையாமல் இருக்கிறதா என்று சோதித்தேன். அவ்வளவுதான். மாப்பிள்ளை வென்று விட்டார். மாப்பிள்ளை, இனி நாம நம்ப பிளானை விட்டு விடுவோமே!

சந்: நீங்க விட்டால் நான் விட்ட மாதிரி தான். நீங்க விடறதுக்காகத்தானே நான் அதைக் கடைப்பிடித்தேன். இனி பத்து நாளைக்குள் கல்யாணம் என்றாலும் நான் தயார்!

பார்வதம்: அப்பாடா, பிழைத்தோம்! எங்கே குடும்பத்தோடு கீழ்ப்பாக்கம் ஆஸ்பத்திரிக்குக் குடியேற வேண்டியதிருக்குமோ என்று பயந்து கொண்டிருந்தேன்.

சுரேஷ்: என்ன அக்கா இது! அப்பா இத்தனை நாளும் பிளான் பிளான் என்று குதித்தார். திடீரென்று அத்தான் கையில் சிக்கிக் கொண்டதும் பிரமாதமாக நடிப்பு, துடிப்பு என்று சமாளிக்கிறார்! ஒரே வேடிக்கையாக இருக்கிறதே!

சாரதா: ஒரு வேளை இதுவும் ஏதாவது ஒரு கவர்மெண்ட் மாடல் சமாளிப்பாக இருக்கும், யார் கண்டது?

(எல்லாரும் சிரிக்கிறார்கள்.)

## வெள்ளித்திரை — நேயர் விமர்சனம்

அடுத்து விமர்சனத்துக்கு எடுத்துக் கொள்ளப்படும் படங்கள்:

1. வீராங்கனை

விமர்சனங்கள் வந்து சேர வேண்டிய கடைசித் தேதி: 12-9-64

2. புதிய பறவை

விமர்சனங்கள் வந்துசேர வேண்டிய கடைசித் தேதி: 19-9-64

# பாமினிப் பாவை

## 6. ஈட்டி பாய்ந்தது

துங்கபத்திரையாற்றின் வடகரையிலே வரிசையாகப் பல கூடாரங்கள் அமைக்கப் பட்டிருந்தன. அவற்றினிடையே பிரதானமாக உயர்ந்து நின்றது ஒரு கூடாரம். ஒவ்வொரு கூடாரத்தின் வாசலிலும் பெரிய இரும்புக்கொப்பரை. இரவின் தொடக்கத்தில் தீவட்டிகளாகக் கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்த கட்




டைகள் இப்போது அதில் கங்குகளாகக் கனிந்து கொண்டிருந்தன. அந்தப் பிராந்தியம் முழுவதிலுமே வெள்ளியை உருக்கி ஓடவிட்டதுபோல வெண்ணிலவு காய்ந்து கொண்டிருந்தது. கூடாரங்களின் உள்ளேயும் வெளியேயும் போர்வீரர்களும் அதிகாரிகளும் அவரவர் தகுதிக்கேற்ப உறங்கிக் கொண்டிருந்தார்கள். ஒரு சிலர் பொங்கிச் சொரியும் பால் நிலவைப் பாழாக்க விரும்பாமல் ஆங்காங்கே தங்கள் ஆசை நாயகிகளுடன் நதிக்கரையின் மணல் பரப்பில் மயங்கிக் கிடந்தார்கள். குதிரைகள் கட்டப்பட்டிருந்த கூடாரங்களிலிருந்து எழும் கனைப்பொலி இரவின் ஆட்சிக்குக் கட்டியங் கூறுவது போல் இருந்தது.

விஜயநகரத்து மாமன்னரிடம் விடைபெற்றுக் கொண்டு கிளம்பிய பீஜப்பூர் சுல்தான் அலி ஆதில்ஷா

தான் அங்கு அப்படிப் பாடி இறங்கியிருந்தார். அவ்வினிய இரவின் இரண்டாவது ஜாமத்திலும் ஆதில்ஷாவின் கூடாரத்தினுள் பிரகாசமான விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. பேச்சுக் குரலும் கேட்டது. கூடாரமா அது? அரண்மனையே இடம் பெயர்ந்து வந்திருப்பது போல் இருந்தது. அந்தக் கூடாரத்தினுள்ளே காணப்பட்ட பகட்டும் படாடோபமும். அரண்மனையின் அத்தனை வசதிகளும் அதனுள் இருந்தன. கூடாரமாகவே தெரியாதபடி விரிப்புக்களும் வேலைப்பாடமைந்த படுதாக்களும் அதை அலங்கரித்தன. நடுவிலே உயரமாகப் பல திண்டுகள் போடப்பட்டிருந்தன. அங்கு ஆடலும் பாடலும் அமர்க்களப்பட்டிருக்க வேண்டும் என்பதற்கான அடையாளங்கள் காணப்பட்டன. ஆடல் மங்கையர் பலர் ஆங்காங்கே களைத்துப் போய் உறங்கிக் கொண்டிருந்தனர். வாத்தியங்களைத் தழுவியபடியும் அதன் மீதே சாய்ந்தபடியும் சில மங்கையர் மயங்கிக் கிடந்தனர். தங்கள் வனப்பால் வெறியூட்டியது போதாதென்று, விழித்திருந்து விவகாரம் பேசும் காளையருக்குக் கிண்ணங்களிலே மதுவையும் நிரப்பி வழங்கிக் கொண்டிருந்தார்கள் சில கட்டழகிகள்.

மது — மங்கையரின் போதையிலே மயங்கித் திண்டிலே சாய்ந்து அரைக் கண் மூடிய நிலையிலிருந்தும்கூட அடிக்கொரு தடவை, ஹுக்காவைப் புகைக்க மறக்கவில்லை அலி ஆதில்ஷா. மாபெரும் இந்து சாம்ராஜ்யத்தின் மன்னராக மதிக்கப்படுபவரைத் தன் தந்தையாக்கிக் கொண்டு திரும்புகிறோம் என்ற பெருமிதத்திலே இறுமாந்திருந்த அவர் நெஞ்சிலே நஞ்சூட்டலானார்கள் ஆதில்ஷாவின் முகமதியப் பிரபுக்களில் சிலர். ஆதில்ஷாவின் அவையை அலங்கரிக்கும் அவர்களுக்கு இந்துப் பேரரசோடு இழைவது ஏனோ பிடிக்கவில்லை.

''ஆலம்பனுவைத் தன் மகனாக்கிக்கொண்ட ராமராயர், அவர் விடை பெற்றபோது வழியனுப்ப வந்தாரா பார்த்தீர்களா?'' என்றார் ஒருவர் தமது சாயமேற்றிய செப்புத் தாடியைத் தடவிக் கொண்டே மற்றவரிடம்.

''எல்லாம் வேஷம்! அந்தக் கிழட்டுப் புலி ஆதில்ஷா அவர்களுக்கு இப்படி ஆசை காட்டி இருப்பது என்ன மோசத்துக்கோ?'' என்றார் மற்றவர் மதுவைச் சுவைத்துக் கொண்டே.

''நம்மை விடப் பரந்த சாம்ராஜ்யத்தை நிர்வகிக்கும் ராயருக்கு எத்தனையோ அலுவல்கள் இருக்கலாம். வழியனுப்ப வராததை ஒரு குற்றமாகக் கருதிக் குறை கூறுவது விரும்பத்தக்கதல்ல'' என்றான் சித்திஹாஸன் தனது சிங்கக் குரலில். அபிசீனியா தேசத்தைச் சேர்ந்த அந்த அஞ்சா நெஞ்சம்படைத்த வீரன். அவன்தான் பீஜப்பூரின் பிரதம சேனாபதி. ஆதில்ஷாவின் அந்தரங்கத்துக்கு உரியவனும்கூட. ''சேனாபதி விஜயநகரத்தின் புகழ் பாடட்டும். ஆனால் அதற்காக நம்மைத் தாழ்வுபடுத்திப் பேச வேண்டாம்'' என்றார் தாடிக்காரர், ஏதோ பெரிதாகத் தன்மானத்தைக் காப்பாற்ற வந்தவரைப் போல. சித்திஹாஸனின் செல்வாக்கிலே என்றைக்கும் ஒரு பொறாமை அவருக்கு.

சித்திஹாஸன் பதில் சொல்லுமுன் ஹுக்காவிலிருந்து புகையை உறிஞ்சி விட்டு ஆதில்ஷாவே பேசலானார். ''ஒருவர் காட்டும் அன்பைப் பற்றி ஆராய்ச்சி செய்வது அழகல்ல. சந்தேகக் கண் கொண்டு பார்ப்பவர்களுக்கு எதிலுமே ஏதாவது கோளாறு தோன்றத்தான் செய்யும்.''

''கல்தான் அவர்களுக்குத் தெரியாததல்ல. பீஜப்பூரின் பெயரைக் கேட்டாலே விஜயநகரத்தார் பீதியடைந்திருந்த காலமும் ஒன்று உண்டு. இன்றைக்கு நாம் அவர்களின் நட்பை நாடிப் போக வேண்டியதாகி விட்டதே என்றுதான்.....''

தன் செயலையே குத்திக் காட்டும் அவருடைய பேச்சைப் புரிந்து கொண்ட ஆதில்ஷா அமைதியாகவே பேசினார். ''பழம் பெருமையை நினைத்துப் பேசுவதில் என்ன பலன்? என் தந்தைக்கு விஜயநகர மன்னர் உதவியிருக்கா விடில் இன்றைக்கு நான் பீஜப்பூரின் அரியணையிலே அலங்காரமாக வீற்றிருக்க முடியுமா? அன்றைக்கு என் தந்தைக்கு உதவினார். இன்று என் தந்தையாகவே ஆகி விட்டார்'' அலி ஆதில்ஷாவின் குரல் தழுதழுத்தது.

கல்தானின் பேச்சும் போக்கும் அவையை அலங்கரிக்கும் முஸ்லிம் பெருமக்களுக்குப் பிடிக்கவே இல்லை. ஆனால் தங்கள் வெறுப்பை எப்படிக் காட்டிக் கொள்வது? கல்தானோ இள வயதினர். எதிலும் பிடிவாதம் பிடிப்பது அவரது குணம். ஆகவே தங்கள் மனக் கசப்பை மதத்தின் பேரிலேற்றிக் காண்பித்தார்கள்.

''இஸ்லாத்தை இழிவு படுத்துவதற்காக அந்தக் காபிர் கையாளும் தந்திரம்தான் இந்த ஒட்டாத உறவு முறைகள். ஷாயன்ஷா இதில் மயங்கி விழ வேண்டாம் என்றுதான்...'' என்றான் ஒருவன்.

அவன் முடிக்காமல் விழுங்கியதும் அடுத்தவன் தொடர்ந்தான். ''நம் இனத்தவருக்குச் சலுகைகள் காட்டிச் சமமாகப் பாவிப்பதாகக் கூறுவதெல்லாம், முஸ்லிம்களாகிய நாம் இந்துவாகிய அவரை வணங்க வேண்டும் என்பதற்காகத்தான்.....'' என்று விவகாரத்திலே விஷத்தைக் கலக்கலானான்.

இதைக் கேட்ட ஆதில்ஷாவும் சித்திஹாஸனும் கலகல வென்று கண்களில் நீர் கசியச் சிரிக்கலானார்கள். ''முஸ்லிம்களுக்கு ராமராயர் தம் ஆட்சியில் பட்டமும் பதவிகளும் கொடுப்பது நம்மை வணங்கச் செய்வதற்காக என்று வாதமிடுகிறீர்கள்? முஸ்லிம்கள் வணங்குவது ராமராயரை அல்ல என்ற ரகசியம் உங்களுக்குத் தெரியுமா?''

''அப்படியானால்....?'' என்று அதிர்ச்சியடைந்தார்கள் அந்த முஸ்லிம் பெருமக்கள்.

''ராமராயர் தர்பாரில் இருக்கும் போது தம் பக்கலில் ஒரு பேழையை வைத்துக் கொண்டிருக்கிறாரே, அதாவது தெரியுமா ?''

''கேள்விப்பட்டிருக்கிறோம். தங்கள் நாட்டின் செல்வச் சிறப்பை விளம்பரப்படுத்திக் கொள்வதற்காக, கண்டவர்களுக் கெல்லாம் பரிசில்களை வாரி வழங்குவதற்கான பொற்குவியல்களைக் கொண்ட பேழையாக இருக்கலாம் அது...''

'' அதுதானில்லை...... அதில் உள்ள ரகசியமே வேறு'' என்று தம் தளபதி சித்திஹாஸனைப் பார்த்துப் பொருள் பொதிந்த புன்னகை யொன்றை மலர விட்டார் அலி ஆதில்ஷா.

விவகாரம் பேசியவர்கள் விழித்தார்கள்.

அந்த ரகசியத்தைச் சித்திஹாஸனே அவர்களுக்கு விளங்க வைக்கட்டும் என்றுதானோ என்னவோ ஆதில்ஷா மறுபடியும் ஹுக்காவின் புகையை ரசிக்கலானார்.

மன்னரின் மனத்தைப் புரிந்து கொண்ட சித்திஹாஸன், ''விஜயநகர வேந்தர் காபிரியானாலும் இஸ்லாத்தை இழிவுபடுத்த வேண்டும் என்ற இழி குணம் படைத்தவரல்ல. தமது தலைமையை ஒப்புக் கொண்டு தம்மிடம் சேவகம் செய்ய வரும் முகம்மதியர்களின் உணர்ச்சிகளைப் புண்படுத்தக் கூடாதென்பதில் அக்கறை கொண்டுள்ளவர் ராமராயர். தமக்கு வணக்கம் செலுத்த வரும் முஸல்மான்கள் ஒரு ஹிந்துவுக்குத் தலை தாழ்த்துவதா என்று முகம் சுருங்கக் கூடாதென்பதற்காகவே நமது புனித வேதமான திருக் குர்ரானின் ஒரு பிரதியைத் தம் அருகில் உள்ள அந்தப் பேழையில் வைத்திருக்கிறார். நம் இனத்தவர் வணங்குவது இந்து மன்னரான ராமராயரையல்ல; நபிகள் நாயகம் நமக்களித்துச் சென்றுள்ள பொக்கிஷத்துக்குத்தான்!' என்றபோது வாதமிட்டோர் வாயடைத்துப் போனார்கள். 'அப்படியும் இருக்குமா?' என்று அதிசயப்பட்டார்கள். 'அப்படித்தான்' என்பதை ஆதில்ஷாவே அறுதியிட்டு உறுதியாக்கிய போது அவர்களுக்கு மேலே பேசுவதற்கு ஏதுமில்லாமல் போயிற்று. ஏதோ எண்ணத்துடன், ராமராயரின் செய்கையை விமர்சிக்கப் புகுந்தவர்கள் ஏமாற்றமடைந்து போனார்கள்.

இரவு வெகு நேரமாகி விட்டது என்பதைத் தனது கொட்டாவியால் நினைவு படுத்தினான் சித்திஹாஸன்.

எழுந்திருந்தார் ஆதில்ஷா. தமது ஏகாந்தமான இடத்துக்குப் போக அடியெடுத்து வைத்த போது நிலை தடுமாறினார். அது மதுவின் மயக்கத்தினாலல்ல. ஏனென்றால் சுல்தான் அன்று அதை அதிகமாகச் சுவைக்கவில்லை. உடலின் அசதியோடு உறக்கம் வேறு அவர் கண்ணிமைகளைக் கனக்க வைத்திருந்தது. கட்டிளங் கன்னியர் இருவரின் கைத்தாங்கலில் கண்ணயரச் சென்றார் பீஜப்பூர் சுல்தான்.

ஆடிக் களைத்து ஆழ்ந்த நித்திரையிலே அலமந்து கிடந்த ஆடல் மங்கையரை ஆளுக்கொருவராக அள்ளி அணைத்தபடி வெளியேறினார்கள் — இத்தனை நேரம் ஆதில்ஷாவுடன் அமர்ந்து உரையாடிய பிரபுக்கள். இப்போது அந்தக் கூடாரத்திலே சித்திஹாஸன் மட்டுமே இருந்தான். இல்லை — இத்தனை நேரம் அவர்களின் மதுக் கோப்பைகளை நிறைக்கும் பணியைச் செய்து கொண்டிருந்த அந்தச் சுந்தரியும் கூட இருந்தாள்.

கருங் குன்றைப் போன்ற உடலும கம்பீரமான தோற்றமும் கொண்ட பீஜப்பூரின் பிரதம சேனாபதியான சித்திஹாஸன் சிந்தனையிலே மூழ்கிக் கிடந்தான். கூடாரத்தினுள் எரிந்து கொண்டிருந்த பிரகாசமான விளக்குகளையெல்லாம் அணைத்தபின் மயக்கத்தைத் தரும் மங்கலான ஒளியை மட்டும் நிறுத்தி விட்டுத் தளபதியின் அருகே உரிமையோடு வந்து ஒயிலாக அமர்ந்து கொண்டாள் அவள். நீண்டு கிடந்த அவனது இடக்கரத்து இடைவெளிக்குள்ளே புகுந்து நெளிந்தவள், தனது மென் கரத்தால் அவனது நெற்றியை இதமாக வருடலானாள். தன் பட்டு உடலின் ஸ்பரிசம் பட்டு அந்தக் கல்லுடல் கலகலத்துப் போகும் என்று எண்ணினாள். விழுது போல விரிந்து கிடந்த கரம் லலிதமாகத் தன் இடையைச் சுற்றி வளைக்கும் என்று எதிர்பார்த்தவள் ஏமாந்துதான் போனாள். அந்த மதுமதியாளின் மயக்குவிழிகளைப் பாராமலே 'இதிலே மதுவை நிரப்பு' என்று கட்டளையிடுவது போல அவனது வலக்கரத்திலிருந்த பொற்கிண்ணம் அந்தப் பெண்ணின் முகத்துக்கு முன்னே நீண்டது. பழச்சாறு நிறைந்த பாத்திரமோ அவனது வலப் பக்கத்திலேதான் இருந்தது. ஆனாலும் அந்தச் சாகஸக்காரி தன் நிலையிலிருந்து நகராமல் அவன் மார்பின் மீது தவழ்ந்தபடியே அந்தக் காடி நிறைந்த குடுவையை எட்டி எடுத்தாள். அவன் நீட்டிய கோப்பையிலே மதுவை நிறைத்தாள். இந்தச் செயலுக்காகச் சினந்து அவளை உதறவில்லை அவன். இதனால் அவனிடம் புது விதமான சலனமெதுவும் ஏற்பட்டு விடவுமில்லை.

இரவு அத்தனை நேரத்துக்கு மேலான போதும்கூட அயர்வு அவனை அழுத்தவில்லை. அவனைச் சிந்தனை அப்படி ஆட்கொண்டிருந்தது. அடுத்தடுத்து நீண்ட கோப்பைகளை நிரப்பிக் கொண்டிருந்தாள் குமரி. இடையிடையே அவளையும் ருசிக்கச் செய்தான் அவன். அமைதியான இரவின் அந்த நேரத்திலே தனிமையும், மௌனமும், மதுவின் போதையும் மெள்ள மெள்ள அவளைத் தன் நினைவிழக்கச் செய்தன. கூடாரத்தில் மெல்லொளி பரப்பிக் கொண்டிருந்த ஒரிரு விளக்குகளும் கூட அயர்வின் மிகுதியால் அணைந்து விட்டன. வெளியே காய்ந்து கொண்டிருந்த நிலவின் நிழல்தான் இப்போது கூடாரத்தினுள் வெண் புகையாகப் படிந்திருந்தது. இத்தனை குடித்தும்கூட அந்த அபிசீனியன் தன் நினைவிழக்கவில்லை. அத்தகைய



உருக்கு உடலையும் உரம் பெற்ற உள்ளத்தையும் கொண்டவன் அவன். தனது பரந்த மார்பிலே துவண்டு தூங்கிக் கொண்டிருக்கும் அந்தப் பணிப் பெண்ணை மெல்ல நகர்த்தித் திண்டிலே கிடத்தி விட்டுக் கூடாரத்துக்கு வெளியே வந்தான் சித்தி ஹாஸன்.

அயர்ந்து தூங்கும் அழகியின் சுகமான சுவாசத்தைப் போல, உறங்கும் துங்கபத்திரை சீரான மெல்லொலி எழுப்பி ஓடிக் கொண்டிருந்தது. சற்று நேரம் அதன் கரையில் நின்று அதை ரசித்தபின் தனது கூடாரத்துக்கு வந்தான் சித்தி ஹாஸன். நிலவின் ஒளி தேய்ந்து கொண்டிருந்தது. இரவு விலகும் அந்த வேளையில் அந்தப் பிராந்தியத்தையே நடுங்க வைக்கும்படி நான்கு குதிரைகள் பாய்ந்து வந்தன. குறிப்பிட்ட கூடாரத்தின் முன்னே வந்ததும் அவைகளின் லகானைப் பிடித்திழுத்தனர் குதிரைகளின் மீது வீற்றிருந்த வீரர்கள். குதிரைகள் தங்கள் குளம்புகளைப் பூமியில் பதித்து நிற்பதற்குள் அவர்கள் கீழே குதித்தார்கள். எத்தனை வேகமாக வந்திருக்கிறார்கள் என்பதைக் குதிரைகளின் மீது வழிந்து கொண்டிருந்த வியர்வை வெள்ளம் கூறாமல் கூறியது.



அசதி எனும் போர்வையினுள் கண் மூடிக் கண்ணயரப் போன சித்திஹாஸன் குதிரைகளின் குளம்பொலி கேட்டதும் அந்தப் போர்வையைக் கழற்றி எறிந்து விட்டு வெளியே வந்தான். அமைதியான இரவிலே, இனிமையான தூக்கத்தை அநுபவித்துக் கொண்டிருந்த பலரும் பரபரப்புடன் உறக்கத்தை உதறி விட்டு ஓடி வந்தார்கள்.

ஒளி படரும் வேளையாயினும் அந்தப் பிரதான கூடாரத்தினுள் காலைக் கருக்கலின் இருள் கனத்துக் கிடந்தது. பணியாளர்கள் மடமடவென்று விளக்குகளை ஏற்றிக் கூடாரத்தினுள் ஒளி உண்டாக்கினார்கள். ஆதில் ஷாவின் வரவை எதிர்பார்த்து, இரைக்கும் மூச்சையும் இழுத்துப் பிடித்துக்கொண்டு நின்றிருந்தார்கள் குதிரைகளில் வந்தவர்கள். சித்திஹாஸன் உள்ளே நுழைந்த அதே வேளையில், சரியாகத் தூக்கம் கலையாத சுல்தானும் வேறுபுறமாக உள்ளே புகுந்தார்.

தம்மைக் காணக் காத்திருப்பவர்களைக் கண்டதும் ஆதில்ஷா சவுக்கடி பட்டவர் போலத் துடித்துப் போனார். ''நீங்களா? இந்தக் கோலத்திலேயா?'' என்ற அவரது உடல் பதறியது. கண்களில் கனல் பறந்தது.

ஆம், அவர்களேதான்! யாரை அகமது நகரின் நட்பை நாடித் தூதாக அனுப்பி இருந்தாரோ அவர்களேதான் அப்படி அலங்கோலமான நிலையிலே விரட்டப்பட்டிருந்தார்கள். கிழிந்த ஆடையும் கீழ்

நோக்கிய நிலையுமாக நிற்கும் தமது தூதுவர்களைக் கண்டபோது ஆதில்ஷாவின் உடல் அவமானத்தினால் குன்றியது. ஹுஸைன் நிஜாம் ஷாவின் நட்பையும் ஒற்றுமையையும் விரும்பி அலி ஆதில் ஷா அனுப்பி வைத்த அன்புக் கடிதத்தைத் திரும்பக் கொண்டு வந்திருந்த தூதுவர்கள் நடுங்கும் கரங்களுடன் அதைப் பிரித்துக் காண்பித்தனர். அகமது நகர் அவையிலே அதற்கு எத்தனை அவமதிப்புக் கிடைத்திருக்கிறது என்பதைக் கண்டார் அலி ஆதில்ஷா அவர்கள். பீஜப்பூர் சுல்தானின் இதயத்தைக் கிழிப்பது போல அவர் எழுதியிருந்த விதத்தை வாளால் குத்திக் கிழித்திருந்தார் அகம்பாவம் பிடித்த அகமதுநகர் நிஜாம்ஷா. அண்டை நாட்டுடன் சண்டையைத் தவிர்ப்பதற்காகச் சன்னதுகள் அனுப்பிச் சமாதானத்தை விரும்பிய ஆதில்ஷா தம் பொக்கிஷத்திலிருந்து விலைமதிப்பற்ற அணிமணிகளை அள்ளி ஒரு பேழையிலே அடைத்து அதை அகமதுநகர் சுல்தானுக்குத் தம் நட்பின் அடையாளமாக அனுப்பியிருந்தார். மென்மையின் தன்மை அறியாத வெறியனின் கையில் சிக்கிய பெண்ணைப் போலக் கலகலத்து நிலைகுலைந்த அந்தப் பேழை தன்னைப் பெருமையோடு அனுப்பிய ஆதில்ஷாவிடம் தான்பட்ட சிறுமையைச் சொல்லி அழுவதற்காக இப்போது அவர் முன்னே வாய் பிளந்து கிடந்தது. ஒளி சிந்தி ஒய்யாரமாக விளங்கிய அணிமணிகளும் பொன்னாபரணங்களும் இப்போது அதில் புயலிடைப்பட்ட பசுங்கொடியெனச் சின்னாபின்னமாகிக் கிடந்தன.

குரல் கம்மக் கண்ணீர் மல்கக் கூறினார்கள் தூதுவர்கள்: ''தாங்கள் அனுப்பிய அன்புக் கடிதத்தை அலட்சியமாகப் பறித்துக் கத்தியால் குத்திக் கிழித்துக் கொக்கரித்தான். இப்பேழையை எட்டிக் காலால் உதைத்து எள்ளி நகையாடினான். ஏதேதோ பேசினான் அந்த ஆணவக்காரன். அந்த இழிமொழிகளை இன்னொரு தடவை உங்கள் முன் விவரிக்க எங்கள் நாக் கூசுகிறது. நட்பைத் தேடி வரும் நல்லெண்ணத்துடன் தாங்கள் எங்களை அனுப்பியிருக்கிறீர்கள்; அதை நாசமாக்கிக்கொண்டு வரக்கூடாதே என்று நாங்கள் பேசாமல் வந்தோம். இல்லாவிடில்.... ஆதில்ஷாவை அவமரியாதையாகப் பேசிய அகமதுநகரானின் ஆவியை எங்கள் குத்துவாள் அந்தக் கணமே குடித்திருக்கும்!'' குமுறினார்கள்.

கூடாரத்தினுள் — அவையில் வந்து கூடி இருந்த யாருமே பேசவில்லை. அப்படிப் பேசா நிலைக்கு அவர்களை ஆக்கி இருந்தது தூதுவர்கள் விவரித்த செய்தி. ஆனால் அங்குள்ள ஒவ்வொரு வீரனின் ரத்தமும் 'பழிக்குப் பழி' என்றுதான் கொக்கரித்துக் கொண்டிருந்தது. ஆதில்ஷாவோ பார்வைக்கு அமைதியாகக் காணப்பட்டார். அந்த நிலையில் அவர்கள் தங்கள் ஆத்திரத்தைக் காட்டிப் படபடக்கப் பயந்தார்கள். சித்திஹாஸனோ தினவெடுத்த தன் கரங்களைக் கசக்கிக் கொண்டிருந்தான், கட்டுண்ட மதயானையைப் போல. மன்னரின் ஒரு பார்வை, ஒரு வார்த்தை போதும் அவனுக்கு. அகமது நகரை அழித்துவிட்டுத் திரும்புவதற்கு.

எதுவுமே எல்லை மீறிப் போகும்போது செயலிழந்த நிலையில் கிடந்து தவிப்பது மனித சுபாவம். ஆத்திரத்தின் எல்லை மீறிப் போன நிலையில் ஆதில்ஷா பேசாப் பதுமையாகிப் போனதில் வியப்பில்லை.

''பழைய பகைமையை மறந்து நான் அந்த அல்பனின் நட்பை நாடியது என் தவறுதான். மன்னர்கள் எதையும் மறந்துவிடக்கூடாது. மன்னர்களும் மனிதர்கள்தானே என்று அன்பை நாடினேன் பண்பில்லாதவனிடம். சரியான பாடம் கிடைத்து விட்டது...'' நிதானமிழக்காமலே பேசினார் அலி ஆதில்ஷா.

''நட்புத் தூதனுப்பிய நம்மைக் கோழை என்று தப்புக் கணக்குப் போட்டு விட்டார் போலிருக்கிறது நிஜாம்ஷா அவர்கள்!'' பயங்கரமாகச் சிரித்தான் சித்திஹாஸன். சிரிப்பா அது? சினத்தின் நெருப்பு.

தூங்கி எழுந்த துங்கபத்திரை இரு கரையும் முழுக ஓடும் தன் உடலைச் சிலிர்த்துக் கொண்டபோது புள்ளினங்கள் கூடுகளிலிருந்து சிறகடித்துப் பறந்தன. இனிமையான இரவின் அமைதியான உறக்கத்தை எண்ணிய அந்தச் சுகானுபவத்திலே அவள் சுந்தர வதனத்தில் முறுவல் படர்ந்தபோது கீழ் வானத்திலே தகதகத்துக்கொண்டு தலை நீட்டினான் ஆதவன். பத்திரையின் வட கரையில் இருந்த கூடாரங்கள் பெயர்க்கப்பட்டு, கிளம்புவதற்குத் தயாராக இருந்த குதிரைகளின் குளம்புகள் பூமியைக் கிளறிக் கிளப்பிய புழுதியினால் வானத்தில் செம்மை படர்ந்தது — அவமானத்தினால் சிவந்திருந்த ஆதில்ஷாவின் முகத்தைப் போல.

கவசமணிந்த இரண்டு குதிரை வீரர்கள் அகமதுநகரை நோக்கி ஆக்ரோஷத்துடன் கிளம்பினார்கள். அவர்களிடம் ஆதில்ஷாவின் முத்திரை பதித்த கடிதமொன்று இருந்தது. 'பீஜப்பூரின் உரிமையான கலியாண் ஷோலாப்பூர் ஆகிய கோட்டைகளை உடனே ஆதில்ஷாவுக்குச் சொந்தமாக்க வேண்டியது; இல்லாவிடில் அதனால் ஏற்படும் விபரீத விளைவுகளை வரவேற்கத் தயாராக இருக்க வேண்டியது' என்று எச்சரிக்கை விடுத்திருந்தார் அலி அவர்கள். கர்வங்கொண்ட ஹுஸைன் காரணமின்றிப் பீஜப்பூரின் நட்பை உதறி உதாசீனம் செய்தாலும் அதுபோலத் தாமும் நடந்துகொள்ள விரும்பவில்லை ஆதில்ஷா. ஆகவே கைமாறிப்போன கோட்டைகளைக் கைக்கொள்ள விரும்பித் தாக்கீது அனுப்பித் தாக்குதலுக்குத் தயாரானார்.

தம் பலம் அறிந்தவர் ஆதில்ஷா. அகமது நகரைத் தனித்து நின்று தாக்குவதென்பது பகற்கனவு என்பதை உணராதவரா என்ன? தன் செயலின் பின் விளைவைப்பற்றி அறிந்தேதான் அகமது நகர் இத்தகைய இழி செயலைச் செய்திருக்கிறது. அப்படியிருக்கத் தம் பலத்தை மட்டும் நம்பித் தாக்குதல் நடத்தித் தோல்வியைச் சூடிக் கொள்ள விரும்பவில்லை பீஜப்பூர்.

முதல் நாள் மாலை விடைபெற்று வந்தவரிடமே மறுநாள் காலை உதவி கேட்டுப் போய் நின்றான் சித்திஹாஸன். 'தங்கள் மகனுக்கு நேர்ந்துள்ள அவமானத்தைத் துடைப்பது தந்தையாகிய தங்கள் கடமை'

என்று அலி ஆதில்ஷாவின் 'தந்தை'யான ராம ராயரிடம் நிலைமையை விளக்கினான். உறவுமுறையைக் கூறிவிட்டாலும்கூட வலிய வந்து உதவக் கூடியவர்தான் ராமராயர். இப்போது இணக்கம் தெரிவிக்கக் கேட்கவா வேண்டும்? தாமே தமது பெரும் படையுடன் அகமது நகரின் ஆணவத்தை அடக்க வருவதாக ஒப்புக் கொண்டார்.

அகமதுநகரை அடைந்த அந்த இரு வீரர்களும் தங்கள் குதிரைகளிலிருந்து கீழே இறங்கவே இல்லை. வெறி கொண்ட அக்குதிரைகளை அப்படியே நேரே அகமது நகரின் அரண்மனையை நோக்கி விரட்டினார்கள். இடி முழக்கம் போலத் தாவி வரும் குதிரைகளைத் தடுத்து நிறுத்த முயன்ற காவல் வீரர்களைத் தம் வாள் வீச்சால் ஒதுங்கி ஓடும்படி செய்தவர்கள் அரசவையில் போய்த்தான் அவற்றை அடக்கி நிறுத்தினார்கள். ஹுசைன் நிஜாம்ஷா தம் அரசாங்க அதிகாரிகள் சூழ அமர்ந்திருந்தார். திடீரென்று புகுந்த அவ்விரு குதிரை வீரர்களும் அங்கும் கூடக் கீழிறங்கவில்லை. நுரைதள்ளி நிற்கும் குதிரைகளை இழுத்துப் பிடித்த போது அந்த மிருகங்கள் நிலை கொள்ளாத் தங்கள் பின்னங்கால்களை ஊன்றி முன்னங் கால்களைத் தூக்கி உடலை உயர்த்திக் கனைத்துக் கலகலத்தபோது அவற்றின் மேலிருந்த வீரர்கள் தங்கள் கையிலிருந்த ஈட்டிகளை உயர்த்தினார்கள். அந்த ஒரு கணம் நிஜாம்ஷா பிரமித்தே போனார். இத்தனை கட்டுக் காவல்களையும் மீறி உள்ளே புகுந்து தம் மீது வேல் பாய்ச்சிக் கொல்ல வந்திருக்கும் வீரர்கள் பீஜப்பூர்க்காரர்கள் என்பதை அவர் அறிந்து கொள்ளுவதற்குள் அவ்விரு வீரர்களின் ஈட்டிகளும் விர்ரென்று பாய்ந்து வந்து சுல்தானின் முன்னே தரையில் பாய்ந்தன. அந்த இரண்டு ஈட்டிகளில் ஒன்றில் ஆதில்ஷாவின் எச்சரிக்கைக் கடிதம் கட்டப்பட்டிருந்தது. நட்புக் கடிதத்தை வாங்கிக் கிழித்து நக்கல் செய்த நிஜாம் ஷாவை மதித்துக் கடிதத்தை அவர் கையில் கொடுக்க விரும்பவில்லை வீரர்கள். பதில் பெறவும் அங்கு காத்திருக்கவில்லை. அவையினரின் திகைப்பு நீங்குவதற்குள் அவ்விரு சூரர்களும் தங்கள் குதிரையைத் திருப்பிக் கொண்டு உள்ளே புகுந்த அதே வேகத்தில் வெளியேறினார்கள்—சூறாவளியைப் போல!

இத்தனையும் விளக்குவதற்குத்தான் நேரமாயிற்றே தவிர நடந்ததோ சில விநாடிகளில். அதிர்ச்சி நீங்கிய அகமதுநகர் வீரர்கள் 'பிடி பிடி' என்று பரபரத்தார்கள். வேறுபல குதிரைகள் அவர்களைத் தொடர்ந்தன. ஆனால் வில்லிலிருந்து கிளம்பிய அம்புகளைப் போல அவ்விரு வீரர்களும் வாளைச் சுழற்றியபடி வழி உண்டாக்கிக் கொண்டு வெளியேறிப் பறந்து விட்டார்கள்.

தரையிலே பாய்ந்து நின்ற ஈட்டிகள் தம்நெஞ்சிலே பாய்ந்ததைப் போன்ற உணர்விலே செயலிழந்துபோய் உட்கார்ந்திருந்தார் ஹுசைன் நிஜாம்ஷா. மின்னலைப் போலத் தோன்றி மறைந்த அந்த வீரர்களின் சாகஸம் அவரை வியப்பில் ஆழ்த்தியிருந்தது. அதற்குள் ஈட்டி தாங்கி நின்ற ஆதில்ஷாவின் அறிவிப்பை அவிழ்த்துக் கொண்டு வந்து நிஜாம் ஷாவின் முன்னே நீட்டினான் ஒரு வீரன். அதைக் கையில் வாங்கிக்கொண்ட ஹுசைனின் கவனம் அதில் லயிக்கவே யில்லை. அவருக்குத் தெரியாத புதிய விஷயமெதுவும் அதில் எழுதியிருக்கப் போவதில்லையே! குத்திட்டு நின்ற இரு ஈட்டிகளும் வகுத்துக் கொடுத்த இடைவெளியிலே லயித்திருந்த அவரது பார்வையில், தூரத்தில் தம்மை நோக்கி வரும் ஓர் உருவம் கலப்பதை உணர்ந்தார். அவரது கண்கள் பிரகாசமடைந்தன. (தொடரும்)

திரைப்படத் துணுக்கு



## திரையில் சோகம் — வாழ்க்கையில் இன்பம்

திரை உலக சரித்திரத்தில் எந்தப் படத்தைப் பற்றி மக்கள் மிக அதிகமாகப் பேசியிருக்கிறார்கள் என்று யாரேனும் கேட்டால் சட்டென்று ''எலிஸபெத் டெய்லர் நடித்த கிளியோபாட்ரா'' என்று உறுதியாகப் பதில் சொல்லி விடலாம்.

இப்படத்தில் அண்டொனியாக நடித்த ரிச்சர்ட் பர்ட்டனும் கிளியோபாட்ராவாக நடித்த எலிஸபெத் டெய்லரும் நடிப்புக்காக மட்டுமின்றி அசல் வாழ்க்கையிலும் ஒருவரை ஒருவர் காதலித்து, அந்தக் காதல் கிளியோபாட்ரா — அண்டொனி ஆகிய சரித்திரக் கதாபாத்திரங்களின் சோகக் கதையைப் போல் முடியாமல் திருமணத்தில் நிறைவெய்தியது படம் பிரபலமடைய மேலும் துணை புரிந்திருக்கிறது.

சென்னையில் விரைவில் வெளியாகப் போகும் இந்தப் படத்துக்கான ஷூட்டிங்குகளை இத்தாலி, ஸ்பெயின், இங்கிலாந்து, எகிப்து ஆகிய நான்கு தேசங்களில் எடுத்திருக்கிறார்கள். பல்லாயிரக் கணக்கானோர் நடித்து லட்சக் கணக்கில் செலவழித்து எடுக்கப்பட்ட மகத்தான படம் இது!



# நீண்ட நடை பயணங்கள்

வேற்று நாட்டை வெற்றி கொள்ள விழைந்து, பெரும் படையுடன் புறப்படப் போகிறான் தந்தை. தன் முன்னோர்கள் மரபுப்படி, தெய்வங்களுக்குப் பூசை போட்டு, பலி கொடுத்து எல்லாச் சடங்குகளையும் முடித்துக் கொண்டான். சடங்குகள் நடைபெற்ற இடத்தில் இருந்தவர்களை வெளியே போகும்படி சொல்லிவிட்டு தனியொருவனாய் இருந்து கொண்டு, ஒன்பது வயதடைந்திருந்த தன் மகனை அழைத்து எதிரில் நிறுத்தி, ''வெற்றி நாடி ஸ்பெயின் தேசத்துக்குச் செல்கிறேன். என்னோடு வருகிறாயா?'' என்று கேட்டான்.

''வரவேண்டுமென்றுதானே துடித்துக் கொண்டிருக்கிறேன்.''

''அப்படியானால் தேச சேவையிலேயே என் வாழ்நாள் முழுவதையும் கழிப்பேன் என்றும், ரோமாபுரியின் மீது எப்பொழுதும் பகைமை கொண்டவனாயிருப்பேன் என்றும் பிரமாணம் எடுத்துக்கொள்.''

''அப்படியே செய்கிறேன்.'' மகனும் பிரமாணம் எடுத்துக் கொண்டான். ரோமாபுரியின் மீது பகை முடிக்க அந்தப் பக மனம் உறுதி கொண்டுவிட்டது.

தந்தை ஹமில்கார், தனயன் ஹான்னிபல். இவன் பிறந்தது கி. மு. 247ஆம் வருஷம்.

தந்தையும் தனயனும் கார்த்தேஜ் சாம்ராஜ்யத்தின் பிரதம படைத் தலைவர்களாயிருந்து அரும் பணியாற்றியவர்கள்; அதன் உயர்வுக்கு அரும் பாடு பட்டவர்கள்.

கிறிஸ்து சகத்துக்குச் சுமார் பத்து நூற்றாண்டுகள் முன்பிருந்தே, ஐரோப்பாவின் தெற்கிலுள்ள மத்திய தரைக் கடலின் மேற்குப் பகுதி பல வகைத் தொழில்களைத் திறம்படச் செய்வதிலும் பல நாடுகளுக்குத் துணிந்து சென்று வியாபாரம் செய்வதிலும் வல்லவர்களாயிருந்த பொனீஷியர்கள் என்ற ஓர் இனத்தவரின் செல்வாக்குக்குட்பட்டிருந்தது. இவர்கள் தங்கள் வியாபார சௌகரியத்துக்காக ஆப்பிரிக்காவின் வடக்கே அநேக துறைமுகப் பிரதேசங்களில் குடியேறி வசித்து வந்தார்கள். இவர்களில் ஒரு சாரார், கி. மு. ஒன்பதாவது நூற்றாண்டின் இடைக்காலத்தில் தற்போது ஆப்பிரிக்காவின் நேர் வட கோடியிலுள்ள டூனிஸ் என்ற நகருக்கருகில் ஒரு சிறு கிராமத்தை விலைக்கு வாங்கி அதில் குடியேறி ஒரு வியாபார ஸ்தலத்தை அமைத்துக் கொண்டார்கள். இந்தச் சிறு கிராமமே பின்னால் கார்த்தேஜ் என்ற பெயரால் ஒரு நகரமாக வளர்ந்து காலக்கிரமத்தில் ஒரு சாம்ராஜ்யமாக விரிந்தது. இந்தச் சாம்ராஜ்யத்துக் குட்பட்டவர்கள் பொனீஷியர்கள் என்று அழைக்கப்படாமல் கார்த்தஜீனியர்கள் என்றே அழைக்கப்பட்டு வந்தார்கள்.

கி. மு. மூன்றாவது நூற்றாண்டுத் தொடக்கத்தில் கார்த்தேஜின் வியாபாரச் செல்வாக்கு உச்ச நிலையில் இருந்தது. மத்திய தரைக் கடலின் மேற்குப் பகுதியிலுள்ள ஸிஸிலி, கார்ஸிக்கா, ஸார்டீனியா முதலிய தீவுகள் அதன் ஆதிக்கத்தை ஏற்றுக்கொண்டிருந்தன.

இங்ஙனம் இது செல்வாக்கின் உச்சநிலையில் இருப்பது அடுத்தாற்போலுள்ள ரோமானிய சாம்ராஜ்யத்துக்குப் பொறுக்கவில்லை. இத்தாலி முழுவதிலும் அதன் செல்வாக்கு செல்லுபடியாகிக் கொண்டு வந்ததென்றாலும் கார்த்தேஜ் சாம்ராஜ்யத்தைப் பொறாமைக் கண்களோடு பார்க்கத் தொடங்கியது. விளைவு இரண்டு சாம்ராஜ்யங்களுக்கும் இடையே போர் மூண்டது.

இரண்டுக்கும் மூன்று தடவை விட்டு விட்டுப் போர்கள் நடைபெற்றன. இவற்றைத் தொகுப்பாக ப்யூனிக் போர்கள் (Punic Wars) என்று அழைப்பார்கள்.

முதல் ப்யூனிக் போர் கடலிலும் தரையிலுமாகச் சுமார் இருபத்தியேழு வருஷ காலம், — கி. மு. 268 முதல் 241ம்வருஷம் வரை — விட்டு விட்டு நடைபெற்றது. போரின் முடிவில் இரண்டு சாம்ராஜ்யங்களுக்கும் சமாதானம் ஏற்பட்டது. ஸிஸிலித் தீவை ரோமாபுரியின் ஆதிக்கத்துக்கு விட்டு விடுவதாகவும் யுத்த நஷ்டஈடாக ஒரு கோடி ரூபாய் இருபது வருஷத் தவணையில் செலுத்



துவதாகவும் கார்த்தேஜ் ஒப்புக்கொண்டது. ரோமாபுரியும் இந்தப் போரில் பெருவாரி நஷ்டத்தை அடைந்தது. அதன் ஐந்நூறு கப்பல்கள் நாசமடைந்தன: இரண்டு லட்சம் படைவீரர்கள் உயிரிழந்தார்கள்.

முதல் ப்யூனிக் போர் முடிவுறுவதற்குச் சுமார் ஆறு வருஷங்கள் முன்புதான் — கி.மு. 247 ஆம் வருஷம் — ஹமில்கார், கார்த்தேஜின் பிரதம படைத் தலைவனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டான். தன் தலைமையில் நடைபெற்ற அந்தப் போர் இறுதியில் தோல்வியடைந்தது குறித்து அவன் பொருமிக் கொண்டிருந்தான்.

இது இப்படியிருக்க, மேற்படி முதல் ப்யூனிக் போர் முடிந்த பிறகு கார்த்தேஜில் படை வீரர்கள் ஒன்றுதிரண்டு தங்களுக்குச் சம்பளப் பாக்கி என்று சொல்லிப் பெருங் கலகம் விளைவித்தார்கள். சுமார் நாற்பது மாத காலம் தொடர்ந்து நடைபெற்ற இந்தக் கலகத்தை, ஹமில்கார், கடுமையான முறைகளைக் கையாண்டு அடக்கிவிட்டான்.

இந்தக் கலகம் நடைபெற்றுக் கொண்டிருக்கும்போது ரோமாபுரி ஏதோ ஒரு சாக்கைச் சொல்லிக் கொண்டு மத்தியதரைக் கடலின் மேற்குப் பகுதியில் கார்த்தேஜின் ஆதிக்கத்திலிருந்த ஸார்டினியாத் தீவையும் கார்ஸிக்கா தீவையும் ஆக்கிரமித்துக் கொண்டு விட்டது.

ஹமில்காருக்கு ஆத்திரம். கார்த்தேஜின் ஆதிக்கத்தை வேறு பக்கத்தில் விஸ்தரிக்கத் தீர்மானித்து, கி. மு. 237 ஆம் வருஷம் ஸ்பெயின் தேசத்தின் மீது ஒரு பெரும் படை கொண்டு சென்றான். செல்லுவதற்கு முன்புதான், ஒன்பது வயது அடைந்திருந்த ஹானிபல்லை அழைத்து பிரமாணம் எடுத்துக்கொள்ளச் செய்து, பிறகு தன்னோடு அழைத்துக்கொண்டு போனான். அங்கு சென்று அந்த நாட்டுச் சுதேசிகளுடன் சுமார் ஒன்பது வருடங்களுக்கு மேலாகப் பல போராட்டங்களை நடத்தி வெற்றி கண்டான். ஸ்பெயின் தேசத்தின் தெற்குப் பகுதிப் பிரதேசங்களை ஒவ்வொன்றாகக் கார்த்தேஜின் ஆதிக்கத்துக்கு உட்படுத்திக் கொண்டு வந்தான். அதைச் செய்து கொண்டு வருகையில் கி. மு. 228ஆம் வருஷம் நாற்பத்திரண்டாவது வயதில் இறந்து போனான்.

இவனுக்குப் பிறகு இவனுடைய மருமகப்பிள்ளையான ஹாஸ்ட்ருபல் என்பவன் படைத் தலைமை ஏற்று, இவன் போட்டிருந்த திட்டங்களை நிறைவேற்றி வந்தான். ஸ்பெயினின் வடக்குப் பகுதியிலும் கார்த்தேஜின் ஆதிக்கம் விஸ்தரிக்கத் தொடங்கியது. ஸ்பெயினின் தென்கிழக்குப் பக்கத்தில், புதிய கார்த்தேஜ் என்ற பெயரால் ஒரு துறைமுகப் பட்டினத்தை ஸ்தாபித்து அதன் மூலம் கார்த்தேஜின் கடல் வியாபாரம் அதிகரிப்பதற்கு வழி செய்தான். அதுவே இப்பொழுது

# மாமலை கடந்த மாவீரன்

# கால்கேட்டின்மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில், ஒரே தேய்ப்பில் கால்கேட் டென்டல் க்ரீம் துர் நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒழிக்கிறது.

கால்கேட் உடனடியாக வாய் துர்நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினுல் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான பரிட்சைகள் நிரூபித்துள்ளன: இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித்தால் மட்டும் போதாது—சாப்பிட்டவுடன் வழக்கமாக கால்கேட் டென்டல் க்ரீமினுல் உங்கள் பற்களை நன்ருகத் துலக்குங்கள். இதன் வீரியமும், ஊடுருவும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர்நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் நீடித்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனுலேயே பல் துலக்க விரும்புகிறர்கள்.

வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✔ துர் நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது




நீங்கள் பற்பொடியை விரும்பினுல், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.

**பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெறவும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிருர்கள்.**

DC-6-53-TAM.

கார்ட்டஜீனு என்ற பெயரால் விளங்கி வருகிறது.

ஹாஸ்ட்ருபல், இங்ஙனம் ஸ்பெயினில் கார்த்தேஜின் ஆதிக்கத்தை விஸ்தரித்துக் கொண்டு வருவதைப் பார்த்து ரோமாபுரி மருண்டது. மேற்கொண்டு விஸ்தரிக்க விடாதபடி செய்யக் கார்த்தேஜுடன் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டது. இதன்படி ஸ்பெயினின் வடக்குப் பகுதியில் ஓடும் எப்ரோ நதியை எல்லையாகக் கொண்டு இதன் வடக்குப் பக்கம் ரோமாபுரியின் செல்வாக்குக்குட்பட்ட பிரதேசமாகவும் தெற்குப் பக்கம் கார்த்தேஜின் செல்வாக்குக்குட்பட்ட பிரதேசமாகவும் இருப்பதென்று ஏற்பாடு செய்து கொள்ளப்பட்டது.

எப்ரோ நதிக்குத் தெற்கே ஸாகுண்ட்டம் என்ற ஒரு சிறிய நகர ராஜ்யம். இது சுதந்திரமாயிருந்தபோதிலும் ரோமாபுரியின் செல்வாக்குக்குட்பட்டிருந்தது. இதன் சுதந்திரத்தில் தான் தலையிடுவதில்லையென்று மேற்படி உடன்படிக்கை மூலம் கார்த்தேஜ் ஒப்புக் கொண்டது.

ஹாஸ்ட்ருபல், கி. மு. 221ஆம் வருஷம் அவனுடைய விரோதி ஒருவனால் கொலை செய்யப்பட்டுவிட்டான். அவனுக்குப் பிறகு ஹானிபல் படைத் தலைமையை ஏற்றுக் கொண்டான். கார்த்தஜீனியப்போர்வீரர்கள் இவனிடத்தில் அபார நம்பிக்கையும், மதிப்பும் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய வேண்டுகோளுக்கும் வற்புறுத்தலுக்கும் இணங்கியே இவன் படைத் தலைமையை ஏற்றுக் கொண்டான். கார்த்தேஜ் அரசாங்கம் அரை மனத்துடன்தான் இவன் பதவி ஏற்றதை அங்கீகரித்தது. இதற்காக ஹானிபல் மன வருத்தப்படவில்லை. தேச நலன் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு படைத் தலைமையை ஏற்றான். "தேச சேவையிலேயே என் வாழ்நாள் முழுவதையும் கழிப்பேன்" என்று பிரமாணம் எடுத்துக் கொண்டிருக்கிறானல்லவா?

ஹானிபல், படைத் தலைமையை ஏற்றுக் கொண்ட சிறிது காலம் கழித்து கி. மு. 219ஆம் வருஷம் ரோமாபுரியுடன் செய்து கொண்ட உடன்படிக்கைக்கு விரோதமாக ஸாகுண்ட்டம் நகரைத் தாக்கிக் கைப்பற்றிக் கொண்டான். ரோமாபுரி இதை ஆட்சேபித்தது. பயனில்லை; இரண்டாவது ப்யூனிக் போர் தொடங்கியது.

தொடக்கத்தில் ரோமாபுரி ஒரு கப்பல் படையைத் தயாரித்து ஹானிபலுக்கு விரோதமாக ஸ்பெயினை நோக்கி அனுப்பியது. ஆனால் ஹானிபல் ரோமாபுரியைக் கடற்போரில் சந்திக்க விரும்பவில்லை. அது தற்போது கப்பற் படையில் வலுப்பெற்றிருக்கிறதென்பது அவனுக்குத் தெரியும். எனவே, சுற்றி வளைத்தாவது தரை மார்க்கமாகச் சென்று வடக்குப் பக்கத்திலிருந்து இத்தாலிக்குள்ளே புகுந்து அதனைத் தாக்க வேண்டுமென்று திட்டமிட்டான். தொண்ணூறாயிரம் காலாட்படையினர், பன்னிரண்டாயிரம் குதிரைகள், முப்பத்தேழு யானைகள் ஆகியவை கொண்ட ஒரு பெரும் படையுடன் கி. மு. 218ஆம் வருஷம் புதிய கார்த்தேஜ் நகரத்திலிருந்து புறப்பட்டு, சொற்ப காலத்துக்குள் எப்ரோ நதியைத் தாண்டிவிட்டான். சென்ற வழியில் இருந்த பிரதேசங்களைத் தன்னுடையதாக்கிக் கொண்டான்.

தொடர்ந்து இவன் எண்ணூறு மைல்களுக்கு அதிகமாக நடைபயணத்தை மேற்கொண்டு ஆழ்ந்த கணவாய்களைக் கொண்ட ஆல்ப்ஸ் மலையை அடைந்தான். இந்தக் கணவாய்களில் பல, ஏழாயிரம் அடி உயரத்துக்கு மேற்பட்டிருந்தன. இவற்றுள் ஒன்றின் வழியே செல்வதென்று தீர்மானித்தான் ஹானிபல். அப்படியே புறப்பட்டான். சிறிது தூரம் சென்றதும் ஒரு மேட்டுப்பாங்கான இடத்தைக் கடக்க வேண்டி நேரிட்டது. அங்கிருந்த மலை ஜாதியினரையெல்லாம் வென்று முன்னேறினான்.

வழியானது மிகக் குறுகலாகவும், சில இடங்களில் கரடுமுரடாகவும், சில இடங்களில் சறுக்கலாகவும் இருந்தது. இதனால் படையோடு சென்ற குதிரைகள் பல கால் தடுக்கியும், சறுக்கியும் கீழே விழுந்து பள்ளத் தாக்குகளில் உருண்டு போயின. மலை ஜாதியினரால் தாக்குண்ட படைவீரர்கள், உடம்பெல்லாம் ரத்தம் வழிய இறந்து போனார்கள்.

இறந்துபோனவர்கள் போக எஞ்சியிருந்தவர்களை அழைத்துக் கொண்டு ஹானிபல், ஆல்ப்ஸ் மலை மீது ஏறத் தொடங்கினான்.

சுற்றி வளைத்துச் சுமார் நூற்றி முப்பது மைல் தூரம் ஏற வேண்டியிருந்தது. இதற்கு ஒன்பது நாட்கள் பிடித்தன. ஏறும் போது வீரர்கள் பலர் சோர்வினால் இறந்து போனார்கள். பலர் உயிரின் மீது பசையற்றவர்களாய் அங்கங்கே தங்கிவிட்டனர். மலை உச்சியை அடைந்ததும், படையினர் உற்சாகமிழந்தவர்களாக மேற்கொண்டு செல்ல முடியாத தயக்க நிலையில் இருப்பதைப் பார்த்தான் ஹானிபல். படையினரை ஒன்று சேர்த்துப் பின்வருமாறு பேசினான்: "அதோ பாருங்கள், பசுமையான பூமி தெரிகிறதல்லவா? அதுதான் இத்தாலி! ரோமானிய சாம்ராஜ்யம். அது நம் கைக்கு வர விருக்கிறது. இந்தச் சமயத்தில் நாம் சோர்வு காட்டலாமா? வாருங்கள், முன்னேறிச் செல்வோம்."

இந்தப் பேச்சைக் கேட்டதும் படையினர் சோர்வு நீங்கினர். புதிய பலம் பெற்றனர்; மறுநாளே உச்சியிலிருந்து கீழே இறங்க ஆரம்பித்தார்கள். ஆனால் ஏற்றத்தைக் காட்டிலும் இறக்கம்தான் அதிக கடினமாயிருந்தது. வழியோ துறையோ கிடையாது. மேலும் அப்பொழுது பனி மழை பெய்ய ஆரம்பித்து விட்டது. பனிப் பாறைகள் வழியை அடைத்துக் கொண்டிருந்தன. இவை மீது படையின் முற்பகுதியினர் சென்ற போது சில இடங்களில் பாறைகள் உடைந்து பள்ளங்கள் ஏற்பட்டுவிட்டன. பிற்பகுதியினர் இவற்றைத் தாண்ட முடியாமல் திணறினர். குதிரைகள் சறுக்கி விழுந்தன. அநேகர் பனிப் புண் பட்டு அவதியுற்றனர்; அநேகருக்குப் பார்வை மங்கி விட்டது.

கைகால்கள் விறைத்துப் போய் அடியெடுத்து வைக்க முடியாதபடியாயினர் பலர்.

இந்தப் பள்ளங்களை எப்படியோ தாண்டிச் சென்றதும், சிறிது தூரத்தில் சுமார் முந்நூறு அடி அகலமுள்ள ஒரு பாறை குறுக்கிட்டது. இதை எப்படிக் கடப்பது என்று ஹானிபல் யோசித்துக் கொண்டிருக்கவில்லை. தானே சம்மட்டி போன்ற சில கருவிகளை எடுத்துக் கொண்டு பாறையை உடைத்து வழி ஏற்படுத்த ஆரம்பித்தான். இவனைப் பின்பற்றிப் படைவீரர்களும் வேலை செய்து வழியுண்டாக்கினர். இதற்கு மூன்று நாட்கள் பிடித்தன. இப்படிப் பல பாறைகளைத் தகர்த்து வழி ஏற்படுத்திக் கொண்டு எப்படியோ ஹானிபலும் அவன் படையினரும் இத்தாலியின் வடமேற்கில் ஓடும் போ என்னும் நதிக்கருகிலுள்ள சம தரைக்கு வந்து சேர்ந்தனர். அப்பொழுது காலாட்படையினர் இருபதினாயிரம் பேராகவும், குதிரைப் படையினர் ஆறாயிரம் பேராகவும் குறைந்துவிட்டனர். முப்பத்தேழு யானைகளில் ஏழு யானைகளே வந்து சேர்ந்தன.

சமதரைக்கு வந்து சேர்ந்த பிறகு ஹானிபல் படைகளுக்கும் ரோமானியப் படைகளுக்கும் மூன்று இடங்களில் போர் நடைபெற்றது. மூன்று இடங்களிலும் ஹானிபலுக்கே வெற்றி கிட்டியது. நான்காவதாகக் கான்னே (Cannae) என்ற இடத்தில் கி. மு. 216ஆம் வருஷம் ஆகஸ்ட் மாதம் இரண்டாந் தேதி நடைபெற்ற போரில் ரோமானியருக்குப் படுதோல்வி ஏற்பட்டது. அவர்கள் பக்கத்தில் நாற்பத்தையாயிரம் போர்வீரர்கள் உயிர் இழந்தார்கள். படைத்தலைவர் பலரும் மாண்டு போயினர். என்றாலும் அவர்கள் உறுதி குலையாமல் இருந்தனர். மேற்கொண்டு ஹானிபலை முன்னேற விடாமல் ஒளிவு மறைவாயிருந்து அவன் படைகளைத் தாக்கி வந்தார்கள். தவிர, கார்த்தேஜ் அரசாங்கம் இந்தச் சமயம் பார்த்து, பொருளுதவியோ, படை உதவியோ தரமுடியாதென்று ஹானிபலுக்குத் தெரிவித்துவிட்டது. என்ன செய்வான் அவன்? ஆங்காங்கு கிடைத்த உணவுப் பொருள்களைக் கொண்டு தன் படைகளை எப்படியோ சமாளித்து வந்தான். ரோமானியர்களோ இவனுக்கு எந்தவிதமான வசதியும் கிடைக்காதபடி செய்ய அவன் சென்ற இடங்களிலெல்லாம் முன்கூட்டியே பயிர் பச்சைகளையெல்லாம் அழித்து வந்தார்கள்.

ஹானிபல் இங்ஙனம் இத்தாலியில் ஊடாடிக்கொண்டிருக்கிற சமயத்தில் ரோமானியர்கள் ஸ்பெயின் மீது படையெடுத்துக் கார்த்தேஜுக்கு உட்பட்டிருந்த பிரதேசங்களை ஆக்கிரமித்துக் கொண்டார்கள். பிறகு கி. மு. 204ஆம் வருஷம் கார்த்தேஜ் மீதே படையெடுத்துச் சென்றார்கள். ஹானிபலைப் போன்ற திறமையான படைத் தலைவன் இல்லாத காரணத்தினால் கார்த்தஜீனியர்கள் தோல்வியடைந்து சமாதானத்துக்கு இணங்கினார்கள். சமாதான ஒப்பந்தப்படி, ஹானிபல் தன் சொற்பப் படையுடன் கார்த்தேஜுக்குத் திரும்பிப் போக அனுமதிக்கப்பட்டான். அவனும் சுமார் பதினைந்து ஆண்டுகளுக்குப் பிறகு தாய் நாட்டுக்குத் திரும்பி வந்தான்.

அவன் திரும்பி வந்ததும் கார்த்தஜீனியர்கள் சமாதான ஒப்பந்தத்தை மீறி ரோமானியர்கள் மீது போர் தொடுத்தார்கள். ஹானிபலே படைத் தலைமை வகித்தான். கி. மு. 202ஆம் வருஷம் அக்டோபர் மாதம் பத்தொன்பதாம் தேதி ஜாமா (Zama) என்ற இடத்தில் கடுமையான போர் நடைபெற்றது. உலகப் பிரசித்தமான போர்களில் இது ஒன்று எனக் கருதப்படுகிறது. கார்த்தஜீனியர்கள் தோல்வி அடைந்தார்கள். அவர்களில் சுமார் இருபதினாயிரம் பேர்களுக்கு மேல் உயிரிழந்தார்கள். ஹானிபல் மயிரிழையில் உயிர் தப்பினான்.

இதற்குப் பிறகு இரு ராஜ்யங்களுக்கும் சமாதான ஒப்பந்தம் ஏற்பட்டது. இதன்படி கார்த்தேஜ் நகரமும் அதன் சுற்றுப்புறப் பகுதிகளும் தவிர மற்ற ராஜ்யம் முழுதும் ரோமானியர்கள் வசமாயிற்று. இதனோடு இரண்டாவது ப்யூனிக் போர் முடிவுற்றது.

சிறிது காலம் கழித்து, ஹானிபல் சமாதான ஒப்பந்தத்துக்கு விரோதமாகச் சூழ்ச்சி செய்கிறானென்று அவன் மீது ரோமானியர்கள் குற்றம் சாட்டினார்கள். இனி கார்த்தேஜில் இருப்பது ஆபத்து என்று உணர்ந்த அவன் சிரியா தேசத்துக்குச் சென்று அங்கு ஆண்டு வந்த அண்டியோக்கஸ் மன்னனுடன் சேர்ந்து கொண்டு ரோமானியருக்கு விரோதமாகப் போர் செய்தான். ஆனால் வெற்றி கிட்டவில்லை. அண்டியோக்கஸ் மன்னன் ரோமானியர்களுடன் சமாதான ஒப்பந்தம் செய்து கொண்டான். இந்த ஒப்பந்தத்தில் ஹானிபலை ரோமானியர்களிடம் ஒப்புவிப்பதாக அண்டியோக்கஸ் உறுதிமொழி கொடுத்திருந்தான். இது தெரிந்த ஹானிபல் பித்தினியா என்ற ஒரு சிறு ராஜ்யத்துக்குத் தப்பிச் சென்று அதன் அரசனான ப்ருஸியாஸ் என்பவனிடம் அடைக்கலம் புகுந்தான். ஆனால் அந்த அரசனோ இவனை ரோமானியர்களிடம் காட்டிக்கொடுத்துவிட்டான். தன்னை எந்த நிமிஷத்திலும் ரோமானியர்கள் வந்து சிறைப்படுத்தி அழைத்துச் செல்லக் கூடுமென்று தெரிந்ததும் ஹானிபல் தன்னோடு வைத்திருந்த விஷத்தை உண்டு இறந்துபோனான். கி. மு. 183 ஆம் வருஷத்தோடு இவனுடைய அறுபத்து நான்கு வருஷ வீர வாழ்க்கை முற்றுப் பெற்றது.

ஜாமா போருக்குப் பிறகு கார்த்தஜீனியர்கள் தங்கள் வியாபாரத்தைச் செழிக்கச் செய்வதில் அதிக கவனம் செலுத்தத் தொடங்கினார்கள். இது ரோமானியர்களுக்கு எரிச்சலாயிருந்தது. கார்த்தஜீனியர்களை ஓங்கவிடக் கூடாதென்று தீர்மானித்தார்கள். மூன்றாவது ப்யூனிக் போர் தொடங்கிவிட்டது. கி. மு. 149 முதல் 146ஆம் வருஷ காலப் போரின் கடைசியில் கார்த்தேஜ், ரோமானிய சாம்ராஜ்யத்தின் ஆதிக்கத்துக்குட்பட்ட ஒரு மாகாணமாகி விட்டது; அதன் தனித்துவம் போய் விட்டது.




நீங்களே ஒப்புக்கொள்வீர்கள்





# டாடா-ஃபின்லே

## தேயிலை

*ஈடில்லாத தேயிலை!*

பின்வரும் ஐந்து
ரகங்களில்
கிடைக்கிறது:

ப்ரெஸ்டிஜ் டார்ஜிலிங்க்
லலித் இலைத் தேயிலை
மிலாப் இலைத் தேயிலை
பஹாதூர் தூள் தேயிலை
ஷான் தூள் தேயிலை



**புத்தம் புது தேயிலை**

•

**சுவையுள்ள தேயிலை**

•

**சிறந்த தேயிலை**

**டாடா-ஃபின்லே** தேயிலை பருகுவீர்;
உன்னதத் தேயிலை இன்பம் எய்துவீர்!

# வேறொரு டார்ச்சும் இதைப்போல் அநேக ஆண்டுகள் தொந்தரவற்ற உழைப்புத் தருவதில்லை





# சிரிக்கவும் சிந்திக்கவும்

இப்பொழுதெல்லாம் பையன்களுக்கு வாழ்க்கையில் மிகச் சீக்கிரத்திலேயே வெறுப்பு ஏற்பட்டு விடுகிறது. ஆனால், அதற்காக அவர்கள் உலகத்தைத் துறந்து சந்நியாசிகளாகிவிடுவதில்லை. தவமிருப்பதற்காகக் காடுகளுக்கும் சென்றுவிடுவதில்லை. நல்ல அழகான சுத்தமான, நவீனமான இடமாகத் தேடிப் பிடித்துத் தங்கள் உயிரை விட்டுவிடுகிறார்கள். சில தினங்கள் முன்னர் இருபத்திரண்டு வயதான வாலிபன் ஒருவன் சென்னை மௌண்ட் ரோட் ஆயுள் இன்ஷ்யூரென்ஸ் கட்டிடத்தின் பன்னிரண்டாவது மாடியிலேறிக் கீழே குதித்தான். இது நடந்தது பகல் மூன்றரை மணிக்கு. ஆயுள் இன்ஷ்யூரென்ஸ் கம்பெனிக் கட்டிடங்கள், இன்ஷ்யூரென்ஸ் செய்து கொள்வதைப் பரிகசிப்பது போல் இப்படி ஒரொரு சமயம் நபர்களைப் பலியாகக் கொள்கிறது. சுமார் இருபது வருஷங்களுக்கு முன்னர் பிரிதிவி இன்ஷ்யூரென்ஸ் கம்பெனிக் கட்டிடம் இடிந்து விழுந்து சிலரைப் பலியாகக் கொண்டது. அந்தச் சம்பவம் நடந்ததும் பிற்பகலில்தான்.

* * *

சாதாரணமாக ஒரு நல்ல இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியில் வேலை பார்ப்பதற்கு மிகவும் அத்தியாவசியமானவர்களின் யோக்கியதாம்சங்களைப் பற்றி நான் கர்நாடகமான அபிப்பிராயம் உள்ளவன். சாம, தான, பேத (அவசிய மேற்பட்டால்) தண்டமுறைகளால் ஒரு ராட்சஸன், பேய், பிசாசு இவற்றை யெல்லாம் கூட இன்ஷ்யூரன்ஸ் செய்து கொள்ளும்படி செய்துவிடும் வாய் ஜாலகம் இருந்தால் போதும் என்று நினைத்திருந்தேன். அது தவறு என்று சமீபத்தில் வெளியான எல். ஐ. ஸி. விளம்பரம் ஒன்றிலிருந்து தெரிய வருகிறது. உதவி அதிகாரிகள், பட்டதாரிகளாக இருக்கவேண்டுமாம். அவர்கள் செப்டம்பர் மாதத்துப் பரீட்சைகளில் தேறியவர்களாக இருக்கக் கூடாதாம். அவர்களுக்குப் பலவிதமான பரீட்சைகள் வைக்கப்படுமாம். பதினேழு விஷயங்களின் தலைப்பைக் கொடுத்து அவற்றுள் ஏதாவது ஒன்றைப் பற்றி விரிவாக எழுத வேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். அந்த ஜாபிதாவில் சில வருமாறு:

மிருக நூல், தாவர நூல், தத்துவ நூல், பூமியமைப்பு நூல்.

கர்நாடக சங்கீதத்தை ஏன் விட்டுவிட்டார்களென்று தெரியவில்லை!



* * *

பழைய கால ஆங்கிலேயர்கள், குறித்த காலம் தவறாமல் காரியம் செய்பவர்களென்று புகழ் பெற்றவர்கள். ஒருவர் தமது நண்பர்களுக்குத் தமது வீட்டில் விருந்து அளிக்கிறாரென்று வைத்துக் கொள்ளுங்கள். விருந்து இரவு ஒன்பது மணிக்கு ஆரம்பம். ஒருவரைத் தவிர மற்ற எல்லோரும் வந்து விட்டார்கள். மணி எட்டு ஐம்பத்தொன்பது ஆகிவிட்டது. எந்த வண்டிச் சத்தம் கேட்டாலும் அந்த விருந்தாளி வருகிறாரா என்று எல்லோரும் கவனிக்கிறார்கள். ஒன்பது மணி அடித்து விடுகிறது. அப்படியும் அவர் வரவில்லை. ஒன்பது மணி ஒரு நிமிடம் ஆகிவிடுகிறது. ஆளைக் காணோம். விருந்தளிப்பவர் வெறுப்புடனும், கோபத்துடனும், மன வேதனையுடனும் மற்றவர்களுக்கு விருந்துணவை அளிக்கிறார். அப்போது வந்திருப்பவர்கள், வராதவரைப் பற்றிப் பின்வருமாறு பேசிக் கொள்வார்களாம்:

''அவர் வீட்டில் யாருக்கு என்ன உடம்பு?''

''அவருக்குத்தான் திடீரென்று மயக்கம் வந்துவிட்டதோ, என்னமோ?''

''இராது. அப்படி ஏதாவது நடந்திருந்தால் டெலிபோன் செய்திருப்பார்கள்.''

''டெலிபோன் பழுதாயிருக்கக் கூடும்.''

''அப்படியிருந்தால் பக்கத்தில் எங்கேயாவது போய்த் தெரிவித்திருப்பார்கள். இல்லாவிட்டால் ஆள் மூலமாவது சொல்லியனுப்பியிருப்பார்கள்.''

''ஆகையால் வழியில்தான் ஏதாவது விபத்து நடந்திருக்க வேண்டும்.''

''பாவம்!''

''அவர் வரும் வழியில் உள்ள போலீஸ் ஸ்டேஷன்களுக்கு டெலிபோன் செய்து விசாரித்தால் நல்லது.''

''அத்துடன் ஆஸ்பத்திரிகளிலும் விசாரிக்கச் சொல்ல வேண்டும். இன்று மத்தியானம்கூடச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தேன். நன்றாக இருந்தாரே!''

குறிப்பிட்ட காலத்துக்கு ஒருவர் வராவிட்டாலும், தாம் காலம் தாழ்த்தி வருவதைப் பற்றி முன் கூட்டியே தகவல் தெரிவிக்காவிட்டாலும், ஏதாவது எதிர்பாராமல் நேர்ந்திருக்க வேண்டும் என்றுதான் முடிவுகட்டுவார்களாம்.

நமக்கும் இத்தகைய பழக்க வழக்கங்களுக்கும் வெகுதூரம். சமீபத்தில் ஒரு பெரிய ஹோட்டலில் ஏதோ ஒன்றின் வெளியீட்டு விழா நடந்தது. 'நிகழ்ச்சி நிரல்' என்ற அந்தக் காகிதத்தின்படி சிற்றுண்டி ஐந்தரை மணிக்கு ஆரம்பம். வழக்கமான அந்தக் குலாப்ஜான், கட்லெட், காரசோமாசி வகை தட்டின்மீது உட்கார்ந்திருந்தன. அவற்றைத் தின்றாகிவிட்டது. பிறகு அரை மணி நேரம் வரை நூற்றுக்கணக்கான பேர் சும்மா உட்கார்ந்திருந்தனர். இரண்டொருவர் ஞாபகமறதியாகத் தட்டை எடுத்துக் கடித்துக்கொண்டிருந்தனர். ஏனென்றால் காப்பி பானம் வரவில்லை. அது ஏன் வரவில்லை என்றால், அன்று விழாவில் கலந்துகொள்ளவிருந்த மந்திரியும், அரசியல் தலைவரும் இன்னும் வரவில்லை. காப்பியைக் கொடுத்துவிட்டால்

எல்லாரும் அதை அருந்திவிட்டு எழுந்து போய் விடுவார்களே என்று பயமாக இருக்கலாம். தலைமை வகிக்கவிருப்பவர் சரியான நேரத்துக்கு வந்து விட்டால் அவர் ஒரு மந்திரியாயிருப்பாரா என்று சந்தேகம் தோன்றும். அவர் நடுவில் எழுந்திருந்து செல்லாமல் கடைசிவரையில் உட்கார்ந்திருந்தாலும் அவர் ஒரு மந்திரியாக இருக்க முடியாது என்று நினைப்போம். அவரைப் புகைப்படம் பிடிக்கும் போது அவர் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாலோ, அல்லது முகத்தை மூடிக் கொண்டு விட்டாலோ மந்திரியாக இருக்க முடியாது என்று முடிவுகட்டி விடுவோம். ஆனால் இப்படி முடிவு கட்டுவது சிலசமயம் சிக்கலான நிலைமையை ஏற்படுத்தி விடக்கூடும். ஒரு மந்திரி என்றால் புத்தம் புதிய பளபளப்பான பெரிய மோட்டார் வண்டியில்தான் செல்வார் என்று தெருவில் போகும் கழுதைக்குக் கூடத் தெரியும். இப்படி எண்ணித்தான் ஒரு காரியாலயக் காவலாளி ஏமாந்து போனார். அவர் டில்லி மந்திரி மகாவீர் தியாகி ஏறி வந்த வண்டியைக் காரியாலயக் காம்பவுண்டுக்குள் அனுமதிக்கவில்லை. காரணம் மந்திரி ஓட்டிவந்த வண்டி 1927ம் வருடத்திய ஷெவர்லெட் வண்டி! ஒரு மந்திரி அத்தகைய பழைய கர்நாடக வண்டியில் வருவாரென்று யார் தான் கனவு கண்டிருப்பார்கள்?



ஃ ஃ ஃ

''என் இஷ்டப்படி காரியங்கள் நடப்பதாயிருந்தால், வியாதி தொத்திக் கொண்டு போய்த் தொத்துவியாதியாகப் பரவுவதற்குப் பதிலாக உடல் நலம் தொத்திக் கொண்டு போய்த் தொத்து உடல் நலம் பரவும்படி செய்வேன்.''
—ராபர்ட் இங்கர்சால்

ஃ ஃ ஃ

ஒருவருக்கு ஜுரம் கண்டு உடல் உஷ்ணம் 104 டிகிரியாயிருந்தால் எல்லாரும் பயப்படுவார்கள். 105 டிகிரியானால், அவர் உயில் எழுதி வைத்திருக்கிறாரா, என்ன சொத்து இருக்கிறது என்பதைப் பற்றிச் சம்பந்தப்பட்டவர்கள் கவலைப்படுவார்கள். வைத்தியரை அபிப்பிராயம் கேட்டால் ''இருபத்து நான்கு மணி நேரத்துக்குப் பிறகு சொல்லி யனுப்புங்கள்!'' என்று கூறி விட்டுப் போய் விடுவார். இனி தேவலோகத்தில் அவரைக் கவனித்துக் கொள்வார்கள் என்பது அவருக்கு நன்றாகத் தெரியும். ஆனால் இன்று 1964 ஆகஸ்ட் மாதத்தில் ?

சில பெண்கள் பேசிக் கொண்டு போனது என் காதில் விழுந்தது:

''ஏன், நீ ஒரு வாரமாகக் காலேஜுக்கு வரவில்லை ?''

''ஒரே ஜுரம்! 105 டிகிரி!''

''இத்தனைதானா? எனக்கு 106 இருந்ததே!''

''பூ! எனக்கு 107 இருந்ததாக்கும்!''

அவர்கள் மிகைப்படுத்திக் கூறவில்லை.

நாம் வைத்தியரிடம், ''105, 106 டிகிரி இருக்கிறதே. என்ன செய்கிறது?'' என்று கேட்டால் அவர் அதைக் காதில் வாங்கிக் கொள்வதே இல்லை. ஒரு மாத்திரையின் பெயரை எழுதிக் கொடுத்து அதை வாங்கிச் சாப்பிடச் சொல்கிறார். நாம் அவர் கொடுக்கும் சீட்டை வாங்கிக் கொண்டு போகும் போது கூப்பிடுகிறார். ''பத்தியம், கித்தியம் என்று சொல்லிக் கொண்டு பைத்தியக்காரத்தனமாய் எதாவது செய்து விடாதீர்கள். மோர் சாப்பிடுங்கள்; நிறைய மோர் சாப்பிடுங்கள்; மேலும் மேலும் சாப்பிட்டுக் கொண்டே இருங்கள்'' என்கிறார். ஜுரமாக இருப்பவர்கள் மோர் என்ற வார்த்தையை வாயால் சொன்னாலும் ஜன்னி பிறந்து விடும் என்று நாம் நினைத்துப் பழக்கம். ஆகையினால், வைத்தியர் பரிகாசம் செய்கிறாரோ என்றுகூட எண்ணத் தோன்றும்.

ஜுரம் மாட்டில் தன் இஷ்டப்படி அடித்துக் கொண்டு போகிறது; மோர் தன் வேலையைச் செய்கிறது. மூன்று தினங்களுக்கெல்லாம் ஜுரம் நின்று விடுகிறது.

ஆனால் இதற்குப் 'பின் குறிப்பு' ஒன்று சேர்க்க வேண்டும். மருந்து சாப்பிட்டதன் பயனாகச் சிலர் உடலின் மீது கடுகு போன்றும், களாக்காய் போன்றும், மல்லிகைப் பூ போன்றும் இன்னும் பலவிதமாகவும் தடிப்புக்கள் ஏற்படுவதுண்டு. இவற்றைப் பற்றியும் பயப்பட வேண்டியதில்லை. அவை தாமரைப் பூவர்ணத்துடன் பார்ப்பதற்கு ஜோராயிருக்கும். அது போவதற்கு வைத்தியர் ஒரு 'பௌடர்' கொடுப்பார். அது போய் விடும். ஆனால், அந்தப் பௌடரைச் சாப்பிட்டதன் பயனாக......

ஃ ஃ ஃ

'டெலிபோன் கெய்ட்' என்ற புத்தகத்தின் மத்தியில் பச்சை வர்ணத்திலும், இலேசான சிவப்பு வர்ணத்திலும் காகிதங்கள் இருக்கின்றன. அல்லவா? லஞ்சம் வாங்கும் 'வில்லன்கள்' சம்பந்தப்பட்ட காரியாலயங்களின் டெலிபோன் எண்களெல்லாம் அவற்றில் இருப்பதாக சதாச்சாரக் கமிட்டியினர் சந்தேகப்படுகிறார்கள். அத்தனை எண்களும் மத்திய அரசாங்க ராஜ்ய சர்க்கார் அலுவலகங்களைச் சேர்ந்தவை.

இந்த அலுவலகங்களுள் எதற்கு லஞ்சம் வாங்க மிகக் குறைந்த வாய்ப்பு, அதாவது துரதிர்ஷ்டம் இருக்கிறதென்று ஆராய்ச்சி செய்யலாயினர். முதலிடம், ஜனத்தொகை புள்ளி விவர இலாகாவுக்கு. அதற்கடுத்தபடியாக, மாதர் சமூகநலச் சங்கம், அரசாங்கத் தகவல் காரியாலயம், காலநிலை இலாகா, பூதத்துவ ஆராய்ச்சி இலாகா, நிலைக்கும் படை, அக்கௌண்டண்ட் ஜெனரல், ஆடிட் காரியாலயங்கள் என்று வரிசையாகச் சொல்லலாம்.

இந்த இலாகாக்கள் நபர்களை நியமிப்பதற்குப் பணம் வாங்கலாம். காரியாலயச் செலவுக்கான பணத்தைக் கையாடலாம். அதைத் தவிர பொதுஜனங்களிடமிருந்து கட்டாயப்படுத்திப் பணம் வாங்குவதற்கில்லை.

—என். ஆர்.

# குண்டு மல்லிகை



"என்ன வசந்தி? என்னையே நீ கல்யாணம் செய்துகொள்ளப் போவதாக உன் அப்பா அம்மாவிடம் ஒரே முடிவாகச் சொல்லி விட்டாயா?" என்று டாக்டர் ஜகந்நாதன் குறுகுறுவென வசந்தியை உற்றுப் பார்த்துக் கொண்டே கேட்டார்.

"ஆமாம் சார்!" என்று வசந்தி வெகு உற்சாகமாகத் தலையாட்டினாள். அவளுடைய வாயெல்லாம் புன் சிரிப்புப் பொங்கி அவளுடைய புத்தினம் உதடுகளில் புத்தமுதாக வழிந்து அவளுடைய மைதீட்டிய கண்களிலும் மின்னலிட்டது.

"நீ அப்படிச் சொன்னதோடு திருப்தி யடைந்து அவர்கள் இலேசில் விட்டு விட்டார்களா?"

"அதெப்படி விடுவார்கள்? சொன்னதைக் காரியத்தில் காட்ட வேண்டாமோ?"

"ஓ! அதுவும் ஒன்று பாக்கியிருக்கிறதா?"

"ஆமாம், சார்! என் அம்மா என்னைத் தனியாக ஒருபுறம் அழைத்துப்போய், 'அடி வசந்தி! உன் இஷ்டப்படி அந்த டாக்டரையே நீ கல்யாணம் செய்துகொள்ளலாம். அதற்கு உன் அப்பாவையும் சம்மதிக்க வைக்கிறேன். அந்த டாக்டர் பிரசித்தமானவர்தான். அவருக்குச் சொந்த ஆஸ்பத்திரியும் நல்ல வருமானமும் இருக்கின்றன. அவர் எழுதுகிற புத்தகங்கள்தான் மோசமானவையே தவிர அவர் நல்லவர் தான். ஆனால் அவர் எங்களிடம் வந்து முறைப்படி உன்னைப் பெண் கேட்கும்படி அவரிடம் போய்ச் சொல். அது தான் உன் அப்பாவுக்குக் கௌரவம். உனக்கும் நல்லது. எனக்கும் நிம்மதி' என்று கச்சிதமாகச் சொல்லி விட்டாள்.. ம்!... என் அம்மா சொன்னது சரி தானே டாக்டர்?"

"உன்னைப் பொறுத்த வரை சரிதான் வசந்தி!"

"உங்களைப் பொறுத்த வரை...?" என்று வசந்தி துணுக்குற்றாள்.

"என்னைப் பொறுத்த வரை — என் கொள்கைகளெல்லாம் உனக்குத் தெரியுமல்லவா? மனிதனுக்குப் பந்தங்களே கூடாது. அதிலும் கல்யாணம் என்ற பந்தம் கூடவே கூடாது. மனிதனின் சுதந்திரத்தையும் அவனுடைய காதலையும் கட்டுப்படுத்தும் ஓர் அடிமைத் தளைதான் கல்யாணம். இதுதான் என் கொள்கைகளில் அதி பிரதானமானது."

"அதெல்லாம் எனக்குத் தெரியும், டாக்டர்!"

"என் கொள்கைகளை வெறும் வேடிக்கைக்காகவோ புத்தகங்களுக்காகவோ நான் வைத்துக் கொண்டிருக்கவில்லை. அதுவும் உனக்குத் தெரிந்திருக்க வேண்டும்!" என்றார் ஜகந்நாதன் அழுத்தம் திருத்தமாக.

"டாக்டர்!" என்று பொருமிய வசந்தியின் குரலில் சிறிது ஸ்தாயி இறங்கியது. அவள் ஒரு கணம் மௌனமாக இருந்துவிட்டு, "டாக்டர்! ஆண் பெண் வாழ்க்கையில் காதல் ஒன்று மட்டும் இருந்து விட்டால் போதுமா? நீடித்த உறவு வேண்டாமா?" என்று கேட்டாள்.

"காதல் என்பது ஒரு சிறுகதை; கல்யாணம் என்பதுதான் பெரிய தொடர் கதை என்று நீ நினைக்கிறாயா வசந்தி?" என்று சிரித்த ஜகந்நாதன் அவளை உற்றுப் பார்த்து ஆழ்ந்த ஒரு பெருமூச்செறிந்துவிட்டு, "வசந்தி! காதல் என்பதே ஒருவரின்றி ஒருவரால் வாழவே முடியாது என்ற நிலையில் நீடித்த உறவுக்குத்தான் பெயர்! இதை உன்னால் புரிந்து கொள்ள முடியவில்லையா? ஓர் ஆடவன் தன் ஆத்மாவின் சரி பாதி போன்ற ஒருத்தியைக் கண்டுணர்ந்து அவளோடு காலம் முழுவதும் இணைந்து வாழவே அவாவுறுகிறான். அவனுடைய

காதலுக்குப் பாத்திரமான பெண்ணோ தன்னைப் பூரணமாக அவனுக்கு அர்ப் பணித்து விடுகிறாள். இத்தகைய காத லின் மனோபக்குவ நிலைதான் வாழ்க்கை முழுதும் நீடித்து நிற்கக் கூடிய ஜீவ உத்வேகமாகும்!'' என்றார்.

''சில சமயங்களில் அத்தகைய ஆசை உத்வேகம் அது தோன்றிய வேகத் தைப் போலவே சீக்கிரம் அணைந்து விடவும் கூடுமல்லவா?'' என்றாள் வசந்தி தன் விரல் நகத்தைப் பற்களால் கடித் துக்கொண்டே.

''உண்மையான காதலின் உத் வேகம் ஒரு போதும் அணையாது! மேன் மேலும் பழக்க வாசனையின் பண் போடும் ரசனையின் மெருகோடும், ஜீவ வேட்கையாக வளர்ந்து பெருகிக் கொண்டேதான் இருக்கும்!''

''அத்தகைய காத லோடு ஓர் ஆணும் பெண் ணும் வாழ்க்கைத் துணை வர்களாக இணைந்து வாழ்வதைச் சமுதாய மும் சமய நெறிகளும் அங்கீகரிக்க வேண் டாமா...?''

''ஒருத்தி தனக்கே சொந்தமென்று காதல னும், ஒருவன் தனக்கே சொந்தமென்று காதலி யும் நினைக்கும்போது சமுதாயமோ சமய நெறி களோ அதை அங்கீகரிக்க வேண்டும் என்ற அவசிய மில்லை!'' என்றார் ஜகந் நாதன் வெகு அலட்சிய மாக.

''காதல் உறவுக்குக் கல்யாணம் என்ற புனித மான முத்திரை வேண் டாமென்று சொல்கி றீர்கள், டாக்டர்?'' என்று வசந்தி ஒரு கசப் புடன் கேட்டாள்.

''தபால் ஸ்டாம்புக்கு முத்திரை குத்துவது போல் காதலுக்கு ஒரு முத்திரை வேண்டு மென்று சொல்லு கிறாய்?'' என்று ஜகந்நா தன் தமாஷாகச் சிரித்து விட்டுத் தம் குரலில் ஒரு நிஷ்டையை வரவழைத் துக் கொண்டு, ''வசந்தி! வீட்டில் குடியிருப்பதற்கு வாடகைப் பத்திரம் எழுதுவது, நிலத்தில் உழுவதற்கு உரிமைப் பட்டயம் பதிவு செய் வது, வெளிநாடுகள் செல்வதற்கு விசா சீட்டு வாங்குவது, வியாபாரம் செய்வ தற்குப் பர்மிட் லைசென்ஸ் பெறுவது; இவற்றைப் போலக் காதலையும் ஒரு மெட்டீரியலாகக் கருதிக் கல்யாணம் என்ற முத்திரையுடன் வியாபார ஒப் பந்தம் செய்து கொள்வதை நான் விரும்ப வில்லை. அத்தகைய வாழ்க்கை ஒப்பந்தங்களில் வெறும் உடல் தத்து வத்தை யொட்டிய ஜட உறவு இருக் குமே தவிர, உண்மையான ஆத்ம லயிப்போ அதன் சுவையோ பெரும் பாலும் இருப்பதில்லை.''

''வெறும் காதலர்களாக மட்டுமே இணைந்து வாழ்க்கை நடத்தி வந்தால் உலகம் என்ன சொல்லும்?''



''உண்மையான காத லர்கள் உலகத்தைப் பொருட்படுத்த மாட் டார்கள்! உலகத்தைப் பொருட்படுத்துபவர்கள் உண்மையாகக் காதலிக்க மாட்டார்கள்!''

''அத்தகைய உறவைப் பாவம் என்று பலர் பழிக்க மாட்டார்களா?''

''பாவம் என்பதே மனித மூளை கண்டு பிடித்த வெறும் வார்த் தைதான்! உண்மையில் நம் மனச்சாட்சிக்கு விரோதமானதுதான் பாவமாகும்.''

''ஆண் பெண் வாழ்க் கைக்குச் சட்டங்களும், சம்பிரதாயங்களும் வேண்டாமா, சார்?''

''உண்மையான காத லுக்கு அவையெல்லாம் எதற்கு? அத்தகைய காத லர்களை எதனாலும் பிரிக்க முடியாது. அவர்களி டையே எதுவும் குறுக் கிடவும் முடியாது. இது இயற்கையின் நியதி. இதற்கு எதிராக சம்பிர தாயங்களுக்கோ, சட் டங்களுக்கோ என்ன சக்தி இருக்க முடியும்? ஆண்டவன் படைப்பில் ஒவ்வொரு பிராணிக்கும் ஒரு துணை இயற்கையா

அரு. ராமநாதன்

கவே அமைந்திருக்கிறது. பறவை இனங்களிலும், மிருக இனங்களிலும் ஆண் பெண் உண்டு. அவையும் காதலிக்கின்றன. கூடி மகிழ்கின்றன. குழந்தை குட்டி பெற்று வம்ச விருத்தியும் செய்கின்றன. அவைகளிடையே அன்பு, காதலுறவு, தாய்மை எல்லாம் உண்டு என்றாலும் அவை கல்யாணம் செய்து கொள்வதில்லை!'' என்றார் ஜகந்நாதன்.

''ஆனால் நாம் மிருகங்கள் அல்லவே, டாக்டர்?'' என்று வசந்தி வெடுக்கென்று கேட்டாள்.

''நாம் மிருகங்களைவிட உயர்ந்தவர்கள்; ஆறாவது அறிவு படைத்தவர்கள் என்பதாலோ, அவற்றினாலேயே நாம் அதிகப்படியான சங்கடங்களையும் கவலைகளையும் அநுபவிக்கிறோம் என்பதாலோ நாம் வாழ்க்கையை ரசிக்கும் உரிமையை இழந்துவிட வேண்டும் என்று அர்த்தமில்லையே? வசந்தி! மிருகங்களிடமிருந்து மனிதன் எத்தனையோ விஷயங்களைக் கற்றுக் கொண்டிருக்கிறான். மீனைப் பார்த்து நீந்தவும், கடலில் கப்பல் விடவும் கற்றுக் கொண்டான்! எறும்புகளிடமிருந்து சோஷலிஸத்தைக் கற்றுக் கொண்டான்! இது போல் எத்தனையோ உண்டு. ஆனால் தன் அக வாழ்க்கை சம்பந்தப்பட்ட வரையில் காதலுறவு, குடும்ப உறவுகளை மிருகங்களிடமிருந்து மனிதன் இன்னும் கற்றுக் கொள்ளவில்லை. அதையும் அவன் கற்றுக் கொண்டு தன் அறிவினால் அதைப் பண்படுத்தி வளர்ப்பானாகில் இந்த உலகில் ஆண் பெண் வாழ்க்கையே ஆனந்தமயமாக மாறி விடும்.''

''இருந்தாலும் டாக்டர், ஒரு பெண்ணின் வாழ்க்கைக்குக் கல்யாணம் அத்தியாவசியம் என்றுதான் எல்லோரும் கருதுகிறார்கள்!'' என்றாள் வசந்தி.

''கல்யாணம் உதயமாகும்போது காதல் அஸ்தமித்து விடுகிறது என்கிற பொன்மொழியை நீ படித்திருப்பாய்! அது பெரும்பாலும் உண்மைதான்! காதலர்களுக்கிடையே கல்யாணம் என்ற பந்தம் ஏற்பட்டு விட்டால் அதன் உரிமை உணர்ச்சிகளே பெருகி நிற்கும். அதன் பிறகு ஒருவரையொருவர் கவர்ந்து கொண்டேயிருக்க வேண்டும் என்பதற்கு அவசியமே இருக்காது. அதனால் கவர்ச்சி குறைந்து காதலின் சுவையும் குன்றி விடும். இது என்னுடைய மகத்தான கொள்கை!'' என்றார் ஜகந்நாதன் ஜம்பமாக.

வசந்தி எதையோ தீவிரமாக யோசித்து விட்டு, ''சார்! இவ்வளவு தூரம் நடந்துவிட்ட பிறகுமா நீங்கள் அந்தக் கொள்கைகளை இன்னும் வைத்துக் கொண்டிருக்க வேண்டும்?'' என்று ஒரு பரபரப்புடன் கேட்டாள்.

''எவ்வளவு தூரம் நடந்து விட்டது என்கிறாய்?''

''நாம் மகாபலிபுரத்துக்குப் போனதை நினைத்துப் பாருங்கள்!'' என்று வசந்தி ஒரு குறும்புச் சிரிப்புடன் தன் கண்களால் ஜகந்நாதனை ஒரு வெட்டு வெட்டினாள்.

''நாம் அங்கே நாவல் எழுதுவதற்காகத்தான் போனோம்!''

''ஆனால் அங்கே நடந்தது?....''

''உன் சிநேகிதிக்காக நாம் இருவரும் கணவன் மனைவி போல் நாடகமாடினோம்! ஆனால் அது உன் பிளானே தவிர என் திட்டமல்ல!''

''டாக்டர்! அப்படியானால்... அப்படியானால்......'' என்று வசந்தி கொதித்தாள்.

ஜகந்நாதனோ தம் போக்கிலேயே, ''வசந்தி! நீ ஆரம்பம் முதல் பிளான் போட்டே எல்லாவற்றையும் செய்திருக்கிறாய்! உன் சிநேகிதி லலிதாவுக்கு நீயே தந்தி கொடுத்து உன் வீட்டுக்கு வரவழைத்து உன் பெற்றோர்கள் முன் ஒரு நாடகமாடி இப்போது கல்யாணம் என்ற பிரச்னையையும் கிளப்பியிருப்பாய்!'' என்று குமுறினார்.

வசந்தி அவரை ஏறிட்டுப்பார்த்தாள். அவளுக்கு அழுகையே வந்து விடும் போல் இருந்தது. ஒரு கணம் அவள் தன் முந்தானையின் தலைப்பைத் தன் கைவிரல்களால் பிசைந்து கொண்டே நின்று விட்டு உணர்ச்சிகள் பீறிடும் குரலில், ''டாக்டர்! நான் உங்களை... உங்களை......'' என்று மேலே பேச முடியாமல் கண்களில் நீர் தளும்பத் தத்தளித்தாள்.

அவள் அருகில் ஜகந்நாதன் மெல்ல வந்து நின்று, அவளுடைய பசுமையான முகத்தைத் தன் இரு கைகளாலும் அள்ளி ஏந்திக் கொண்டு, அவளுடைய விழிகளின் வழியாக அவளுடைய ஆத்மா முழுவதையும் ஊடுருவிப் பார்த்த வண்ணம், ''வசந்தி! நீ என்னை உயிருக்குயிராய்க் காதலிக்கிறாய்! அதுபோல் நானும் உன்னைக் காதலிக்கிறேன் என்று நினைக்கிறாய், இல்லையா?'' என்று கேட்டார்.

'ஆமாம்' என்பது போல் வசந்தி அவருடைய கைகளுக்குள்ளேயே தன் முகத்தைப் புதைத்துக் கொண்டு மெல்லத் தலையை ஆட்டினாள்.

''அது உண்மைதான், வசந்தி! சூனியமான என் உள்ளத்தை உன்

---

**குன்று மல்லிகையில் வரும் ஒரு காட்சியைத்தான் இவ்விதம் அட்டைப்படச் சித்திரமாக வழங்கி இருக்கிறார் ஓவியர் கல்பனா.**



தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக்
குணமளிக்கும்

**பெப்ஸ்** வில்லைகளை

உட்கொண்டால், உங்கள் இருமல் உடனேயே அகலும்.

பெப்ஸ் வில்லைகளைச் சுவைத்து, குணமளிக்கும் ஆவி போன்ற அதன் சத்து வேதனையைக் குறைக்கவும், தொண்டைப் புண், ப்ராங்கைடிஸ், இருமல் மற்றும் ஜலதோஷத்திற்கும் காரணமான கிருமிகளைக் கொல்ல உதவியளிப்பதற்கான வேலையைச் செய்வதை உணருங்கள். உடனடி நிவாரணமளிக்கவும் கிருமிகளை அகற்றவும் பெப்ஸ் உதவிபுரிகிறது




பிராங்கைடிஸ்,
தொண்டைப்புண்,
மண்டைநீர்,
அடைப்பு,
ஜலதோஷம்
மற்றும்
இருமலுக்கு
உடனேயே
நிவாரண
மளிக்கிறது.

எல்லா மருந்து
வியாபாரிகளிடமும்
கிடைக்கும்.

வி. இ. புல்போர்ட (இந்தியா) பிரைவேட் லிட்

PPY-55-TAM

*சென்னை ராஜ்யத்திற்கு பூரண விநியோகஸ்தர்கள் :*
மெனக்ஸ் மோதி & கம்பெனி, சென்னை -1.

# சுலேகா

ஸ்பெஷல்

பவுண்டன் பேனா

இங்க்




④ நிரந்தரமான கலர்களில்

கிடைக்கும்

- புளூ பிளாக்
- ராயல் புளூ
- கருப்பு
- பிரவுன்

சுலேகா ஓர்க்ஸ் லிமிடெட்
கல்கத்தா

பண்டிட்
டி. கோபாலாச்சார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்யத்திற்கும் பலத்திற்கும்

ஆயுர்வேதாஸ்ரமம்
பிரைவேட் லிட்.
மதராஸ்-17

---



## பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
### பிரைவேட் லிமிடெட்

"பாலுஸேரி பில்டிங்ஸ்"
3, சிங்காராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி
தபால் பெட்டி நெ. 414. மதராஸ்-5
தந்தி : 'EVERMANS' போன் : 88834

சேரக் கடைசி தேதி 9-9-1964 ... முதல் ஏலத் தேதி 11-9-1964

| 25 மாதங்கள் | மாதாந்திரச் சீட்டுகள் ( 2-வது வெள்ளிக்கிழமை ஏலங்கள் ) | 25 அங்கத்தினர்கள் |
|---|---|---|

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |
| D | ரூ. 25/- | ரூ. 625/- | G | ரூ. 10/- | ரூ. 250/- |

40 மாதங்கள் நீண்டகால ஏலச் சீட்டுகள் 40 அங்கத்தினர்கள்
ஏலத் தேதி : 27-9-1964

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| A | ரூ. 500/- | ரூ. 20,000/- |
| B | ரூ. 250/- | ரூ. 10,000/- |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது.
(போர்டார் உத்திரவுப்படி) எம். வி. சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்
இதர கிளைகள் : புது டெல்லி * பம்பாய் * பெங்களூர் * கல்கத்தா

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

---



## கோபால் பல்பொடி

பல் வலி, பல் அரணை, வாய் நாற்றம்
பல்லில் இரத்தம் வடிதல், முதலிய
பல் வியாதிகளை குணப்படுத்தி
பல்களுக்கு வெண்மையும்
பலத்தையும் தருகிறது.




தயாரிப்பவர்கள் :— எஸ்.பி.எஸ்.ஜெயம் அன் கோ,
25, கீழ நாப்பாளையத் தெரு....... மதுரை.

MINERVA

ஒருத்தியால்தான் நிறைவிக்க முடிந்தது. இனி என் வாழ்க்கையும் உன்னால் நான் புது மலர்ச்சி அடையப் போகிறது. இதை மறைப்பதற்கோ, தடுப்பதற்கோ இந்த உலகத்தில் எந்தச் சக்தியும் இல்லை!'' என்றார் ஜகந்நாதன் முதன் முதலாக உணர்ச்சிப் பெருக்கோடு.

வசந்தி நிமிர்ந்து அவரைப் பார்த்தாள்.

வாழ்க்கை அவளுடைய உதடுகள் வழியாக அவரைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தது. அவளுடைய கருவிழிகள் வழியாக அவரோடு உறவாடியது. அவளுடைய குரல் வழியாக அவரிடம் பேசியது.

''நான் உங்களுக்குத்தான்! நீங்கள் எனக்குத்தான்! எனக்கே எனக்குத்தான்!'' என்றாள் வசந்தி ஆனந்தப் பரவசத்தோடு.

''ஆனால்.....'' என்று ஜகந்நாதன் ஏதோ சொல்ல வாயெடுத்தார்.

அதைக் காதில் வாங்கிக் கொள்ள விரும்பாமலே வசந்தி விர்ரென்று அங்கிருந்து சிட்டுக் குருவி போல் பறந்தோடி விட்டாள்!

அத்தியாயம் ஐம்பத்தாறு

# கனாக் கண்டேன்

பொழுது விடிவதற்கு ஒரு நாழிகை இருக்கும்போதே உமா கண் விழித்துக் கொண்டாள். இனம் புரியாத கனவுகள் இதயத்தை அழுத்தி அலைவுறச் செய்ததால்தான் அவளுக்கு விழிப்பு ஏற்பட்டது. அக்கனவுகளினூடே ஒருவித இன்ப ஜுரமும் காந்தியதால் அவள் உடம்பெங்கும் சூடேறியிருந்தது.

உமா தன் படுக்கையில் புரண்டபடியே கண்ணிமைகளை அகல விரித்துப் பார்த்தாள். கூடத்தில் எரியும் இரா விளக்கின் மெல்லிய வெளிச்சமும், முற்றத்தில் பொழியும் பால் நிலாவின் மங்கிய ஒளியும் இரவின் ஆதிக்கத்தோடு அதன் போதை மயமான கனவு மயக்கத்தைத்தான் அதிகப்படுத்திக் கொண்டிருந்தன.

உமாவுக்கு அதன் பிறகு தூக்கம் வரவேயில்லை! தூங்கினால் மறுபடியும் அந்தக் கனவு வந்து விடுமோ என்ற பயமும் உண்டாயிற்று.

உமா விருட்டென்று தன் படுக்கையிலேயே எழுந்து உட்கார்ந்தாள். ஆனால் தன்னை மூடியிருக்கும் போர்வையை எடுத்து அப்பால் போடவோ, தன்னையே பார்த்துக் கொள்ளவோ அவளுக்கு வெட்கமாக இருந்தது. கூடத்தில், யாரோ உட்கார்ந்து அவளையே பார்த்துக் கொண்டிருப்பது போன்ற உணர்ச்சியும் இழைந்தது. ஆனால் உண்மையில் அவள் அருகில் யாருமேயில்லை. அவள் பாட்டிகூட ராமேசுவரம் யாத்திரைக்குப் போயிருந்தாள். வீட்டில் உமா மட்டும்தான் தன்னந் தனியாக இருந்தாள். முன்பெல்லாம் அமைதியை அழகுபடுத்தும் அந்தத் தனிமையோ, இப்போது ஒரு பாரமாக நெஞ்சை அழுத்தியதோடு அல்லாமல் ஏதோ ஒரு பயத்தையும் கிளறியது.

உமா ஏதேதோ குழம்பியவளாகத் தன் தூக்கத்தில் கண்ட இன்பக் கனவைப் பற்றி நினைத்துப் பார்த்தாள். அதன் சில பகுதிகள்தான் அவள் நினைவில் வந்து குலுங்கின. நித்திய இளமை பொழியும் வானுலகத்தின் அமுதப் பொய்கையிலிருந்து அழகான ஒரு தேவகுமாரன், புத்தொளி வீசும் ஒரு தங்க ரதத்திலேறி, பறக்கும் குதிரைகளைத் தட்டி விட்டு, நட்சத்திர மண்டலங்களையெல்லாம் தாண்டிக் காற்றெனப் பறந்து வருகிறான். உமாவை நோக்கி அவன் கீழே இறங்கி வந்து உமாவின் வீட்டு வாசல் முன்னாலேயே தெருச் சகதியில் தன் தங்க ரதத்தை நிறுத்தி வைத்துக் கொண்டு தன் கண்களில் ஒருவித போதை மயக்கத்துடன் அவளுக்காகக் காத்திருக்கிறான்! அவனோ தேவ குமாரன்! உமாவோ சாதாரண பூலோகத்துப் பெண்! மேலும் அவளை விட அந்த ஆடவன் இன்னும் அழகானவன்; இன்னும் இளமையானவன்! அவன் கூப்பிடும் குரலுக்கு இழைந்து, அவனோடு போய் விட வேண்டும், அவனுடைய அன்பிலே இணைந்து அவனுடைய கைகளுக்குள்ளேயே சுருண்டு விழுந்து அவனோடு ஐக்கியமாகிவிட வேண்டும் என்று உமாவின் பெண்ணுள்ளம் தூண்டுகிறது. அவள் வெளியே ஒரு காலடி எடுத்து வைக்கிறாள். அதற்குள் அவளுடைய அறிவுக்குள் ஒரு சித்திரக் குள்ளன் தோன்றி, 'நீ அந்தத் தேவகுமாரனோடு போக வேண்டும் என்றால் அழியாத அழகும் நித்திய இளமையும் அடைவதற்கு நீ தவம்

செய்ய வேண்டும். இல்லையெனில், அந்தத் தேவகுமாரனைத் தொட்ட மாத்திரத்திலேயே சூனியக் கிழவியாகி விடுவாய்' என்று கூறி விட்டுப் பயங்கரமாகச் சிரிக்கிறான். அதைக் கேட்டதும் உமா தன் நிலையை உணர்ந்து தன் நெஞ்சை அமுக்கி இருதயத்தைக் கல்லாக்கிக் கொண்டு திரும்பி வந்து விடுகிறாள். தேவகுமாரனோ அதை யெல்லாம் பொருட்படுத்தாமல் தன் கண்களின் காந்த சக்தியால் உமாவைக் கவர்ந்து கவர்ந்து இழுக்கிறான். உமாவும் அதன் வசப்பட்டுத் தன்னையும் மீறிய நிலையில் இழுபட்டுச் சென்று தங்க ரதத்தின் அருகில் நிற்கிறாள். அமுதப் பொய்கையின் இன்பப் பரப்பின் மீது விதம் விதமான மலர்க் குவியலுக்கிடையே அவளுடைய உடலைக் கிடத்தி அவளது அழகை யெல்லாம், அன்பின் தன்மைகளை யெல்லாம் காலம் முழுதும் பார்த்துப் பார்த்துச் சுவைத்துக் கொண்டே இருக்கப்போவதாகத் தேவகுமாரன் ஆசையோடு கூறி விட்டு உமாவை அப்படியே தன்னிரு கைகளாலும் அள்ளி யெடுத்துத் தன் நெஞ்சில் அழுத்தி அணைத்தபடியே தன் தங்க ரதத்தில் வைத்துக் கொள்ளுகிறான். அடுத்த கணம் தங்க ரதம் பிச்சுமணியின் பேபி ஆஸ்டின் காராக மாறுகிறது.....

கனவின் இந்த இடத்தில்தான் உமா திடுக்கிட்டுக் கண் விழித்துக் கொண்டாள்.

குழந்தைத்தனமான கனவுதான்!

இது போன்ற கனவுகளெல்லாம் உமாவுக்கு முன்பு ஏற்பட்டதில்லை. படுத்ததுமே நிம்மதியாகத் தூங்கிவிடுவாள். ஆனால் சமீப காலமாக இது போன்ற கனவுகள் அடிக்கடி அவளுக்கு ஏற்படுகின்றன. அவை யாரால் இன்பப் பூக்களாகத் தன் தூக்கத்தில் அரும்புகின்றன? அவளுடைய வாழ்க்கையில் பிச்சுமணி குறுக்கிட்ட பின்புதானே? அதை நினைத்ததும் உமாவின் முகம் குபீரென வெளுத்தது. அதற்காக அவள் தன் உள்ளத்தையே நொந்து கொண்டாள்.

அவளுடைய உள்ளமோ அந்த இன்பக் கனவைத் தொடர்ந்து காண வேண்டும் என்று இன்னொரு புறம் பரபரத்தது. அதையொட்டிய ஆவலின் தாபங்களும் இன்ப விறுவிறுப்பின் ஒரு ஜுர வேகமும் உமாவின் உடலெங்கும் பரவி அவளுடைய உணர்வுகளிலெல்லாம் தகித்தன.

குளிர்ந்த நீரில் குளித்தால் அந்த நினைவும் உணர்வுகளும் தன்னைவிட்டுப் போய் விடுமென்று உமா நினைத்தாள். உடனே அவள் தன் படுக்கையிலிருந்து துள்ளியெழுந்து துண்டு, துணிகள், சோப்பு முதலானவற்றை எடுத்துக் கொண்டு கொல்லைப்புறத்தில் உள்ள கிணற்றடிக்கு விரைந்தாள்.

அங்கு பால்நிலவோடு விடியற்சாமத்துப் பனியும் பெய்து கொண்டிருந்தது. வானம் என்னும் மங்கை தன் மீது மேகங்களின் மேலாக்கை விரித்துப் போர்த்திக் கொண்டு அசைவற்று அயர்ந்து உறங்குவது போலவே தோன்றியது. அவளை அள்ளித் தழுவிக் கொள்ள ஆதவன் இன்னும் சிறிது நேரத்தில் தன் ஒளிக் கிரணங்களை விரித்துக் கொண்டே கிளம்பி வந்து விடுவான். அவன் புன்முறுவல் பூத்தபடியே வானத்து மங்கையின் முகத்தையெல்லாம் சிவக்க வைத்து விடுவான்.

இந்தக் கற்பனை ஏன் தோன்றுகிறது? உமா தன் நெஞ்சை அழுத்தி அமுக்கிக் கொண்டாள்.

கொல்லைப்புறத் தோட்டத்திலுள்ள வாழை மரங்கள் செடிகொடிகள் எல்லாம் பச்சைப் பசேலென்று தழைத்

துக் குலுங்கி இளமையின் எழுச்சிகளையே உணர்த்திக் கொண்டிருந்தன.

உமா கிணற்றிலிருந்து வாளியில் தண்ணீரை இறைத்து இறைத்துத் தன் மீது கொட்டிக் கொண்டு குளிக்கலானாள்.

அவள் அருகில் தேவகுமாரன் மறைந்து நின்று அவளையே உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பது போலவும், அவனுடைய வலிமையான கை ஒரு குறும்புச் சிரிப்புடன் அவளை நோக்கி நீளுவது போலவும் ஒரு பிரமை உண்டாயிற்று.



உமா விருட்டென்று ஈரப் புடைவையுடன் துள்ளினாள். பாதி குளித்தும் குளியாததுமான நிலையிலேயே குடுகுடுவென வீட்டினுள் ஓடினாள். பரபரப்புடன் துண்டை எடுத்துத் தன் உடம்பைத் துவட்டிக் கொண்டாள். பிறகு மெல்லப் புத்தாடைகள் புனைந்தாள். தலை வாரிப் பின்னிக் கொண்டாள். முன் இரவில் மேஜையின் மீது வைத்திருந்த மல்லிகைச் சரங்களை எடுத்துத் தன் தலையில் சூடிக்கொண்டாள். மனத்துக்கு ஒரு நிம்மதி பிறந்தது.

குளித்ததால் உடம்பெல்லாம் குளிர்ந்து உள்ளத்தில் அமைதி குடிகொண்டது. திடசித்தம் மிகுந்த பழைய உமாவாகவே அவள் மாறிவிட்டாள். ஆனால் அது மட்டும் அவளுக்குப் போதவில்லை. மனத்தை வேறு விஷயங்களில் திருப்பி இன்னும் அமைதிப்படுத்திக் கொள்ள வேண்டும் என்று தோன்றியது. பூஜையறைக்குள் சென்று பிள்ளையாரின் சுவர் மாடத்தின் முன்னால் குத்துவிளக்கு ஏற்றி வைத்தாள். அவ்விளக்கையும் சின்னப் பிள்ளையாரையும் நமஸ்கரித்து விட்டு விபூதியைப் பெரு விரலளவு எடுத்துத் தன் நெற்றியில் பூசிக் கொண்டு அதற்கு மேலே குங்குமப் பொட்டும் வைத்துக் கொண்டாள். மனத்தில் அமைதி நிறைந்து அவளுக்குள்ளே ஆத்மா முழுதும் குத்து விளக்குக்கு இணையாகச் சுடர் விட்டுப் பிரகாசிப்பது போல் அவளுடைய அழகான முகம் ஒரு தனிக் களையோடு மின்னியது.

பூஜை அறையை விட்டு உமா வெளியே வந்தாள்.

பொழுது இன்னும் விடியவில்லை. காலைப் பனியும் ஜில்லென்று கூதல் காற்றும் இன்னும் மறையவில்லை.

பொழுது விடியும் வரை என்ன செய்யலாம் என்று உமா யோசித்தாள். கூடத்தின் ஒரு மூலையில் கூதலுக்குப் போர்த்திக் கொண்டு ஒரு தோழி படுத்திருப்பது போல் அவளுடைய வீணை தென்பட்டது.

அந்த வீணையை உமா எடுத்து வைத்துக் கொண்டு அதன் தந்திகளை மீட்டினாள். ஆண்டாளின் பாசுரங்கள் தான் அப்போது அவள் மனத்தில் வந்து நின்றன. 'மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளால், நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர்' என்று தொடங்கும் திருப்பாவையின் முதல் பாடலை வீணையின் நாதத்திற்கு இழைய இனிய குரலில் பாடினாள்.

அதன் பிறகு 'வாரணமாயிரம்' என்னும் பாடல்களை நோக்கி உமாவின் மனம் படர்ந்தது. **(தொடரும்)**

"யாரது? முத்துசாமிதானே?" என்று குரல் கொடுத்தார் சர்மா.

அந்தி மயங்கி இருள் கவ்வி விட்ட வேளை. இனம் தெரியாத ஆறுதல் உருவத்தின் விளிம்பு மாத்திரம் தெரியக் கூடிய நேரம். ஆற்றங் கரைப் படித்துறையின் கிழக்கு ஓரத்தில் முழங்காலளவு ஆழ நீரில் நின்று சர்மா ஜபம் செய்து கொண்டிருந்தார்.

"ஆமாம்! நான்தான்! சர்மா சாரா?"

"ஆமாம்! முன்னாலே கிளம்பி விட்டால் பின்னையார் கோவில் முகப்பிலே நில்லும். நான் வந்துடறேன்."

"அவசரம் வேண்டாம். நீங்கள் சாவகாசமாக ஜபத்தை முடித்துக் கொண்டுவாருங்கள். நான் இங்கேயே படித் துறை மேல் படியிலே உட்கார்ந்திருக்கிறேன். இன்றைக்கு டியூஷன் பையன்கள்கூட வரமாட்டார்கள்."

"பத்து நிமிஷம்! அவ்வளவுதான்."



# பயத்திற்கும்

ஆர். எஸ். எஸ்

பின்னால் வந்த முத்துசாமி கால் கை கழுவிக் கொண்டு நிதானமாக ஐந்தாறு படிகள் ஏறி மேலே வந்து உட்கார்ந்தார். முகம், கை முதலியவற்றில் படர்ந்திருந்த ஈரம் காற்றிலே காய்ந்து கொண்டிருந்தது. அவர் பார்வை கீழே நின்று கொண்டிருந்த சர்மா மீது பதிந்திருந்தது.

"சேச்சே! அவர் எத்தனை உயர்ந்த மனிதர்! அவர் கீழே நின்று கொண்டிருக்கிறார். அவர் தலை மேல் உட்கார்ந்திருப்பது போல் நாம் மேலே உட்கார்ந்திருப்பதாவது! அபசாரம்" என்ற திடுக்கிட்ட நினைவுக்குப் பாத்திரமான முத்துசாமி சட்டென்று எழுந்து ஒரு படி கீழே இறங்கி நின்றார். சர்மா இருந்த பக்கமாக அவசரம் அவசரமாகப் பார்த்து ஒரு தடவை கரம் குவித்து மீண்டும் கைகளைக் கீழே தொங்க விட்டார். முத்துசாமி கடவுளைக் கண்டதில்லை. கடவுள் சர்மா உருவில் அவரைக் காப்பாற்றிப் புது வாழ்வு அளித்திருக்கிறார் என்ற எண்ணம் மாத்திரம் கனவிலும் நினைவிலும் முத்துசாமியின் நினைவிலிருந்து அகன்றதில்லை.

மாலை வேளை. மந்தகதியில் ஓடும் ஆற்றங் கரை. அதற்கப்பால் மார்பளவு உயரத்துக்கு வளர்ந்திருக்கும் நெற்கதிர்கள் எல்லாவற்றையும் தாண்டி முத்துசாமியின் சிந்தனை வெகு தூரம் ஓடி, காலை வேளையில் கலகலப்புடன் ஜனத் திரளை ரசிக்கும் திருச்சிராப்பள்ளி ரயில் சந்திப்பில் போய் நின்றது. பத்து வருடங்களுக்கு மேலாகி விட்டிருந்த போதிலும், அந்தக் காலை வேளை இன்னும் அவர் நினைவில் பசுமையாகவே இருந்தது. நினைவு பசுமையாக இருந்தாலும் அன்றைய காலை அநுபவம் என்னவோ பயங்கரமானதுதான்.

இரண்டே சிறு சூட்கேஸ்களில் தங்கள் ஆஸ்திபாஸ்திகளைத் திணித்துக் கொண்டு இரண்டு இதயங்களிலும் எல்லையற்ற துயரங்களையும் கஷ்டங்களையும் சுமந்து கொண்டு ரயிலில் பிரயாணம் செய்து கொண்டிருந்தார்கள் முத்துசாமி தம்பதிகள். அந்தச் சோக நிலையிலும் அவர்கள் அதிகாலை வேளையில் சற்றுக் கண்ணயர்ந்ததை எந்தப் பாவியோ சாதகமாக்கிக் கொண்டு அந்த இரண்டு சூட்கேஸ்களையும், லால்குடியிலோ ஸ்ரீரங்கத்திலோ நகட்டியவாறு இறங்கி விட்டான். பம்பாய் விக்டோரியா டெர்மினஸிலிருந்து மதுரை வரை போக வாங்கியிருந்த இரண்டு ரயில் டிக்கட்டுகளும் பத்திரமாக அந்தப் பெட்டிகளில் இருந்தன. ஏன், நாலைந்து ரூபாய் சில்லறைகளைக் கொண்ட மணி பர்ஸ்கூடத்தான் அந்தப் பெட்டியிலிருந்தது.

திருச்சி சந்திப்பில் டிக்கட் பரிசோதகர் வந்து நின்றபோதுதான் முத்துசாமி தம் நிலையை உணர்ந்தார். அவர் கண்கள் குளமானால் பரிசோதகரின் கடமை தீர்ந்துவிடுமா என்ன ?

பகவான் அப்போதுதான் சர்மா அவதாரம் எடுத்து உதவ முன்வந்தார். திருச்சி சந்திப்பில் அதே ரயிலில் ஏற வந்த சர்மா தாங்கள் சொல்வதை நம்பாமல் விழிக்கும் பரிசோதகர் முன் நிற்கும் அந்தத் தம்பதிகளைக் கண்டார். சில நிமிடங்கள் அவர்கள் அருகில் நின்று சம்பாஷணையைக் கேட்டதில் சர்மா முத்துசாமியின் வார்த்தைகளை நம்பினார். உடனே அவர்களுக்கு முந்திய சந்திப்பிலிருந்து அபராதத்துடன் ரசீது கிழிக்கப் பரிசோதகரிடம் சொல்லி விட்டுப் பணத்தைக் கொடுத்தார்.

பசி தீர்க்கப் பல காரங்களையும் வரவழைத்தார். அவர்களுக்கு எதிர்த்தாற் போலவே வந்து ரயில் பெட்டியில் அமர்ந்தார். பேச்சுக் கொடுத்தார்.

விளைவு! அந்தத் தம்பதிகள் தங்கள் திட்டத்தின்படி மதுரையில் இறங்கவில்லை. அதையும் தாண்டிச் சர்மாவுடன் கூடவே பிரயாணம் செய்து அவருடைய கிராமத்துக்கே போய்ச் சேர்ந்தார்கள். அந்தக் கிராமத்தின் மண் அவர்களுக்கு மறுவாழ்வு அளித்தது.

''ரொம்ப நேரமாயிடுத்தோ?'' என்று பக்கத்திலிருந்து எழுந்த சர்மாவின் குரல் முத்துசாமியின் சிந்தனையைக் கலைத்துத் திடுக்கிடச் செய்தது. ''அதெல்லாம் ஒன்றுமில்லை. நேரமானால்தான் இப்போது என்ன?'' என்று மரியாதையுடன் பதில் கொடுத்தார் முத்துசாமி.

இருவரும் எஞ்சியிருந்த படிகளைக் கடந்து மேலே பாதைக்கு வந்தார்கள். சர்மா உற்சாகமாக அடுத்த வாரம் அந்த ஊர் ஆரம்பப் பள்ளியில் நடக்கவிருக்கும் பெற்றோர்கள் தின ஏற்பாடுகளைப் பற்றிப்பேச ஆரம்பித்தார்.

''முத்துசாமி! என்னவோ நம் குழந்தைகளும் பள்ளிக்கூடம் போகின்றன. 'அத்தனைக் கத்தனை வீட்டில் தொந்தரவு குறைவு' என்ற மனப்பான்மை பெற்றோர்கள் உள்ளங்களிலே ஏற்படுவது சகஜம். ஆனால் நம் குழந்தைகள் இப்போது கற்கும் கல்வி அவர்களுடைய வருங்கால நல் வாழ்க்கைக்கு ஒரு ருசியான அஸ்திவாரமாக இருக்கும் என்ற எண்ணத்தை அவர்கள் உள்ளங்களில் தோன்றச் செய்ய வேண்டியது நம் கடமை. பெற்றோர் தின நிகழ்ச்சியில் ஒவ்வோர் அயிட்டமும்...''

முத்துசாமி குறுக்கிட்டார். ''ஒவ்வொரு அயிட்டமும் மணியானதாக இருக்கும். நம் பள்ளிக்கூடப் பையன்கள் மணிகள். உங்களுக்குத் தெரியாத



தையா நான் சொல்லப் போகிறேன்?'' என்றார் முத்துசாமி.

சர்மாவின் முகத்தில் திருப்தி உணர்ச்சி படிந்தது. ''முத்துசாமி! முகஸ்துதியாகச் சொல்றதாக நீர் நினைக்கக் கூடாது! உம்மை நான் அன்று திருச்சினாப்பள்ளியில் பார்த்தது இந்த ஊருக்கு நல்லதாகப் போயிற்று....'' என்று மேலும் ஏதோ சொல்ல வந்தார்.

''சார்! சார்!.... என் வாழ்க்கையிலே ஒரு நல்ல திருப்பம். ஓர் உத்தமரால் ஏற்பட்ட திருப்பம். அதை நான் ஒரு நாளும் மறக்க மாட்டேன்'' என்றார் முத்துசாமி நாத் தழுதழுக்க. சில நிமிடங்கள் இருவரும் பேசாமல் நடந்தார்கள்.

தெரு முனை விளக்கில் சர்மா தம் கைக் கடிகாரத்தைப் பார்த்தார். ''அடடே! மணி ஏழாகி விட்டதா? எட்டு பத்து பாஸஞ்சரில் என் மருமான் ஒருத்தன் வருவதாக எழுதியிருக்கிறான்! எத்தனையோ வருஷங்கள் கழித்து வருகிறான்! நாலு நாள் இருக்க மாட்டானோ? நாளைக்குக் காலையிலேயே திரும்பணுமாம். பட்டண வாழ்க்கையிலே மூழ்கிப் போயிட்டவாளுக்குக் கிராமம் என்றாலே கசக்கத்தானே செய்கிறது?'' என்றார் சர்மா. சர்மா நடையில் வேகம் ஏறியது. நேராக, அரை மைல் தூரத்தில் உள்ள ஸ்டேஷனுக்கு அவர் போகிறார் என்று ஊகித்துக் கொண்டார் முத்துசாமி. ''நானும் துணைக்கு உங்களுடன் ஸ்டேஷன் வரையில் வரட்டுமா?'' என்று கேட்டார்.

''வேண்டாம்! வேண்டாம்! உமக்கு நேரமிருந்தால் மறுபடியும் பந்தல்கார மன்னாரைப் பார்த்துப் பள்ளிக்கூட விழாவைப் பற்றி நினைவுபடுத்தும். ரொம்ப ஞாபக மறதியுள்ளவன்!'' என்று சொல்லி விட்டுச் சர்மா ஸ்டேஷன் போகும் பாதையில் திரும்பி நடக்கத் தொடங்கினார்.

எட்டு பத்து பாஸஞ்சர் வண்டி அரை மணி நேரம் தாமதமாக வந்து தொலைத்ததாலோ அல்லது முத்துசாமி அரை மணி நேரம் முன்னதாகவே பந்தல்கார மன்னாரைப் பார்க்கப் போகாமலிருந்ததாலோ தான் அந்த விபரீதம் நிகழ்ந்தது. முத்துசாமி கனவிலும் நினைத்திராத விபரீதம்!

மன்னாரைப் பார்த்துச் சொல்லி விட்டு அம்மன் கோவில் சந்து வழியாகத் திரும்பிச் சர்மா வீட்டு வாயிலை முத்துசாமி தாண்டவும் அங்கு வந்து நின்ற மாட்டு வண்டியிலிருந்து சர்மாவைத் தொடர்ந்து அவருடைய விருந்தாளி இறங்கவும் சரியாக இருந்தது. சர்மா முத்துசாமி இருவரின் தீவிர முயற்சியால் பஞ்சாயத்து போர்டு அங்கு போட்டிருந்த மெர்க்குரி தெரு விளக்கு ஒளியில் அந்த விருந்தாளி மருமானின் முகம் முத்துசாமிக்கு நன்கு தெரிந்தது. அவ்வளவுதான்! உலகமே அந்தகாரத்தில் மூழ்கி விட்டது போன்ற உணர்ச்சி முத்துசாமிக்கு! ஓட நினைத்தார். ஆனால் கால் துவண்டது.

''அடேடே!.... நீங்க முத்துசாமி இல்லையோ?'' என்று கேட்டார் சந்தேகம் ஒலிக்க அந்த ஆசாமி!

''மாதவா! சாரை உனக்கு எப்படித் தெரியும்? பம்பாயிலே பார்த்திருக்கிறாயா? சாட்சாத் முத்துசாமிதான்'' என்று குறுக்கிட்டார் சர்மா.

''இவர் இப்போது.....'' என்று தயங்கினான் மாதவன் என்று அழைக்கப்பட்ட மருமான்.

''இவர் எனது வலது கை, இடது கை எல்லாம்! இங்கேதான் இருக்கிறார்'' என்று இடை வெட்டிய சர்மா, ''முத்துசாமி! சம்சாரத்திடம் ஒரு வார்த்தை சொல்லி விட்டு இங்கேயே சாப்பிட வந்து விடும்! பேசிக் கொண்டிருக்கலாம்'' என்று எதிர் பாராத அழைப்பை விடுத்தார்.

''இல்லை! இல்லை!.... இன்றைக்கு ஒரு தலைவலி! நான் நாளைக் காலையில் வந்து உங்களைப் பார்க்கிறேன்!....'' முத்துசாமி தம்மை மறந்து ஓட்டமும் நடையுமாகத் தம் வீட்டை நோக்கிக் கிளம்பினார்.

நல்ல வேளை. சர்மா முத்துசாமியின் நடை வேகத்தைக் கவனிக்கவில்லை.

வீட்டிற்குள் நுழைந்த முத்துசாமி நேராகச் சுவாமி படத்தின் முன் போய்த் தலையில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டார். அவர் கண்களில் நீர் பொங்கி வழிந்தது. ''என்ன? என்ன?'' என்று பதறினாள் அவர் மனைவி பார்வதி. முத்துசாமியின் எட்டு வயதுப் பெண்ணும் ஆறு வயதுப் பையனும் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தார்கள்.

முத்துசாமி புறங் கையில் கண்களைத் துடைத்துக் கொண்டார். தொண்டையையும் கனைத்துக் கொண்டார்.

''பார்வதி! மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு நான் சொல்வதைக் கேட்டுக்கொள். இந்த ஊர் வாழ்க்கையும் இன்றோடு சரி! நாளைக்கு எந்த ஊரோ? கடந்த பத்து வருஷ வாழ்வு வெறும் கனவாகிப் போய் விட்டது!''

முத்துசாமியால் அதற்கு மேல் பேச முடியவில்லை. உணர்ச்சி வசப்பட்டார். பார்வதியோ விவரம் புரியாமல் சிலையாக நின்றாள். தன் கணவனுக்கும் சர்மாவுக்கும் ஏதும் அபிப்பிராய பேதமோ என்று திகைத்தாள்.

சர்மா ஓய்வுபெற்ற தாசில்தார். வசதியுள்ளவர். குழந்தை குட்டி இல்லாதவர். ஓய்வுபெற்றுக் கிராமத்தில் வந்து உட்கார்ந்ததும் கிராமத்தைப் பல வகையிலும் முன்னேற்றமடையச் செய்ய அவர் ஆசைப்பட்டார். ஆனால் இளைஞர்களெல்லாம் கிராமத்தை விட்டு வெளியேற விரும்புகிறார்களே தவிர அங்கிருந்து சர்மாவுக்கு உதவி புரியத் தயாராயில்லை. முதியவர்களோ எந்தவித முன்னேற்றத்தையும் விரும்பவில்லை. இந்த நிலையில்தான் பம்பாயில் தனியார் ஸ்தாபனம் ஒன்றில் பார்த்த வேலையைப் போக்கிக் கொண்டு வேறு வேலையும் கிடைக்காமல் படாத துன்பமெல்லாம் பட்டு, யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல், எங்கேயாவது ஹோட்டலில் பரிமாறுபவனாகவாவது பிழைத்துக் கொள்ள வேண்டியதுதான் என்று வந்த முத்துசாமி சர்மா கண்களில் பட்டார். முத்து

டிரில் மற்றும்
லாங்கிளாத்
வாங்கும் பொழுது

# டூவின் டஸ்கர்

சின்னம்
இருக்கிறதா என்று
கவனித்து
வாங்கவும் . . .



நீங்கள் நம்பும் தரத்திற்கு
அது ஒரு அத்தாட்சி

ஹார்வி **டூவின் டஸ்கர்**

டிரில் மற்றும் லாங்கிளாத்
மதுரை மில்ஸ் தயாரிப்பு
உயர்ந்த ரக நூல்களுக்கு பிரக்யாதி பெற்றது.
**மதுரை மில்ஸ் கம்பெனி லிட்.,** மதுரை
மானேஜிங் ஏஜெண்டுகள் - ஏ & எப் ஹார்வி லிமிடெட்



**மதுரையைச் சேர்ந்த ஹார்விஸ்**

83 HMC-15 A-TAM

பண்டிட் P.S. ராமசாமியவர்கள்

# சக்திசஞ்சீவி

குழந்தைகளின்

ஈரல். குலைக்கட்டி மகௌஷதம்

எங்கள் மாதாந்திர சுற்றுப் பிரயாணம் வழக்கம்போல் நடைபெறுகிறது. தங்கும் இடம், நேரம் வழக்கம்போல். ஆயுர்வேத முறைப்படி எல்லா வியாதிகளுக்கும் சிகிச்சை அளிக்கப்படும். விவரங்களுக்கு எமக்கு எழுதவும்

எங்கள் ஸ்பெஷல் மருந்துகள்

1. குமார சஞ்சீவி - வாயு பவுடர், குழந்தைகளுக்குக் கட்டி வராமல் தடுக்கக் கூடியது
2. குக்குட சஞ்சீவி - கக்குவான் இருமல் மருந்து
3. மயூர சஞ்சீவி - மாந்த எண்ணெ
4. நாக சஞ்சீவி - பிரளி வாயு எண்ணெ
5. கண்டசக்தி ரஸாயனம் - தொண்டை சதை வளர்ச்சியை ஆபரேஷ னில்லாமல் குணப்படுத்தக் கூடியது

## ஸ்ரீ சக்தி விலாஸ வைத்யசாலை, கரூர்

போன் : 87

கிளை ஆபீஸ்கள்

1. 2332, V-th கிராஸ் ரோடு
மல்லேஸ்வரம், பெங்களூர் - 3

2. 94, டவுன் ஹைஸ்கூல் ரோடு
கும்பகோணம், தஞ்சை ஜில்லா

# க்ருஷன் ஸால்ட்ஸ்

அருந்துங்கள்

## பசியைத் தூண்டுகிறது அது

அதன் பயன்
மிக்க 7-வழிச்
செயல் முறை
உங்கள் உடல்
நலனைத்
தக்கபடி
பாதுகாக்கிறது




நிக்கோலஸ் (N) தயாரிப்பு

தூய்மைக்கும், தரத்திற்கும் சிறந்த
பெறும் உத்தரவாதம்

BI-KS-2 TAM

சாமியைத் தம் நோக்குக்காகப் பயன்படுத்திக் கொள்ளவும் தீர்மானித்தார்.

ஒரு நல்ல பள்ளிக்கூடம் கிராமத்தில் சர்மாவின் சொந்த முயற்சியில் தோன்றியது. சர்மா அதன் நிர்வாகி. முத்துசாமி தலைவர். தெருக்களையும் வீடுகளையும் சுத்தமாக வைத்துக் கொள்ளும் பழக்கத்தைச் சுகாதார ஊழியர்களாக மாறி ஏற்படுத்தினார்கள். சிதிலமடைந்து கிடந்த அம்மன் கோவிலைப் புதுப்பித்தார்கள். தெருக்களில் மாடுகள் கண்டபடி நடை போடாமல் பால் பண்ணையைத் தோற்றுவித்தார்கள். ஏழெட்டு வருடங்களில் கிராமம் உருமாறிப் போய் விட்டது. சர்மா வயோதிகத்தின் காரணமாகப் பல பொறுப்புக்களை முத்துசாமியிடமே நம்பி ஒப்படைத்து விட்டார். இவைகளில் பணப் பொறுப்பு நிறைந்த அயிட்டங்கள் அதிகம்.

மாதவன் இந்தச் சூழ்நிலையில் சூறாவளியைத் தோற்றுவித்து விடுவானோ?

''என்ன நடந்தது? சொல்லுங்கள்!'' என்று பதறினாள் பார்வதி மீண்டும்.

முத்துசாமி எழுந்திருந்தார். ''பார்வதி! எதை நாம் மறைக்க வேண்டும், மறக்க வேண்டும் என்று நினைக்கிறோமோ அதில் வெற்றி காண முடியாது என்பதை இயற்கை நிரூபித்துவிட்டது. நான் ஒரு திருடன். பக்கத்துப் போர்ஷனிலுள்ள சிறுமியின் கழுத்துச் சங்கிலியைத் திருடியவன் என்ற விஷயம் இத்தனை நேரம் சர்மாவுக்குத் தெரிந்திருக்கும். அவர் என்னிடம் கொண்டுள்ள அன்பும் வைத்திருந்த மதிப்பும் சிதறித் தூளாகப் போயிருக்கும். மாதுங்காவில் பக்கத்துத் தெருவில் இருந்தானே மாதவன், அவன் இன்றைக்குச் சர்மா வீட்டுக்கு வந்திருக்கிறான். உறவாம். அந்தக் காலத்தில் அவன் தான் 'வேலையற்ற நான்தான் திருடியிருப்பேன்' என்று துணிந்து பிரசாரம் செய்தவன். அவன் நிச்சயம் என்னைப் பார்த்தவுடன் சர்மாவிடம் பழங் கதையைச் சொல்லியிருப்பான். சர்மாவாக என்னிடம் கேட்க மாட்டார். ஆனால் அந்த உத்தமரிடம் நெருங்கிப் பழக எனக்கு அச்சம் ஏற்பட்டுவிட்டது. ஆகவே...'' முத்துசாமி முகவாய்க் கட்டையைத் தடவிக் கொண்டார்.

அவர் மனத்திரையில் அந்தச் சம்பவம் பளிச்சிட்டது. அவர் வேலை பார்த்து வந்த கம்பெனி மானேஜர் அற்ப காரணத்திற்காக முத்துசாமியை வேலையிலிருந்து நீக்கி விட்டார். வேறு வேலை கிடைக்கும் என்ற நம்பிக்கை இல்லை. முயற்சி எல்லாம் வீண். இருந்த எல்லாச் சாமான்களையும் அநேகமாக விற்றுச் சாப்பிட்டாயிற்று. சொந்த ஜில்லாப் பக்கம் திரும்பலாம் என்றால் ரயில் சார்ஜுக்கு வழியில்லை.

முத்துசாமிக்குப் பைத்தியமே பிடித்து விடும் போலாகி விட்டது. கைமாற்றுத்தான் கேட்க வருகிறாரோ என்று நண்பர்கள் எல்லாம் ஒதுங்கி ஒளிந்தார்கள். இப்படிக் கைமாற்றுக் கேட்கப் பக்கத்துப் போர்ஷனுக்குப் போன போதுதான் அந்தத் தங்கச் சங்கிலி இடம் மாறி அவர் கைக்கு வந்தது. மேஜையில் சங்கிலி இருந்தது. ஹாலில்

## குட்டிக் கதை

**க**ஞ்சப்பெருமாளை உங்களுக்குத் தெரியுமா? தெரியாதென்றால், பெரிய ஆஸ்பத்திரி வாசலுக்குப் போங்கள், தெரிந்து கொள்ளலாம். கஞ்சன் என்றால் சாதாரணக் கஞ்சன் இல்லை அவன். எச்சில் கையால் ஈ காக்கை ஓட்ட மாட்டான்.

ஒரு சமயம் பெரிய பணக்காரப் பெண்மணி ஒருத்தி ஆஸ்பத்திரிக்கு வந்தாள். இரத்தம் ஏற்றினால்தான் அவள் பிழைப்பாள் என்ற நிலைமை ஏற்பட்டது. யார் யாரோ இரத்தம் கொடுக்க முன் வந்தார்கள். ஆனால் யாருடைய இரத்தமும் அவளுக்கு ஒத்துக் கொள்ளவில்லை. கஞ்சப்பெருமாள் அங்கே நின்று கொண்டிருந்தவன், கடைசியில், 'என் இரத்தம் சேருகிறதா, பாருங்களேன்!' என்றான்.

பார்த்தார்கள். சேர்ந்தது. அவன் இரத்தத்தை அந்தப் பெண்மணிக்கு ஏற்றினார்கள். இவ்விஷயம் அறிந்த அந்தம்மாள் அவனுக்கு நூறு ரூபாய் இனாம் கொடுத்தாள்.

'ஊதாரிச் செலவு' என்று முணுமுணுத்தது கஞ்சப் பெருமாளின் இருதயம். இருந்தாலும் நூறு ரூபாய் கிடைத்த திருப்தி அவன் முகத்தில் தாண்டவமாடியது.

மறு வாரமும் இரத்தம் ஏற்ற வேண்டும் என்ற நிலை ஏற்பட்ட பொழுதும், கஞ்சப் பெருமாளேதான் இரத்தம் கொடுக்க வேண்டியிருந்தது.

அவள் மகிழ்ந்து ஐம்பது ரூபாய் இனாம் அளித்தாள். பாதிக்குப் பாதியாகப் பணத்தைக் குறைத்து விட்டாளே என்று குறைப்பட்டுக் கொண்டான் கஞ்சப் பெருமாள். ஆயினும் அவனை அறியாமல் அவன் உள்மனம் புல்லரித்தது. அப்படிப் புல்லரிப்பதன் அர்த்தம் அவனுக்கு விளங்கவில்லை.

மூன்றாம் முறையாக இரத்தம் கொடுக்க வேண்டிய நிலை ஏற்பட்ட பொழுது, கஞ்சப் பெருமாளின் இரத்தம் அவள் உடலில் நன்றாக வேலை செய்யத் தொடங்கியிருந்தது.

இரத்தம் கொடுத்தவன் ஏதாவது பணம் கிடைக்குமா என்று எதிர்பார்த்தான். அவள் வாயிலிருந்து 'நன்றி' என்ற சொல் மட்டுமே வெளி வந்தது. அதுவும் வெகு நேர யோசனைக்குப் பின்னரே வந்தது.



அவன் இரத்தம் தான் அவள் இரத்தத்திலும் நன்றாக ஊறிப் போயிருந்ததே! அதனால் நன்றி சொல்வதற்கும் அவள் உள்ளம் தயங்கியதில் ஆச்சரியம் என்ன?

யாரும் இல்லை. முத்துசாமி துணிந்து விட்டார். சங்கிலியை எடுத்து வந்து ஒளித்து வைத்தார். அவசரப்படவில்லை.

ஆனால் எல்லோரும் அவசரமாக அவரைத் தான் சந்தேகப்பட்டார்கள். ஆனால் ருசு ஒன்றும் இல்லையே. ஒரு வாரம் கழித்து முத்துசாமி சங்கிலியுடன் கல்பாதேவிப் பகுதிக்குப் போனார். திரும்பி வரும்போது பணத்துடன் வந்தார். மறு நாள் யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் மனைவியுடன் கிளம்பி விட்டார். சர்மாவிடம் முத்துசாமி எல்லாக் கஷ்டங்களையும் விவரமாகச் சொல்லியிருக்கிறார். ஆனால் சங்கிலி விஷயத்தை மாத்திரம் சொல்லவில்லை. அதைப் பற்றி அவர் வேறு முடிவு செய்திருந்தார்.



''நம்ம கல்யாணத்துக்கு என் அப்பா எல்லாச் சாமான்களும் கல்லு கல்லா வாங்கிக் கொடுத்திருக்கார். அப்படியிருக்கச்சே உங்கம்மா பெரிசா குறை சொல்றாளே!''

''சேச்சே! அப்படியா சொல்லறா? இந்த மெத்தை ஒண்ணே போதுமே? எவ்வளவு கல்லாட்டம் இருக்கு!''

இப்போது சங்கிலி விஷயத்தை மாத்திரம் பிரத்தியேகமாகச் சொல்ல மாதவன் வந்து முளைத்திருக்கிறானா?

''நீங்கள்தான் அந்த விஷயத்தை.....'' என்று ஆரம்பித்தாள் பார்வதி.

''உஷ்! தவறு செய்தது செய்ததுதான். அதற்குப் போர்வை போட்டாலும் மறைக்க முடியாது. முந்திய எண்ணத்துக்கும் பிந்திய எண்ணத்துக்கும் இடையே எத்தனையோ வித்தியாசம் உண்டு. நாளைக்கு எப்போது சரியான சமயமோ அப்போது போய்ச் சர்மாவைப் பார்த்து நடந்ததைச் சொல்லி அவர் காலில் விழுந்து எழுந்திருந்து மூட்டை முடிச்சுடன் கிளம்பியாக வேண்டும். அவர் நம்பிக்கைக்கு இனி நான் பாத்திரமாக இருக்க இயலாது. அவரும் நம்ப மாட்டார். அவரும் மனிதர் தானே!''

முத்துசாமி அப்படியே கையைத் தலைக்கு உயரமாக வைத்துப் படுத்து விட்டார்.

அடுத்த நாள் முற்பகல். ஒன்பதேகால் பாசஞ்சரில் மருமானை அனுப்பிவிட்டுச் சர்மா திண்ணை ஈஸிசேரில் சாய்ந்திருந்தார். தயக்கத்துடனும் வெட்கத்துடனும் தலைகுனிந்து முத்துசாமி அவரை நோக்கி வந்தார்.

சர்மா இளைஞன் போல் துள்ளி எழுந்தார். முத்துசாமியை நோக்கி ஓடி வந்து அவரை அப்படியே ஆலிங்கனம் செய்து கொண்டார்.

''முத்துசாமி! நீர் லட்சத்தில் ஒரு மனிதரையா!'' என்று பரவசத்துடன் சொன்னார். முத்துசாமிக்கு ஒன்றுமே புரியவில்லை. திக்கித் திணறி, ''என்ன சொல்கிறீர்கள்?'' என்று கேட்டார்:

''மாதவன் எல்லாவற்றையும் விவரமாகச் சொன்னான். நீங்கள் சங்கிலியை எடுத்த விஷயத்தைப் பற்றியும், அப்புறம் நாலைந்து வருடங்கள் கழித்து அந்தச் சங்கிலியின் அன்றைய பெறுமானத்தைப் பணமாக அனுப்பி வைத்ததையும் சொன்னான். முந்திய செயல் சாதாரணமானது. தவறு செய்வது சகஜம். அதைத் திருத்திக் கொள்வது அவ்வளவு சாதாரண விஷயமில்லை. நீர் செய்திருக்கிறீர். சத்தியத்துக்கு மதிப்புக் கொடுத்தவர் நீர்.'' சர்மாவின் கண்களில் நீர் துளித்தது.

முத்துசாமி சக்தி இழந்து கீழ்த் திண்ணையிலே உட்கார்ந்து விட்டார். அவர் நினைத்து வந்ததென்ன? நடப்பதென்ன?

''நான்தான் சங்கிலியின் கிரயத்தை அனுப்பி வைத்தேன் என்று அவர்களுக்குத் தெரிய நியாயமில்லையே. நான் கையெழுத்து ஊர் பெயர் ஒன்றும் குறிப்பிடவில்லையே. செய்த தவற்றுக்குப் பிராயச்சித்தமாக அனுப்பினேன். அநுகூடக் காலம் கடந்தது. இங்கு வந்த பிறகு கொஞ்சம் கொஞ்சமாகப் பணத்தைச் சேர்த்து அனுப்பியது.....'' என்று தயங்கியபடியே ஆரம்பித்தார் முத்துசாமி.

''எப்படித் தெரியாமல் போகும்! 'அந்த முத்துசாமி சார்தான் அடிக்கடி பேச்சிலே ''பகவான் தூணிலும் இருக்கிறார், துரும்பிலும் இருக்கிறார். நாம் நினைப்பவை செய்பவை எல்லாவற்றிலுமிருந்து கவனிக்கிறார்'' என்று சொல்லுவார். இந்தப் பணம் அனுப்பிய கடிதத்திலும் மன்னிப்புக் கேட்கையில் அதே மாதிரி எழுதியிருக்கிறது. ஆகவே முத்துசாமி சார்தான் எழுதியிருக்கணும். அவரைத் தானே நாம் சந்தேகப்பட்டோம்' என்றாளாம் மாதவனின் மனைவி. மாதவன் உம்மைப் பார்த்துப் பாராட்டிவிட்டுப் போக வேண்டும் என்று சொன்னான். ரயிலுக்கு நேரமாகி விட்டது. போய் விட்டான்!'' சர்மாவும் முத்துசாமிக்கு அருகில் உட்கார்ந்தார்.

முத்துசாமி சட்டென்று எழுந்தார். ''சார்! சார்! நான் உங்கள் எதிரேகூட நிற்க அருகதையில்லாதவன்! உள்ளத்திலே கள்ளம் புக அனுமதித்தவன்!'' என்று விசும்பினார்.

''அந்தச் செயலைத் துணிந்து துடைக்க முன் வந்த உத்தமர் ஐயா நீர். எத்தனையோ மைல்களுக்கு அப்பால் எப்போதோ செய்த தவற்றுக்காகப் பணத்தைச் சேர்த்துச் சபலத்தையும் ஆசையையும் தேவையையும் கட்டுப்படுத்திக் கொண்டு ஈடு செய்தீரே. அந்த எண்ணம்தான் ஐயா, மனிதப் பண்புக்குத் தேவையானது. என் மதிப்பில் நீர் மிகவும் உயர்ந்து விட்டீர்'' என்றார் சர்மா நாத் தழுதழுக்க.

முத்துசாமி சிலையாக நின்றார்.

அவர் வந்தபோது இருந்த மன நிலை என்ன? இப்போது நடப்பதென்ன?


New
COLGATE
BABY
POWDER










ஸ்ரீ ராமாநுஜர்
பி.ஸ்ரீ

# வட்டமேஜை

## பகல் கொள்ளை

சேலம் மாவட்டம் தாரமங்கலம் டவுன் பஞ்சாயத்தில் எவ்விதத் தீர்மானமும் இல்லாமல் தனியார் கிணறுகளுக்குத் தண்ணீர் பம்புகளில் குடம் ஒன்றுக்கு 10 பைசா வீதம் பணம் வசூல் செய்ய அதிகாரம் அளித்து வசூல் செய்து வருகிறார்கள். பணம் கொடுக்காதவர்கள் தண்ணீர் பிடிக்கக் கூடாது என்று தடுக்கிறார்கள். வீட்டுக்கு மூன்று குடம் நாலு குடம் என்று கணக்கிட்டு ரேஷன் வழங்கியிருக்கிறார்கள். மழை அதிகமாகப் பெய்து குளம் குட்டைகளில் நீர் நிரம்பி வழியும் இக்காலத்திலும் (ஆவணி மாதம்) ரேஷன் முறை நீங்கவில்லை.

இதுபற்றி நிர்வாக அதிகாரி முதல் கலெக்டர் வரை புகார் செய்தும் புகார் கவனிக்கப் படவில்லை.

தாரமங்கலம்
18–8–64 டி. வி. மாரிமுத்து

## தஞ்சமளிக்கும் தஞ்சையப்பன்

தஞ்சைக்கு அப்பெயர் ஏற்படப் பல காரணங்கள் கூறுவதுண்டு. அவற்றில் ஒன்று திருமால் இப்பதியிலே தஞ்சன் என்ற அரக்கனை சம்ஹாரம் செய்து உலகுக்குத் தஞ்சமளித்தது என்பார்கள். தஞ்சைக்குப் பேர் தந்த அந்தப் பெருமானின் ஆலயம் நகரில் பிரதானமாக விளங்கிய ஒரு காலமும் உண்டு. பன்னிரண்டாம் நூற்றாண்டில் வீரசைவ சோழ மன்னரொருவர் ஆட்சியில் இப்பெருமான் தஞ்சையிலிருந்து புறப்பட்டுத் திருவையாறு செல்லும் பாதையிலுள்ள வெண்ணாற்றங்கரையில் எழுந்தருளியதாகக் கருதப்படுகிறது. தற்போது வெண்ணாற்றங்கரையில் ஸ்ரீ செங்கமலவல்லி சமேத நீலமேகப் பெருமாள், ஸ்ரீ அம்புஜவல்லி சமேத மணிக்குன்னப் பெருமாள், ஸ்ரீ தஞ்சை நாயகி சமேத வீரசிம்மப் பெருமாள், ஸ்ரீ வரதராஜப் பெருமாள் ஆக ஐயனின் நான்கு மூர்த்தங்களுக்கும் ஆலயங்கள் உள்ளன. இவை நான்கிலும் திருப்பணி நிறைவேறி இம்மாதம் பத்தாந் தேதி காலையில் ஒரே சமயத்தில் கும்பாபிஷேகம் நடைபெறுகிறது. மாமணிக் கோயிலில் உறையும் தூமணி வண்ணனைத் தரிசித்துத் தூய்மை பெற ஒரு புண்ணியமான சந்தர்ப்பம். அதோடு செல்வநாயகியான திருவளர் மார்பனின் கைங்கரியத்துக்குப் பொருள் உதவி அளித்தும் திரு அருள் பெறலாம். திரவியம் அனுப்ப வேண்டிய முகவரி: காரியதரிசி, தஞ்சை மாமணிக் கோயில் திருப்பணிக் கமிட்டி, அரண்மனை தேவஸ்தானம், தஞ்சை.

தஞ்சை
18–8–64 ஏ. எஸ். ரங்கநாதாச்சாரியார்
உதவித் தலைவர், திருப்பணிக் கமிட்டி

## கடன் வசதி

உழவு மாடுகளுக்கான கடன் வசதி தீவிரச் சாகுபடித் திட்டத்தில் உள்ள ஊர்களுக்கே இன்னும் கிடைக்க வில்லை.

நிலச் சீர்திருத்தத்துக்கான கடனும் கிடைக்க வில்லை. சாகுபடி செய்யும்போது உபயோகப்படுகிற உரத்துக்கான கடன் சிலருக்கு இரண்டு நாள் முன்தான் கிடைத்தது.

தீவிரச் சாகுபடித் திட்டத்தில் பொறுக்கு விதைகள் பேரளவுக்கு டிப்போவிலிருப்பதாய்ச் சொல்கிறார்கள். ஆனால் கிராமங்களில் இதன் விவரமோ, விநியோகமோ இல்லை.

விவசாய சம்பந்தமான அதிகாரிகள் கிராமங்களுக்குப் போவதே கிடையாது. சேவகர்கள், மந்திரிகள் சுற்றுப் பிரயாணம் செய்வது போல் செய்து விட்டுப் போய்விடுகிறார்கள். விவசாய சம்பந்தமான வார்த்தையே அவர்களுக்குப் புரிவதில்லை.

சீர்திருத்தக் கடன் என்பது சித்திரை வைகாசி மாதங்களில் நிலத்தைச் சீர்ப்படுத்த தேவையானது. ஆற்றில் தண்ணீர் வருவதற்கு முன் விவசாயியின் உழவு மாடுகளுக்கான கடன் வசதியும் தருணமறிந்து தரப்பட வேண்டும். இவற்றைக் கூட நம் சர்க்கார் புரிந்துகொள்ள வில்லை.

என் போன்ற சில்லறை மிராச விவசாயிகள் இன்னும் இரண்டு வாரங்களில் சாகுபடி நிலையில் இருக்கிறோம். சீர்திருத்தக் கடன், உழவு மாட்டுக் கடன், உரத்துக்கான கடன் எல்லாம் தீவிரச் சாகுபடித் திட்டத்தின் கீழ் ஆபீஸ் கணக்கில் 'சாங்ஷ'னாகி இருக்கிறது. ஆனால் பணம் மட்டும் எங்களுக்குக் கிடைப்பது கிடையாது.

தஞ்சாவூர்
22–8–64 எம். துரைராசன்

வெண்ணாற்றங்கரைப் பெருமாள்



# பாங்க் மட்டுமல்ல—
# பாங்கைவிட
# மேலான பாங்க்

டாக்டர் ராஜேந்திர பிரசாத் கனரா பாங்கின் அலுவலகக் காரியாலயத்தின் அடிக்கல்லை நாட்டும்பொழுது, "உங்களுடைய அநேக க்ஷேம நல திட்டங்கள் என்னை வெகுவாகக் கவர்கின்றன. உங்கள் புத்தக பாங்க், ஜுபிலி கல்வி நிதி, ஊழியர் வீடுகட்ட கடன் வசதித் திட்டம், ஜுபிலி ஊழியர் க்ஷேம நல நிதி முதலியவை சமூக முன்னேற்றத்திற்காக நீங்கள் செய்துவரும் மகத்தான சேவைக்கு எடுத்துக் காட்டுகளாக விளங்குகின்றன..." என்று கூறினர்.

முன்னாள் இந்திய ஜனாதிபதியின் இந்தப் பாராட்டுதல், கனரா பாங்க் தொன்று தொட்டு செய்துவரும் சமூக சேவைக்கு மேலும் ஊக்கமளிக்கிறது.

அநேக க்ஷேம நல ஸ்தாபனங்களைத் தானே தீவிரமாக இயக்கியும், மேலும் பல க்ஷேம நல ஸ்தாபனங்களுக்குத் தொடக்கத்து உதவியளித்தும், இன்று கனரா பாங்க் "பாங்க் மட்டுமல்ல - பாங்கை விட மேலான பாங்க்" எனத் திகழ்கிறது.



பாங்கின் நிர்வாக அலுவலகக் கட்டிடம்

## கனரா பாங்க் லிமிடெட்

(ஸ்தாபிதம் : 1906)

பதிவுக் காரியாலயம் : மங்களூர்

நிர்வாகக் காரியாலயம் : பெங்களூர்

உலகமுழுதும் பிரதிநிதிகள்

இந்தியாவில் 235 கிளைகளுக்குமேல் உள்ளன

ஜுபிலி கல்வி நிதி

புத்தக பாங்குகள்

க்ஷேமநல உதவி சங்கம்

பாங்க் நண்பர்கள்
பயிற்சித் திட்டம்

கண்காட்சி மூலம்
பாங்க் கல்வி

பொன் விழா
ஊழியர் க்ஷேமநலத் திட்டம்

கனரா வங்கியின் ஊழியர்கள்
வீடுகட்ட கூட்டுறவு சங்கம்

கே-108/த

# ஒரு ரூபாய்!

ஸ்ரீரஞ்சனி



ஸ்ரீமான் ரங்கநாதம் கல்லாப் பெட்டியை எடுத்துச் சிறிய பெட்டிக்குள் வைத்து, சிறிய பெட்டியை இரும்புப் பெட்டகத்துக்குள் வைத்து, பெட்டகத்தை இழுத்துப் பூட்டினார். இருமுறை வலுவாக இழுத்துப் பார்த்து நன்றாகப் பூட்டி விட்டோமென்ற திருப்தியுடன், சிவப்பு உருமால் துண்டை எடுத்துத் தோளில் உதறிப் போட்டுக் கொண்டு கடையைப் பூட்டத் தயாரானார். சம்பளத்துக்கு வேலை செய்யும் சரவணன் நம்பர் போட்ட பலகைகளை ஒவ்வொன்றாக எடுத்துச் செருகிக் கடையைக் கட்ட ஆரம்பித்தான்.

தெருவில் 'சரக் சரக்' என்று கனத்த பூட்ஸ் ஒலி கேட்டது. ஸ்ரீமான் ரங்கநாதம் தம்மை யறியாமலேயே சட்டைப் பையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு மெதுவாக மனமில்லாமலே திரும்பிப் பார்த்தார். அவர் எதிர்பார்த்ததுதான்!

''சலாம் சாப்!'' — வலது கை ஒருமுறை நெற்றி வரை உயர்ந்து தாழ்ந்தது. தயங்கி நின்றான் சலாமிட்ட கூர்க்கா லட்சுமண சிங்.

அவனைவிட அதிகமாகத் தவித்தார் ரங்கநாதம், எங்கேயாவது அவன் வாய் திறந்து கேட்டு விடப்போகிறானே என்று.

''சலாம் சாப்!'' இரண்டாவது முறையாக அவன் சலாம் வைத்தான். பொருள் என்னவென்பது ரங்கநாதத்துக்குத் தெரியும் என்பதை லட்சுமண சிங் அறிவான். அதனால் தான் அவன் அப்படி சூசகமாக வெளியிட்டான்.

ஆனால் ரங்கநாதத்திடமா?

''சிங்...சில்ரே நஹி... மண்டே.... ஆவ். இன்னிக்கி...ஜாவ்....'' என்று பிரலாபமாடி விட்டார். கூர்க்கா மூன்றாவது தடவையாக ஒரு சலாம் வைத்துவிட்டு, பூட்ஸைத் தேய்த்துக்கொண்டு அடுத்த கடைக்குச் சென்றான். சரவணன் கடையைப் பூட்டி, கொத்துச் சாவியை ரங்கநாதத்திடம் நீட்டினான். ''பாண்டுரங்கா!'' என்றபடியே சாவியை வாங்கிய அவர் நிம்மதியாகப் பெருமூச்சு விட்டார்.

'அப்பாடா. இன்றைக்கும் லட்சுமண சிங் போய்விட்டான். அந்த ஒரு ரூபாயைக் காப்பாற்றி விட்டேன்.... இன்றைக்குத் தேதி ஐந்து ஆகிவிட்டதே. இன்னும் இரண்டு மூன்று நாட்கள் தள்ளிப் போடலாம். பத்துத் தேதிக்குக் கொடுத்தால்தான் என்ன குடி முழுகிப் போய்விடும்...? இந்த ஒரு ரூபாய் தான் அவனைத் தாங்கப் போகிறதோ? ஏதோ ராத்திரி நேரத்தில் கடையை எவனும் ஒடைச்சு உள்ளே புகுந்து விடுவானோங்கிற பயத்துக்காக, இவனுக்கு ஒரு ரூபாய்க் காக கொடுக்கிறோம். 'டொக் டொக்' என்று பாறைத் தடியைத் தட்டிக் கொண்டு இப்படியே சுற்றிக்கிட்டு வர்றான்.... மென்னத்தான் வாங்கிக்கிறான் பய மகன்...'

கடைப் பூட்டை ஒருமுறை வலுவாக இழுத்துப் பார்த்துவிட்டு, மேற்கு முகமாகக் கிளம்பினார் ரங்கநாதம்... ஐந்தாறு கடைகள் தாண்டியதும் லட்சுமண சிங் மறுபடியும் கண்ணில் தென்பட்டான். ஆனால் அவன் அவரிடம் எதுவும் கேட்கவில்லை, அவரைப் பார்த்ததாகக்கூடக் காட்டிக் கொள்ளவில்லை.

அடுத்த கடை, அடுத்த கடை, அதற்கும் அடுத்த கடை.... அவன் தடியைத் தரையில் தட்டியபடி தொடர்ந்து நடந்தான்.

ஃ ஃ ஃ

'மனிதனாகப் பிறந்து விட்ட ஒவ்வொருவனும், மனிதப் பிறவியின் பயனை எய்தியதாகக் கருதப்பட வேண்டுமானால், மனிதனாக மதிக்கப்பட வேண்டுமானால், பிறந்த வினாடியிலிருந்து கடைசி மூச்சுப் பிரியும் அந்த வினாடிவரை உள்ள ஒவ்வொரு விநாடியிலும் விநாடிக்கு ஒரு ரூபாய் முடியாவிட்டாலும் வினாடிக்கு ஒரு நயா பைசா என்ற விகிதத்திலாவது அவன் பணம் சேர்க்க வேண்டும்' என்ற பொன்மொழியை அச்சிட்டு விற்பனை செய்யலாமே என்று ஆதங்கப்பட்டவர் ஸ்ரீமான் ரங்கநாதம். ஆகையால் சம்பாதிக்கப்பட்ட ஒவ்வொரு ரூபாயையும், பைசாவையும் உயிரைப் போலப் பாதுகாக்க வேண்டும் என்ற பாதுகாப்பு மனப்பான்மை அவரது உள்ளத்தில் நிரம்ப ஊறியிருந்தது. பிறருக்குக் கொடுபடவேண்டிய பணமாயிருந்தால் கூட, எவ்வளவு நாள் முடியுமோ அவ்வளவு நாட்கள் அதைத் தள்ளிப் போட்டு, இயன்றவரை 'தம் பணமாக' வைத்துக்கொள்வதை ஓர் அருங்கலையாகப் பயின்றவர் அவர். இந்த உயரிய நோக்கத்தை நிறைவேற்றுங்கால் ஏற்

படும் சிறிய அவமதிப்புக்களையும் கேலிப் பேச்சுக்களையும் அவர் காதில் போட்டுக் கொள்வதில்லை.

'நாமென்ன சார் ஹைதராபாத் நிஜாமா என்ன? பணம் கொட்டியா கிடக்கு? அவரே பணம் இல்லே, போதவில்லே என்கிறார் என்றால்... காசு விஷயத்தில் அப்படித்தான் சார் இருக்க வேண்டும். அலட்சியமாயிருக்கக் கூடாது. லட்சுமி தங்க மாட்டாள். ஒரு ரூபாய்னு அனாவசியமாகச் சொல்லிவிட முடியுமா? கையிலே காசு நிறைய இருக்கிற போது ஓர் ஒற்றை ரூபாய்க்கு மதிப்பு இருக்காதோ என்னவோ (சேச்சே!... அபசாரம்... அப்படிச் சொல்லக் கூடாது) ஒற்றை ரூபாயின் மதிப்பு தேவையைப் பொறுத்துத் தானே தவிர....

'இந்தச் சிங்தான் இருக்கான். மாசம் முழுசாக ஒரு ரூபாய் சம்பளம் வாங்குறான் நம்மகிட்ட.... சும்மாவா கிடைக்கும். ஒரு மாதம் முழுக்க ராக்கண் முளிச்சு... நம்ம கடையிலே களவு போகாமல் காப்பாத்தி...

'ஊர் விட்டு ஊர் வந்து ஊரான் உடைமையைக் காப்பாத்த வேலை செய்யறாங்க... ஒரு நாள் இராத்திரி இரண்டாவது ஆட்டம் சினிமாப் பார்க்கக் கண் முழிச்சா அப்புறம், அந்த வாரம் முழுதும் கண் எரிச்சலும், மயக்கமும் வர்றது நமக்கு... அவங்க எப்படித்தான் இருக்கிறாங்களோ?... அதுவும் ஒரு ரூபாய்க்காக....

'இருக்கட்டும், இருக்கட்டும். அவனை என்ன மோசம் பண்ணிவிடவா போகிறோம்? இன்னும் இரண்டு நாட்கள் பொறுத்துத் தந்துடப் போறோம். மொதல் தேதியிலேயே கொடுத்தா, மத்தவங்க கொடுத்த சம்பளத்தோடு நம்ப ஒரு ரூபாயும் செலவாயிப்பூடும். பத்துத் தேதிக்குக் கொடுத்தால் உபகாரமாக இருக்கும்னுதானே அப்படிச் செய்யறோம். அவன் வாயை மூடிக்கிட்டுப் பத்துப் பதினைந்து தேதிக்கு வாங்கிக்கறான். இந்த ஊர்க்காரப் பசங்க இருக்காங்களே...சுத்த இவனுக... நான் வந்து லட்சுமண சிங்கை ஏமாத்தறேனும். நல்ல வேலை... சங்கம் கிங்கம்னு ஏதாவது இவங்க வச்சிருந்தாங்கன்னு இந்தச் சிங் இப்படிப் பேசாமல் இருக்க விடுவாங்களா? சிங் நல்ல மனுஷன்தான் பாவம்.. சொந்த ஊரிலே பெண்டாட்டி பிள்ளைங்களை விட்டுட்டு எங்கேயோ ஆயிரம் மைலுக்கப்பாலே, ரங்கநாதத்தின் மளிகைக் கடையைப் பந்தோபஸ்து பார்க்க வந்திருக்கிறான்..... நாணயமாகவும் நடந்துக்கறான்... இந்தத் தடவை பத்தாம் தேதியே கொடுத்துவிட வேண்டியதுதான். முந்தி மாதிரி பதினைந்து, இருபதுன்னு அவனை அலைய வைக்கக்கூடாது பாவம்.....'

ரங்கநாதம் சற்றே அமைதி பெற்றார். அந்தக் காரணத்தால் சுகமான தூக்கமும் கிட்டியது.

குஞ்சனின் டீஸ்டாலுக்குக் கடை விதிகள் எதுவும் கிடையாது. ஒரு நாளின் இருபத்து நான்கு மணி நேரமும் அது திறந்திருக்கும். அந்தத் துளியூண்டு கடையின் வாசலில் உள்ள ஒடிசல் பெஞ்சில் எப்போதும் யாராவது இரண்டு பேர் உட்கார்ந்திருப்பார்கள், ஒரு கையில் டீ கிளாசும், மற்றொரு கையில் அன்றைய மக்கள் பத்திரிகையுமாக. படிக்கத் தெரியாதவர்கள் கூட வேறு யாரையாவது படிக்கச் சொல்லி முக்கியமான செய்திகளை 'சிரவணம்' செய்வதும் அங்கு நடக்காத நிகழ்ச்சியல்ல.

பேப்பரில் படித்ததையும், கேட்டதையும், பார்க்காததையும், கேட்காததையும் வைத்துக் கொண்டு வாய்ச் சண்டைகள் பிரமாதமாக நடப்பதும் அபூர்வமல்ல. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். சண்டை ஆரம்பமாகும் முன்னரும், முடிந்த பின்னரும், சண்டையிட்ட இரண்டு பேர்களும் சமாதானப் பிரியர்களாகக் குஞ்சன் கடையில் கணக்கெழுதி வைத்து. ஆளுக்கு ஒரு 'சிங்கிள்' அடிப்பது மட்டும் நிச்சயம். குஞ்சன் மட்டும் சாட்சாத் சர்வேசுவரனைப் போல, தனக்கு முன்னால் நடக்கும் அத்தனை வேடிக்கைகளையும் பார்த்தும் பார்க்காத ஒரு மோன நிலையில் இருந்து கொண்டு இடையிடையே 'சாயா' விநியோகம் செய்து பணம் பண்ணிக் கொண்டிருந்தான்.

''எந்தா குஞ்சன்... அந்தச் சிங் இப்போ வருமா?'' — புகைத்துகொண்டிருந்த பீடியை வாயிலிருந்து எடுத்துவிட்டுக் கேட்டான் பெஞ்சில் உட்கார்ந்திருந்தவன்.

''எனக்கென்னப்பா தெரியும் வருமா வராதான்னு...வந்தாலும் வரும். வராமலும் நிக்கும்....'' என்றான் குஞ்சன் டீயை லாகவமாக ஆற்றியபடி.

''கேட்டா நேரா பதில் சொல்லுய்யா...'' என்றான் முதலில் பேசியவன்.

''ஞான் நேரத்தான் பேசறது'' என்று பட்டென்று பதில் சொன்னான் குஞ்சன். ஆற்றிய டீ வெளியில் வரவில்லை. குஞ்சன் கோபித்துக் கொண்டு விட்டதை அறிந்த அந்த ஆசாமி உடனே விழித்துக்கொண்டான்.

''அதுக்கில்லே நாயர்... உன் பணமும் ரொம்ப நின்னு போச்சு. அங்கே இங்கே பிராய்ஞ்சு உனக்குக் கொடுக்க வழி செய்யணும்... அதுக்காவத்தான்... என்று கூறியபடி டீயை ஆவலுடன் பார்த்தான்.

''மூனு மாசமா பணம் கொடுக்கல்லா... பேச்சுத்தான் பிரமாதம்... போய்யா'' என்று கொஞ்சம் கோபித்தபடி 'டக்'கென்று கிளாசை எடுத்துப் பெஞ்சின் மீது வைத்தான் குஞ்சன். வெட்கப்பட்டால் நடக்காதென்று அறிந்த ஆசாமி அசட்டுச் சிரிப்பு சிரித்தபடி டீயை உறிஞ்ச ஆரம்பித்தான்.

மேலும் ஓர் அரை மணி காலம் கழிந்தது. யார் யாரோ வந்து 'பன்' தின்று டீ குடித்து விட்டுப் போனார்கள். சிங் மட்டும் அங்கே வரவில்லை. காத்திருந்த ஆசாமி பொறுமை இழந்தவனாக விருட்டென்று எழுந்திருந்து தெருவில் நடக்க ஆரம்பித்தான்.

பண்டாபீஸ் கடிகாரம் மணி ஒன்று என்று அறிவித்தது.

சாதாரணமாக ஏழு மணிக்கு எழுந்திருக்கும் ரங்கநாதம் அன்று ஏதோ சலசலப்பில் ஐந்தரை மணிக்கே எழுந்து விட்டார். அவர் எழுந்திருக்கவில்லை. அவரை யாரோ எழுப்பி விட்டார்கள். தூக்க மயக்கத்தில் உட்கார்ந்த








1. தமிழக கவர்னர் சுதந்திர தின வைபவத்தன்று அளித்த தேநீர் விருந்தில் ராஜாஜியும் கவர்னரும் உரையாடி மகிழும் காட்சி.

2. வானதி பதிப்பகத்தார் வெளியிட்டுள்ள 'நேருஜி வாழ்க்கை வரலாறு' மலிவுப் புத்தகத்தைச் சென்னை முதன்மந்திரி திரு பக்தவத்ஸலம் வெளியிட்டு வைக்கிறார்.

3. காமன்வெல்த் தொடர்பு காரியாலய அழைப்புக்கிணங்க பிரிட்டனுக்கு விஜயம் செய்துள்ள 'மெயில்' ஆசிரியர் திரு வி. பி. வி. ராஜனும், பிரஸ் டிரஸ்ட் ஆப் இந்தியா செய்தி ஆசிரியர் திரு நீலகண்டனும் பி. பி. ஸி. நிலையத்தைப் பார்வையிட்டனர்.

அவரது காதில் அவசரம், கடை, போலீஸ், என்று கலப்படமாகப் பல வார்த்தைகள் விழுந்து அவரைக் கலக்கி விட்டன.

என்னவோ, ஏதோ ஆபத்து என்று முக்கியமான விஷயத்தை அவர் மூளை ஒருவாறுக அறிந்து ஏற்றுக் கொண்டவுடன் விருட்டென்று எழுந்தார்.

''என்னப்பனே, பாண்டுரங்கா!'' என்று குரல் கொடுத்தபடி வாசற்புறம் வந்தார்.

வாசற்படித் தூணில் சாய்ந்து நின்று கொண்டு பென்சில் நுனியை எச்சில் செய்து நனைத்து ஏதோ எழுதிக் கொண்டிருந்த கான்ஸ்டபிள் பரபரப்பாகத் திரும்பி, பவ்யமாகவும் அதே சமயம் சற்று அதிகார தோரணையிலும் ஒரு ஸல்யூட் அடித்தான்.

''வாசல்லே ஜீப் நிக்கிதுங்க. கொஞ்சம் ஸ்டேஷன் வரையிலே வாரனுங்க... இன்ஸ்பெக்டர் ஐயா கூட்டியாரச் சொன்னரு...''

'நல்லவேளை, கூட்டித்தானே வரச்சொன்னரு! அரஸ்ட் செய்துகொண்டு வரச் சொல்லவில்லையே!'

நிம்மதியுடன் தமது சரிகை அங்கவஸ்திரத்தை அழகாக மேலே சாத்திக்கொண்டு ஜீப்பில் ஏறப் புறப்பட்டார்.

'விஷயம் என்னவாக இருக்கும்...? போன வாரம் ஒரு சின்னப் பய சர்க்கரை வந்து கேட்டான். உள்ளே ஸ்டாக் இருந்துகூட, சர்க்கரை இல்லேடா போன்னு விரட்டினேன். அது ஏதாவது கேஸ் எழுதிட்டாங்களோ? சர்க்காரிலே அலவன்ஸ் கூடப் போட்டுத் தரான்னு பேப்பரிலே போட்டதுமே எல்லாச் சாமானுக்கும் இரண்டிரண்டணு தூக்கி வச்சு விக்கிறதைக் கண்டு பிடிச்சுட்டாங்களோ... அரே பாண்டுரங்கா... மீரே கதி....!'

போலீஸ் ஸ்டேஷனில் இறங்கியதுமே ரங்கநாதத்துக்குப் பாதி உயிர் போன மாதிரி இருந்தது. போலீசார் விசாரணை முறையிலேயே கேஸ் எழுதிக் கொடுக்க வந்தவன், தானே தான் குற்றவாளியோ என்று அங்கும் படி செய்துவிடுவார்களோ என்ற ஒரு பயம் அவரை அப்படி வாட்டி எடுத்தது.

''வாங்க ரங்கநாதம். வாங்க...'' சப் இன்ஸ்பெக்டர் முகமலர்ச்சியுடன் வரவேற்றார் ரங்கநாதத்தை. ரங்கநாதத்துக்குப் போன உயிர் திரும்பி வந்தது. வெருளி மனிதன் அதை வெளிப்படையாக ஒப்புக் கொண்டார்.

''அப்பாடி... போன உயிர் வந்ததுங்க: காலங்காத்தாலே நாஷ்தா பண்ணறதுக்கு முன்னேயே போலீஸ்காரங்க கூப்பிடறாங்கன்னு, சிவப்புத் தொப்பி வந்தாங்க, அது ஒருமாதிரி கலக்கிட்டுடுத்துங்க...அப்பாடி.'' அங்கவஸ்திரத்தை உதறி முகம், கழுத்து எல்லாம் ஒரு முறை நன்றாகத் துடைத்து விட்டுக் கொண்டார்.

''செட்டியாருக்குப் போன உயிர் வந்தது சரிதான். அந்த ஆளுக்கு வருமா தெரியலியே'' என்று தமக்குத் தாமே பேசிக் கொள்வது போல் சற்று வாய் விட்டே சொன்னார் சப் இன்ஸ்பெக்டர்.

ரங்கநாதத்துக்கு மூச்சே இரண்டாவது தடவையாக நின்றது; போன உயிர் வருமா

என்று கேட்கிறார்களே? எந்த உயிர் வருமா? கொலைக் கேஸா? அட பாண்டுரங்கா!

இன்ஸ்பெக்டர் ஆரம்பித்தார்:

''உங்கள் கடை வாசலில் இன்று விடியற்காலை கலாட்டா. யாரோ ஒருத்தன் கடையை உடைச்சு உள்ளே போக வந்திருக்கான்.. கூர்க்கா ஒருத்தன் அங்கே வந்திருக்கான். தெருவிலேயே பாராக்காரன் போலிருக்கு. சண்டை... வந்த ஆள் கையிலே கத்தி வைச்சிருக்கான்... எசகேடா குத்திட்டான்.. கூர்க்கா ஆள் காலி! கத்திக் குத்து விழுந்தப்புறம்கூட ஆள் சண்டை போட்டிருப்பான் போல இருக்கு. அந்த ஆள் உள்ளே நுழைய முடியவில்லே, கடைசி வரையிலே. இப்ப விவரம் இதுதான் தெரிஞ்சிருக்கு. முழு விசாரணை நடக்கணும். அந்த ஆளைப் புடிச்சிட்டோம். சம்பவம் உங்க கடை வாசலிலே நடந்திருக்கிறது என்பதற்காக உங்களையும் வரவழைத்தது...''

ரங்கநாதத்துக்கு ஒன்றுமே ஓடவில்லை. தினமும் காலையில் அவரது அபிமான பத்திரிகையில் கத்தியால் 'சதக் சதக்' என்று குத்திய திடுக்கிடும் செய்திகளை ரசித்து, சுவைத்துப் படிக்கும் அவருக்கு, அவரது கடை வாசலில் ஒரு கத்திக் குத்துச் சம்பவம் நிகழ்ந்துவிட்டது என்ற விஷயம் திகிலையே மூட்டியது... 'லட்சுமண சிங் செத்துப்போய் விட்டானா! அட பாவி! நல்லவன், பாவம்...! இருபது தேதி வரையிலும் முதல் மாசச் சம்பளத்தைக் கொடுக்காமல் கடத்திப் போட்டால் கூட வாயே திறக்க மாட்டான். பாவம், லட்சுமண் சிங்!' உண்மையிலேயே அனுதாபப்பட்டார் ரங்கநாதம். தம் கடை வாசலில் திருடன் உள்ளே புகாமல் தடுக்கும் முயற்சியில் கூர்க்கா பிராணனை விட்டான் என்ற செய்தி அவரைப் பிழிந்து எடுத்தது.

ஆனாலும் ரங்கநாதம் ஒரு பெரிய கடை முதலாளி. ஊரில் ஒரு பிரமுகர். தெருவில் காவல் காக்கும் லட்சுமண சிங்குக்கும், ராம் சிங்குக்கும் அனுதாபம் காட்டிக் கொண்டே இருந்தால் அவரது அந்தஸ்து என்ன ஆவது? மனத்திலிருந்து அந்த விஷயத்தை வழித்துத் துடைத்து எறிந்தார். சப்-இன்ஸ்பெக்டரிடம் பேசிக்கொண்டே சில பொதுவான கேள்விகளுக்கு மட்டும் பதிலைச் சொல்லிவிட்டு வீட்டுக்கு வந்து விட்டார்.

போலீஸ் விசாரணை தொடர்ந்தது.

இரண்டாவது நாள் காலை ரங்கநாதம் கண் விழித்தபோது வழக்கம் போல் அவர் பத்திரிகை முகத்தில்தான் விழித்தார். முதற் பக்கத்திலேயே அவரைக் கவர்ந்த செய்தி வந்திருந்தது.

**நகரில் முக்கிய வீதியில் கொலை!**
**கடமை தவறாத காவல்காரர் மரணம்!!**
**ஒரு ரூபாய்த் தகராறு**
**உயிரைக் குடித்த பரிதாபம்!!!**

விருட்டென்று எழுந்து உட்கார்ந்து சாளேசுவரக் கண்ணாடியை மாட்டிக் கொண்டு முழுச் செய்தியையும் படித்தார் ரங்கநாதம்.

''நேற்று முன் தினம் கூர்க்கா லட்சுமண சிங் கத்தியால் குத்தப்பட்ட சம்பவம் நேயர்களுக்குத் தெரிந்திருக்கலாம். மேற்கொண்டு விவரங்கள் கிடைத்துள்ளன. குத்தியவர் பெயர் ரௌடி ரங்கன். இவர் காலாடிப் பேட்டையில் ஒரு கடை வைத்திருக்கிறார். இவருக்கும் லட்சுமண சிங் என்ற கூர்க்கா காவல்காரருக்கும் பணம் கொடுக்கல் வாங்கல் உண்டு. லட்சுமண சிங் ரங்கனுக்கு ஒரு ரூபாய் தர வேண்டும். முதல் தேதியிலிருந்தே தரவில்லையாம். அப்புறம் தருகிறேனென்று சொல்லி லட்சுமண சிங் தள்ளிப் போட்டு வந்திருக்கிறான்.

கோபம் வந்தது.

நேற்று முன் தினம் இரவு மூன்று மணிக்கு மக்கடை வாசலில் லட்சுமண சிங்கும், ரங்கனும் சந்தித்தார்கள். ஒரு ரூபாய் திருப்பித் தருவது பற்றிச் சண்டை வந்தது. மக்கடை குஞ்சன் நாயர் இருவரையுமே துரத்திவிட்டதால் பெரிய பஜாரில் வந்து இருவருக்கும் மறுபடி வாக்குவாதம் நடந்தது. ரங்கனுக்குக் கோபம் வந்தது. சண்டை ரொம்பவும் முற்றியது.

குத்தினார்! குத்தினார்!

உடனே ரங்கன் பையிலிருந்த கத்தியை எடுத்து லட்சுமண சிங்கை மூன்று இடங்களில் குத்தினார். லட்சுமண சிங் துடிதுடித்துக் கொண்டே விழுந்து செத்தார். ஒரு ரூபாய் திருப்பித் தரவில்லை என்பதற்காக ஒருவர் உயிரையே இழக்க நேர்ந்தது. பணத்தின் கொடுமைதான் என்று பொதுமக்கள் பேசிக் கொள்ளுகிறார்கள். ரங்கன் மீது குற்றம் சாட்டப்பட்டுள்ளது. கடையைத் திறக்கவோ திருடவோ தான் வரவில்லை என்று அவன் சொல்கிறான். விசாரணை தொடர்கிறது.''

ரங்கநாதத்தின் உடம்பெல்லாம் வலித்தது. வியர்வை ஆறாகப் பெருகி ஊற்றியது. கண்ணையேகூட இருட்டியது.

முதல் தேதியன்று தாம் தரவேண்டிய ஒரு ரூபாயை லட்சுமண சிங்குக்குக் கொடுத்திருந்தால்? அவன் ரங்கனுக்குக் கொடுத்திருக்கலாம்! கொலையேகூட நடக்காமல் இருந்திருக்கலாம்!

''அடப் பாவி! ஒரு ரூபாய்க்காக ஓர் ஆளையே கொன்றுவிட்டாயே'' என்று ரங்கனைக்கேட்க வேண்டுமென்று ரங்கநாதம் நினைத்தபோது அவரது மனச்சாட்சி அவரையே அந்தக் கேள்வியைத் திருப்பிக் கேட்டது!

'ஒரே ஒரு ரூபாய்! கையில் வைத்துக் கொண்டு சால்ஜாப்புச் சொல்லிச் சொல்லி, லட்சுமண சிங்குக்காக யமனிடமல்லவா வாய்தா வாங்கினேன்!' இதை எண்ணிய போது என்ன செய்வதென்று அவருக்குப் புரியவில்லை. தவித்தார்.

போலீஸ் நிலையம், நீதிமன்றம் இங்கெல்லாம் கொலையைப் பற்றி விசாரணை சட்டபூர்வமாக நடக்கும். குற்றவாளிக்குரிய தண்டனை வழங்கி விடுவார்கள். அவர்களுக்குத் தெரியாத ஒரு விவரம் ரங்கநாதத்தின் மனச்சாட்சிக்கு மட்டும் தெரிந்திருந்தது.

லட்சுமண சிங்கின் கொலைக்குப் பொறுப்பாளி ரங்கன் அல்ல. அவரது பாக்கிப் பணமான அந்த ஒரே ஒரு ரூபாய்தான்!




**வாணி தமிழ் இங்கிலீஷ் போதினி**

90 நாட்களில் தமிழ் மூலம் ஆங்கிலம் தானே இலக்கணமாகப் படிக்க, பேச, எழுத, சுலபமாகக் கற்க பெரிய புத்தகம்.
விலை தபால் செலவோடு ரூ. 6-25.

**ஐசுவரியம் (குடிசைத் தொழில்)**
சோப், இங்க், பத்தி, ஸ்னோ போன்ற 206 புதுத் தொழில்கள் அடங்கியது.
விலை ரூ. 4-00. வி. பி. 0-85.

**தமிழ் ஹிந்தி சுபோதினி**
தமிழ் மூலம் சுலபமாக ஹிந்தி படிக்க பேச, எழுத, கற்க முடியும்.
விலை ரூ. 2-50. வி. பி. 0-85

**குடும்ப இலகு வைத்தியம்**
பச்சிலை மூலிகைகள் கொண்டு ஆரோக்கியம், பலம்பெற வழிகாட்டும்.
விலை ரூ. 2-50. வி. பி. ரூ. 1-00.

**மாட்டு வாகடம் (பசு வைத்தியம்)**
கால்நடைகளின் நோய்களைப் போக்கும்.
விலை ரூ. 2-00 வி. பி. 85.

**வாணி புக் டிபோ (K)**
3. மலைய பெருமாள் தெரு. ரூம் நெ. 5
சென்னை – 1



பாலக்காடு - ராமனாதபுரம் R. N. வேதராம பட்டர் அவர்களின் சதாபிஷேகத்தை சமீபத்தில் அவரது குமாரர்களான R.S. நாராயண சுவாமி அய்யர், R. S. கணபதி அய்யர் (777 பிராண்ட் உணவுத் தயாரிப்பாளர்களான ஸ்ரீ கணேஷ்ராம் & கோ., உரிமையாளர்கள்) சென்னையில் சிறப்பாக நடத்தி வைத்தார்கள். இவ்வைபத்திற்கு நகர பிரபலஸ்தர்கள், வர்த்தகப் பிரமுகர்கள், பத்திரிகையாளர்கள் மற்றும் பொதுமக்களும் ஏராளமாகக் கலந்து கொண்டு பட்டர் அவர்களின் ஆசியைப்பெற்று பெருமகிழ்வு கொண்டனர்.

# நினைவில் இருக்க வேண்டிய பெயர்




**பாண்டியன் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்**

# நெருப்பு - கப்பல் - விபத்து

ஆஸ்திகள்: ரூ. 1 கோடிக்கு மேல்

தலைமைக் காரியாலயம்: பாண்டியன் பில்டிங், மதுரை - 1

கிளைகள்: பம்பாய், கல்கத்தா, டெல்லி, சென்னை, நாகபுரி, ஷோலாப்பூர்
3 ஆமதாபாத், லூதியானா, கோயமுத்தூர், கொச்சி, கோவில்பட்டி

குடும்பத்திற்கான

# கிளியர்டோன் சாமான்கள்

Kleertone


'ரேடியன்ட்'
ஹாட் ப்ளேட்


'இம்பீரியல்'
இஸ்திரிப்பெட்டி


கெட்டில்


வீட்டு உபயோகத்திற்கான இஸ்திரிப்பெட்டி


டோஸ்டர்


மேஜை விசிறி மற்றும் ஸீலிங் விசிறி


எலக்ட்ரிக்
கடிகாரம்


மடக்கக்கூடிய ஸ்டீல் ஃபர்னிச்சர்

எல்லா கிளியர்டோன் வியாபாரிகளிடமும், நேஷனல்-எக்கோ வியாபாரிகளிடமும்
மற்றும் கீழ்க்கண்டவர்களிடமும் கிடைக்கும்.

ஜெனரல் ரேடியோ & அப்ளையன்ஸஸ் லிமிடெட்

பம்பாய் . கல்கத்தா . மதராஸ் . டில்லி . பெங்களூர் . ஸெகந்திராபாத் . பாட்னா

GRA

JWT-GRA 2804



## ஸரோஜா ராமமூர்த்தி

மதுரம் அம்பாள் சந்நிதியில் விளக்கேற்றி விட்டுத் தூணில் மாட்டியிருந்த எவர்ஸில்வர் கிண்ணத்திலிருந்து குங்குமம் எடுத்து நெற்றியில் இட்டுக் கொண்டாள். விளக்கேற்றிச் சிறிது நேரம் ஆகியிருந்தது. அன்று விசேஷ தினம் ஏதுமில்லை; கோயிலில் கூட்டமுமில்லை. அர்ச்சகர் அவசரமாக அபிஷேகம் பண்ணி, எண்ணெய்க் கறை படிந்த வெட்டுப் புடவையை அம்மனின் இடுப்பில் சுற்றி, கழுத்தில் நந்தியாவட்டை மாலையைப் போட்டுவிட்டுப் போய்விட்டார்.

இழுத்துப் பூட்டியிருந்த கதவிடுக்கின் வழியாகப் பார்வையைச் செலுத்தினாள் மதுரம். காலம் காலமாக முகத்தில் தேக்கி வைத்த புன்னகை இன்னும் எத்தனையோ காலத்துக்கு நிலைத்திருக்கும் என்பது போல் அம்பாள் சிரித்துக் கொண்டிருந்தாள். உதடுகளைச் சுழித்து, கண்கள் கருணை பெய்ய, இந்த உலகத்தில் நடக்கும் நியாய அநியாயங்களை, தர்ம அதர்மங்களைப் பார்த்து அவள் சிரித்துக் கொண்டேயிருக்கிறாள். பின்னே, வருத்தப்பட்டால், சீறி எழுந்தால், இந்த உலகம் தாங்குமா ?

''சிரிக்கிறாயேடி அம்மா, உனக்கு எப்பொழுதும் சிரிப்புத்தானா?'' மதுரம் சந்நிதியில் யாருமில்லாத தைரியத்தில் சற்று உரக்கவே இந்த வினாவை எழுப்பினாள்.

''நான் சிரிக்கலையே அம்மா. இங்கே வந்து பார், பூச்சி மெல்லாம் தலைகீழாகத் தொங்கறது அம்மா!'' என்று கத்தினாள் விஜி. குழந்தை அங்கிருப்பதை மறந்து பேசி விட்டதை நினைத்து வெட்கப்பட்டாள் மதுரம்.

விஜியும் கண்களை மலர்த்தி வௌவால்கள் தலை கீழாகத் தொங்குவதைப் பார்த்துக் கொண்டிருந்தாள். மதுரம் இருச் சுற்றை வலம் வந்து விட்டு, ''வாடி, போகலாம்!'' என்று அவளைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு வெளியே வந்தாள்.

ஊருக்கு மையமாக அமைந்த தாமரைக் குளமும், அதன் நடுவில் நீராழி மண்டபமுமாக ஊர் அழகாக அமைதியாக இருந்தது. மாலை நேரங்களில் ஊரின் அமைதியைக் குலைக்காமல் கோயிலிலிருந்து நாதஸ்வரத்தின் இசை காற்றில் இழைந்துவரும். அந்தக் கீதம் புண் பட்டுப் போன மதுரத்தின் நெஞ்சத்தைத் தடவி ஆறுதல் அளிக்கும். குறைந்தது அரை மணி நேரமாவது தன் துயர் மறைந்து மனச்சாந்தி பெறுவாள் அவள்.

இன்று அந்த வழக்கத்துக்கு மாறாக ஒலி பெருக்கி ஒன்று அலறிக் கொண்டிருந்தது. 'போனால் போகட்டும் போடா'விலிருந்து புதிதாக ரிலீஸ் ஆன ஸினிமாப் பாட்டுகள் வரை அங்கே அடிபட்டுக் கொண்டிருந்தன.

மதுரத்துக்குத் திடுமென்றுதான் அன்று மாதர் சங்கக் கூட்டத்துக்குப் போக வேண்டியது நினைவுக்கு வந்தது. கிராமங்களிலே மாதர் நலம் பேணுவதற்காக அந்த ஊரிலும் சங்கம் ஆரம்பிக்கத்தான் ஒலிபெருக்கியும்,

சங்கீதப் பேராசிரியை: சங்கீதம் ஒரு குடும்பத்தை இன்பத்தில் ஆழ்த்துகிறது. எப்படி?



மாணவி: எந்தக் காரியம் சம்பந்தமாகவும் கணவன் மனைவிக்குப் பக்க வாத்தியம் வாசிப்பதால்!

பாட்டுமாக அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது.

மதுரம் நேராகச் சங்கக் கூட்டத்துக்குப் போய் உட்கார்ந்தாள். கிராமத்தினருக்குப் பால்வாடி டீச்சரிடம் மிகவும் மதிப்பு. ஒழுகும் மூக்கும், பரட்டைத் தலையும் உள்ள குழந்தைகளைத் துப்புரவாக மாற்றி இரண்டு வேளைகள் தலைவாரவும் குளிக்கவும் பழக்கம் ஏற்படுத்திய பெருமை மதுரத்தைச் சார்ந்தது. அடிக்கடி மாதர் நல இலாகா தலைவி மதுரத்தைப் பாராட்டிப் பேசுவாள். "ஒட்டிவாக்கம் கிராமத்திலே பால்வாடியும், தையல் சென்டரும் நன்றாக 'ஒர்க்' பண்ணுது. மதுரம் டீச்சர் மாதிரி நாலு உண்மைத் தொண்டர்கள் இருந்தால், கிராமத்தைச் சீக்கிரம் முன்னுக்குக் கொண்டு வரலாம்" என்று அந்த அம்மாள் ஏதாவது பேசிக் கொண்டேயிருப்பாள்.

எந்தப் பெருமையையும், சிறுமையையும் மனமுவந்து ஏற்றுக் கொள்ளக் கூடிய பக்குவத்தை மதுரம் பெற்றிருந்தாள். ஒட்டிவாக்கம் கிராமம் அவள் சேவையை ஓஹோ வென்று புகழ்கிற பெருமையை, அவள் சில வருஷங்களுக்கு முன்பு அனுபவித்து விட்டு வெளியே வந்த சிறுமைக்கு ஈடு கட்ட முடியவில்லை.

பெருமை பாட்டுக்குப் பெருமை. சிறுமை பாட்டுக்குச் சிறுமை! கணவன் மனைவியைத் தள்ளி வைக்க ஆயிரம் காரணங்கள் உண்டு. மனைவி கணவனைத் தள்ளி வைக்க இன்னமும் காரணங்கள் அகப்படாது. சகித்துப் போகவே பழக்கப்பட்டுவிட்ட நம் நாட்டுப் பெண்கள் எந்தச் சட்டம் வந்தாலும் அதைத் தங்களுக்குச் சாதகமாக, ஆயுதமாகப் பயன்படுத்திக்கொள்ளத் தயங்குகிறார்கள்.

அசோக வனத்தில் அன்னையின் பவித்திரமான தன்மையை நேரில் கண்டு வந்து உரைத்த அனுமான் எதிரிலேயே ஸ்ரீராமன் தீயைச் சுட்டிக் காட்டி அதில் அவளைக் குளிக்கச் செய்த நாட்டிலே பெண்களின் சகிப்புத் தன்மைக்கு நூற்றுக்கு நூறு மார்க்குகள் போட்டுத்தான் ஆக வேண்டும்.

மதுரம் ஒரு குழந்தையுடன் வெளியே துரத்தப்பட்டு வந்து விட்டாள். காரண காரியங்களை ஆராய்ந்து கொண்டிருக்க வேண்டாம். அவளிடம் ஓர் அசைக்க முடியாத நம்பிக்கை உண்டு. எங்கே, எந்தத் தொழில் செய்து வாழ்ந்தாலும் தன்னுடைய பெயருக்கு, தன்னுடையவரின் பெயருக்கு இழுக்கு இல்லாமல் வாழ வேண்டும் என்கிற உறுதியான எண்ணத்தில் மதுரம் தன்னந்தனியே உறவினர் யாருடைய தயவும் இன்றி இந்தக் கிராமத்தில் ஒதுங்கிக் கொண்டாள்.

மூன்று நான்கு வருஷங்களாக அவளை யாரும் வந்து பார்க்கவில்லை; அதைப் பற்றி அவள் கவலைப்படவும் இல்லை.

காலையிலே வீட்டுக் கூரை மீது காக்காய் வந்து உட்கார்ந்து கூவியது. வீட்டுக்காரர் மகள், "அக்கா! அக்கா! உங்கள் வீட்டுக்கு விருந்தாளி வருவாங்க. அதுதான் காக்கா கத்துது" என்று கூறியதும் மதுரம் சிரித்துக் கொண்டாள். 'என் வீட்டுக்கு விருந்தாளி யார் என்னைத் தேடி வரப் போகிறார்கள்?' மெல்ல முணுமுணுத்தவள் பிறகு அதை மறந்து விட்டாள்.

மாதர் சங்கக் கூட்டம் ஆரம்பமாயிற்று. பேச்சுகள், முழக்கங்கள் வழக்கம் போலப் பேசப்பட்டன; முழங்கப்பட்டன.

மதுரம் கூட்டத்தின் சுவாரசியத்தில் ஈடுபட்டிருந்தவள் திரும்பிப் பார்த்த போது விஜியைக் காணோம். பரபரப்புடன் எழுந்து தெருவுக்கு வந்ததும் அங்கே விஜியின் கையைப் பிடித்தவாறு ஓர் இளைஞன் நின்றிருந்தான்.

மதுரம் சிறிது நேரம் அவனை உற்றுப் பார்த்தாள். எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் அவளை அவளுக்கு அடையாளம் தெரியவில்லை.

"என்னைத் தெரியவில்லையா மன்னி, உங்களுக்கு...?"

மதுரம் குழம்பித்தான் போனாள். அவளுக்கு மைத்துனனே கிடையாது. அவள் கணவனுடன் உடன் பிறந்தவர்கள் யாருமில்லையே...?

விஜி அவன் கையைப் பிடித்துச் சுற்றியவாறு நின்றிருந்தாள். பெரிய பிஸ்கோத்துப் பொட்டலம் கிடைத்த மகிழ்ச்சியில் அவள் ஒரு நாட்டியமே ஆடிக் கொண்டிருந்தாள்.

"வாருங்கள், வீட்டுக்குப் போவோம்...: தெருவிலே பேச வேண்டாம்....."

இருவரும் மௌனமாகவே நடந்தார்கள்; தொலைவில் மாதர் உரிமைக் குரல் ஒலி பெருக்கியில் கேட்டுக் கொண்டிருந்தது.

"எந்த உரிமையை யார் பறித்து விட்டார்கள் மன்னி? பெண்ணுக்கு நம் புராண இதிகாசங்களில் இருக்கிற—கொடுத்திருக்கிற பெருமை வேறு எந்த நாட்டுக்கு...." இளைஞனைப் பேச விடவில்லை மதுரம்.

"அதை யெல்லாம் பற்றி ஆராய வேண்டாம். இல்லாத உரிமைகளைத் தேடித் தரத்தான் சட்டங்கள் வந்திருக்கின்றன. இருக்கிற உரிமைகளை இழந்த பிறகுதான் இந்தச் சட்டங்கள் உதவிக்கும் வருகின்றன. உரிமைக் குரல் அதிகம் ஒலிக்க ஒலிக்க உரிமை இழப்பும்

# நம்பிக்கைக்குப் பாத்திரமான 'டெட்டால்'

## இவரது உடல் சுகத்திற்கு

உங்கள் உடலை சுகாதாரத்துடன் வைத்துக்கொள்ள எப்பொழுதும் 'டெட்டாலை' கவலையின்றி உபயோகியுங்கள். 'டெட்டால்' உலகிலேயே மிகவும் நம்பிக்கைக்குப் பாத்திரமான கிருமிநாசினி. அது கிருமிகளைக்கொல்லுகிறது—மென்மையான சருமத்தையும் தசைகளையும் சிறிதும் பாதிக்காது. 'டெட்டால்' தொற்றுநோய் வராமல் உங்களைப் பாதுகாக்க உதவும். அசிரத்தையாயிருக்காதீர்கள்.

'ஸ்திரீகளின் நவீன சுகாதாரம்' என்ற இலவச சிறு நூலைப்பெற ஜி. பி. ஓ. பெட்டி நிர். 921, கல்கத்தா-1க்கு எழுதுங்கள்.




'டெட்டாலை' குளிக்கும் நீருடன் கலந்து உபயோகித்தால் சுகமணத்துடன் உற்சாகத்தையும் கொடுக்கும். தொண்டைப்புண்களைத் தடுப்பதற்கு 'டெட்டால்' கலந்த நீர் கொப்பளிக்க உதவும். சிராய்ப்புகளிலும் வெட்டுக் காயங்களிலும் 'டெட்டாலை' உபயோகியுங்கள். தொற்றுநோய் அது தடுப்பதற்கு உதவும்.

# மிக எளிது

# உங்கள் தேவை எல்லாம் ரூ. 5/-

## நேஷனல் அண்டு கிரிண்ட்லேஸ் பாங்கில் சேமிப்புக் கணக்கு ஒன்றை

ஆரம்பிக்க



பாங்க் கட்டணம் கிடையாது. அதோடு ஆண்டிற்கு 3 சதவீதம் வட்டியும் சம்பாதிக்கலாம்.

இன்றே அருகிலுள்ள கிளை ஆபீஸில் விசாரியுங்கள் :

**நேஷனல் அண்டு கிரிண்ட்லேஸ் பாங்க் லிமிடெட்**

(இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது. அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது) NGB/6/STAM

கிளைகள்: சென்னை: 3, [illegible] ரோடு. (லாயிட்ஸ் கிளை) 6, அரமனைக்காரத் தெரு 158, மவுண்ட் ரோடு. தூத்துக்குடி: 44, பீச் ரோடு ஹைதராபாத்: அபித் ரோட்

அதிகமாகத்தான் இருக்கும்...... அது கிடக்கிறது. உங்களை யார் என்றே எனக்குத் தெரியவில்லையே?...''

ஃ ஃ ஃ

இருவரும் படியேறி வீட்டுக்குச் சென்றார்கள். இளைஞன் அவள் அறையைக் கண்ணோட்டமாகத் துழாவினான். மிக மிகச் சாதாரண அறை. சமையலுக்குத் தேவையான சில உபகரணங்கள். பூஜை மாடம். ராம பட்டாபிஷேகப் படம். சிறிய விளக்கு.

''என்ன பார்க்கிறீர்கள்? ஏகபத்தினி விரதனாகிய ஸ்ரீராமனிடம் எனக்கு அளவு கடந்த ஈடுபாடு.....'' என்றாள் மதுரம்.

''ராமனைவிட சீதையிடத்தில் தான் எனக்குப் பக்தி அதிகம். சீதையில்லா விட்டால் ராமனின் புகழ் ஓங்கியேயிருக்காது....''

''பார்த்தீர்களா? இந்த வாதப் பிரதிவாதங்களெல்லாம் வேண்டாம். ராமனை ராமனாகவும், சீதையைச் சீதையாகவும் அப்படியப்படியே ஏற்றுக் கொள்வோம். நம் புதிய விமரிசனம் ஒன்றையும் ராமாயணத்தில் திணிக்க வேண்டாம். நீங்கள் எப்படி என் கணவரின் தம்பியாகிறீர்கள்? அவருக்கு.....''

''மன்னி! நான் உங்கள் ஒன்றுவிட்ட இளைய மாமனாரின் மகன். உங்கள் கலியாணத்தில் தாலி கட்டுவதற்கு முன்பே உங்கள் தலைப்பையும், அண்ணாவின் உத்தரீயத்தையும் முடிந்தவன்..... அந்தச் சம்பவத்தையும், இப்பொழுது நீங்கள் இருக்கிற நிலையையும் பார்த்தால் வருத்தமாக இருக்கிறது. உங்களுக்கு நினைவு இருக்கிறதா என்னைப் பற்றி?''

ஃ ஃ ஃ

மதுரம் பல வருஷங்கள் பின்னோக்கி மனத்தைச் செலுத்தினாள். அவன் கூறிய சம்பவம் நினைவுக்கு வந்தது. இன்னொரு சம்பவமும் தோன்றியது. மணமான தம்பதி சாப்பிடும்போது இரண்டு இலைகளையும் மாற்றி இழுத்து விட்ட பையன் இவனே தான். அப்பொழுது பையன்தான். பத்து வருஷங்கள் ஆகவில்லையா?

''நினைவுக்கு வந்து விட்டதா?'' என்று இளைஞன் கேட்டான்.

''ஓ! நன்றாக வந்து விட்டது. பெரியவனாக வளர்ந்து விட்டாய்'' என்றாள் மதுரம்.

பிறகு அவள் அங்கிருந்து எழுந்து சென்று எலுமிச்சம் பழத்தைப் பிழிந்து சர்க்கரை போட்டுக் கொண்டு வந்து வைத்தாள். குழந்தை விஜியும் சித்தப்பாவிடம் ஒட்டிக் கொண்டாள்.

புண்பட்ட நெஞ்சுக்கு இந்த உறவு ஆறுதலாக இருந்தது. இளைஞன் விடைபெற்றுக் கொண்டு போனான்.

கூட்டம் முடிந்து வீட்டுக்கார அம்மாளும், மற்றவர்களும் வந்தார்கள். இளைஞன் வந்தது, இருவரும் உள்ளே சென்று பேசியது அனைத்தும் கவனித்தார்கள்.

முகத்தை ஒரு மாதிரியாக வைத்துக் கொண்டு அன்று பேசாமல் இருந்து விட்டார்கள். பதினைந்து நாட்கள் கழித்து மறுபடியும் விஜி பட்டுச் சொக்காயும், பிஸ்கோத்துப் பொட்டலமுமாகப் பள்ளியிலிருந்து ஓடி வந்தாள்.

தொலைவில் அந்த இளைஞன் வந்து கொண்டிருந்தான்.

''காம்ப் போயிருந்தேன் மன்னி; அண்ணாவைப் பார்த்தேன். 'வருகிற சம்பளம் போதவில்லையடா. அவளுக்கு — அதுதான் அவர் இளையாளுக்கு வேறு மூன்று குழந்தைகள் — சரியாகக் குடித்தனம் பண்ணத் தெரியவில்லை; விலைவாசி ஏறிவிட்டது' என்றார்......''

''என்னைப் பற்றி ஏதாவது அவரிடம் பேசி வைத்தாயா என்ன?'' என்று கேட்டாள் மதுரம்.

''சே.... சே.... இதற்குள்ளாகவா? — மனுஷன் இன்னும் கொஞ்சம் திண்டாட வேண்டாமா?''

மதுரம் பேசாமல் இருந்து விட்டாள். கணவன் கஷ்டப்படுகிறானே என்று மனம் அடித்துக் கொண்டது. படட்டும், நன்றாக வேண்டும் என்றும் தோன்றியது.

இளைஞன் சென்ற பிறகு வீட்டுக்கார அம்மாள் வந்தாள்.

''இந்தாம்மா, டீச்சர்! யார் அந்தப் பையன்?'' என்று சுற்றி வளைக்காமல் நேரடியாகக் கேட்டு விட்டாள்.

## கலைவாணரின் ஹாஸ்யம்

ஒரு முறை கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் அவர்களுக்கு, திருச்சி ஜில்லா ஜட்கா வண்டிக்காரர் சங்கத்திலிருந்து, தங்கள் சங்க ஆண்டுவிழாவுக்குத் தலைமை வகிக்குமாறு அழைப்பு வந்தது; கலைவாணர் அதை ஏற்றுக் கொண்டார். ஆண்டு விழாக் கூட்டம் தொடங்கியது. என். எஸ். கே. அவர்களும் பேச்சைத் தொடங்க எழுந்தார். அருமையான பேச்சாளரல்லவா கலைவாணர்? வந்திருந்தவர்களுக்குக் கலைவாணர் வாயின் மேலேயே கண். என். எஸ். கிருஷ்ணன் தம் பேச்சை ஆரம்பித்தார். ''உங்கள் சங்கக் கூட்டத்துக்குத் தலைமை வகிக்கும் வாய்ப்புக் கிடைத்ததில் மிக்க மகிழ்ச்சி... நானும் எங்கெல்லாமோ சுற்றி யிருக்கிறேன். ஆனாலும் உங்களைப் போல் பரந்த நோக்கம் யாருக்கும் இல்லை. எங்கேயும் பொறாமையும் பூசலும் உள்ள இந்தக் காலத்தில் உங்களிடத்தில் மட்டும் எல்லாரும் முன்னுக்கு வர வேண்டும் என்ற எண்ணம் இருக்கிறது. ஏனென்றால் நீங்கள் யார் வண்டியில் ஏறினாலும் சொல்லும் முதல் வார்த்தை, 'முன்னுக்கு வாங்கோ! முன்னுக்கு வாங்கோ!' என்பதுதான். இந்தக் காலத்திலே யார் இப்படிச் சொல்கிறார்கள்?'' என்றார் கலைவாணர் என். எஸ். கே.



மதுரம் உறவு முறையை விளக்கினாள். வீட்டுக்கார அம்மாள் இருப்பிடமே பயனில்லை. நேற்று வரையில் மதுரமாக இருந்த மதுரம் டீச்சரைப் பற்றி ஊரில் என்னென்னவோ அடிபட்டது.

மதுரத்தின் உள்ளம் எரிந்தது. கணவனால் நிராகரிக்கப்பட்டாலும் அவனுடைய பவித்திரமான நிறைமையைக் காத்துக் கொண்டு மறைமுகமாக அவன் அவனுக்குப் பெருமை வைத் தேடித் தருவதில்தான் அவளுக்குச் சிறிதளவாவது ஆறுதல் ஏற்படக் கூடும்.

இதென்ன இன்று வெட்டப் பூதம் கிளம்பிய மாதிரி: இவனை யார் இங்கே வரச் சொல்லி அழைத்தார்கள்?

மதுரம் துயரை விழுங்க முடியாமல் தத்தளித்த வண்ணம் கோவிலுக்குச் சென்றாள். அம்மன் சந்நிதிக்கு விளக்கேற்றி விட்டு, திருச்சுற்றை வலம் வந்த பிறகு வெளியே வந்தாள்.

கோபுர வாசலில் நிழல் தட்டியது. இளைஞன் நின்றுகொண்டிருந்தான். அவன் இருபத்திரண்டு பிராயத்தினன். மதுரம் முப்பது பிராயத்தினள்.

உலகத்தில் கண்கள் குருடாகிக் கிடந்தன. தனியொருத்தியின் வாழ்வுடன் எதையும் பிணைத்துப் பார்க்க முடியும் உலகத்தால். மதுரம் அவனை நிமிர்ந்து பார்த்தாள்.

''என்ன அப்பா சும்மா வந்துகொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டாள் மதுரம்.

இளைஞன் அதிர்ந்து போனான்.

''மன்னி! தாங்கள் ஏதோ தவறாக...''

''தவறுமில்லை; மன்னுமில்லை. இதோ பார். நான் இதன் புனிதத்துக்குக் கட்டுப்பட்டவள். இது என் கழுத்தில் துலங்கும் வரை தனியாகவே காலத்தைக் கடத்திவிட முடியும் என்கிற உறுதியுள்ளவள். என்னிடம் அன்பு - பக்தி எதுவானாலும் சரி உள்ளவனாக இருந்தால் என்றாவது ஒரு நாள் உன் அண்ணனுடன் இங்கே வா. இல்லை, நான் அவரிடம் சென்று சேர்ந்த பிறகு வந்து பார். அதுவரையில் இங்கு வராதே...'' என்று கண்டிப்பான குரலில் கூறினாள் மதுரம்.

கோபுர விளக்கின் ஒளியில் மதுரத்தின் நிழல் பூதாகாரமாகத் தெரிந்தது. ஏதோ ஒரு சக்தி ஆணையிடுவது போல் இருந்தது. செந்தழலைப் போல் அவள் கண்கள் ஒளிர்ந்தன.

அவன் அவளைத் தழலாகவே கண்டான். திரும்பி நடந்தான்.



# காமாட்சி விளக்குகள்

மின்சார விளக்குகள் வருவதற்கு முன் இலுப்ப எண்ணெய் அல்லது ஆமணக்கு எண்ணெய் (விளக்கெண்ணெய்) ஊற்றி அறைக்கு அறை குத்து விளக்குகள் ஏற்றி வைப்பது வழக்கம். முன் அறையில் மாத்திரம் பெரிய ஸ்தம்பக் குத்து விளக்கு ஏற்றி வைப்பார்கள். அதில் திரிகள் பல எரிந்து கொண்டிருக்கும். சாதாரணக் குத்து விளக்கில் ஒரே ஒரு திரிதான்.

குத்துவிளக்கில் படிப்பது கண்ணுக்குக் கெட்டது என்பது இந்தக் காலத்துக் கருத்து. ஆனால் இலுப்ப எண்ணெயில் எரியும் குத்துவிளக்கில் வாசிப்பது கண்ணுக்கு நல்லது என்பார் மூதாதையர். உண்மையிலேயே மின்சார விளக்கில் வாசிப்பது கண்ணுக்கு எரிச்சலே உண்டாக்குகிறது. அதன் பிரகாசம் எவ்வளவு அதிகமாக இருக்கிறதோ அந்த அளவுக்கு நம் கண்களுக்குக் கேடு வரும்.

இன்றைக்குக்கூடத் தமிழ் நாட்டின் அநேக வீடுகளில் குத்துவிளக்குகள் உபயோகிக்காமல் மூலையில் கிடக்கும். கார்த்திகைத் தீபத்தன்று மண்ணினால் செய்த சிறு விளக்குகளைக் கடையில் வாங்கி ஏற்றி வைக்கிறார்கள். சில குடும்பங்களில் தீபாராதனை நடத்துவது வழக்கம். அப்பொழுது குத்துவிளக்கு ஏற்றி வைக்கப்படும்.

கோவில்களில் மூலஸ்தானங்களில் தினந்தோறும் ஏற்றி வைக்கும் குத்து விளக்குகளும் உண்டு. சங்கற்பித்த விளக்குகளுக்குப் பக்தர்கள் தேவதானம் செய்து வைப்பர். பசு, எருமை தானம் செய்தால் அவை மூலம் கிடைக்கும் நெய் நித்திய தீபங்களுக்குப் பயன்படுகின்றது.

ஆசார விதிகளுக்குரிய விளக்குகள் பல வகைகளில் உள்ளன. லக்ஷ்மி, நாகம் போன்ற விளக்குகள் மிகவும் பாராட்டப்படுகின்றன. தீபங்களை ஸ்தம்பங்களில் வைப்பது சகஜம். சிலவற்றை மூலஸ்தானத்தில் தொங்கவும் விடுகின்றனர்.

காமாட்சி விளக்குகள் என்று கடலூரில் செய்கிறார்கள். (மேல் படம்) பித்தளை அச்சுக்களை வைத்துக் கொண்டு குத்து விளக்குகளின் பகுதிகளை உருவாக்கி வார்ப்படம் செய்யப்படுகிறது. இந்தக் குடிசைத் தொழிலுக்கு அரசினர் ஆதரவு தேவை.

— அன்புமணி

# விருந்தினர்கள் வரும் வேளை — சரஸாவுக்கு ஒரே தலைவலி!








ஸாரிடான் துரிதமாக, கெடுதல் எதுவுமின்றி, நிச்சயமாக நிவாரணம் அளிக்கிறது. தலைவலி, பல்வலி, உடல்வலி, ஜுரம் வரும்போலிருப்பது, ஜலதோஷம் இவற்றி லிருந்து நிவர்ரணம் பெற ஸாரிடான் சாப்பிடுங்கள். ஸாரிடான் உலகப் புகழ் பெற்ற வலி நிவாரணி. எப்பொழுதும் வீட்டில் ஸாரிடான் வைத்திருங்கள். பெரியவர்களுக்கு ஒரு வில்லை முழு டோஸ்: குழந்தை களுக்கு $\frac{1}{4}$ லிருந்து $\frac{1}{2}$ வில்லை வரை கொடுக்கலாம்.

ஒரே ஒரு வில்லை

## ஸாரிடான் 'ரோஷ்'

வலியைப் போக்குகிறது.
ஆசுவாசப்படுத்துகிறது.
புத்துணர்ச்சி யூட்டுகிறது




ஒரே வில்லை ஸாரிடான் போதும்
ஒரு வில்லை 13 நயா பைசா

'ரோஷ்' தயாரிப்பு

ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: வால்டாஸ் லிமிடெட்

JWT/VT-1046 §

# மலையைக் கெல்லி...

**தா**ன்தோன்றிபுரம் ஸ்டேஷன்மாஸ்டர் ரயில்வே ஸ்டேஷன்களுக்குத் தேவையான சாமான்கள் வழங்கும் 'ஸ்டோர்ஸ் இலாகா'வுக்கு எழுதிய கடிதம்: 14-2-1963

சமீபித்துக் கொண்டிருக்கும் கோடைக் காலத்தை முன்னிட்டு, இந்த ஸ்டேஷனுக்கு இரண்டு மண் பானைகள் வழங்கப்படுவதற்கான உத்தரவு நிரந்தரமாக இருக்கிறது. எனவே, கூடிய விரைவில் இரண்டு மண் பானைகள் அனுப்பும்படி கேட்டுக் கொள்கிறேன். —ஸ்டேஷன்மாஸ்டர்

* * *

20-3-1963

இது, இரண்டாவது நினைவுக் கடிதம். கோடை இப்பொழுதே கடுமையாக இருக்கிறது. மண் பானைகள் தேவை.

ஸ்டேஷன்மாஸ்டர்

* * *

4-4-1963

என் 14-2-63, 20-3-63 கடிதங்களுக்கு எவ்வித பதிலும் வரவில்லை என்பதை மிகுந்த வருத்தத்துடன் தங்கள் கவனத்துக்குக் கொண்டு வருகிறேன்.

இந்த ஸ்டேஷனிலிருந்து ஒரு மைல் தூரத்திலுள்ள தென்னஞ்சோலை கிராமத்தில் மாரியம்மன் கோவில் திருவிழா, இம்மாதம் பத்தாம் தேதி தொடங்குகிறது. ஸ்டேஷனில் பிரயாணிகள் போக்குவரத்து அதிகமாக இருக்கும். எனவே, கால தாமதமின்றி மண் பானைகளை அனுப்பவும். — ஸ்டேஷன்மாஸ்டர்

* * *

தந்தி: தான்தோன்றிபுரம்
11-4-63

எனது நாலாம் தேதியிட்ட கடிதம்-திருவிழா ஆரம்பமாகி விட்டது — பிரயாணிகள் புகார் செய்கிறார்கள் — மண் பானைகள் மிகவும் அவசியம். — ஸ்டேஷன்மாஸ்டர்

* * *

ரயில்வே ஸ்டோர்ஸ் இலாகாவிலிருந்து, தான்தோன்றிபுரம் ஸ்டேஷன்மாஸ்டருக்கு வந்த கடிதம்: 12-4-63

பதினோராம் தேதியிட்ட உமது தந்தி கிடைத்தது. ஆனால் தந்தியில் கூறப்பட்டுள்ள நாலாம் தேதிக் கடிதம் இந்தக் காரியாலயத்தை வந்தடைந்ததாகத் தெரியவில்லை.

நாலாம் தேதிக் கடிதத்தின் நகல் ஒன்று அனுப்பினால், மேற்கொண்டு நடவடிக்கை எடுக்கப்படும். — தலைமைக் குமாஸ்தா

* * *

தந்தி: தான்தோன்றிபுரம்
14-4-63

நாலாம் தேதிக் கடிதத்தின் நகல் அனுப்பப்பட்டிருக்கிறது. இரண்டு மண் பானைகள் உடனே தேவை. குடிதண்ணீரில்லாமல் பிரயாணிகள் தவிப்பு. — ஸ்டேஷன் மாஸ்டர்

22-4-63

எஸ். எம். தான்தோன்றிபுரம்

நாலாம் தேதிக் கடித நகலும், பதினாலாம் தேதித் தந்தியும் வந்தன. உமது ஸ்டேஷனுக்கு இரண்டு மண் பானைகள் வழங்குவதற்கான ஏற்பாடுகள் செய்யப்படும். ரயில்வேக்கு மண்பானைகள் சப்ளை செய்யும் கண்ட்ராக்டரிடமிருந்து மண் பானைகள் இன்னும் வந்து சேரவில்லை என்பதை அறியவும்.

தலைமைக் குமாஸ்தா

* * *

18-5-1963

தங்கள் அலுவலகத்தின் 22-4-63 கடிதம்.

இந்த ஸ்டேஷன் அமைந்துள்ள லைன் பாதையில் உயர் அதிகாரிகள் அடங்கிய தனி வண்டி ஒன்று, இம்மாதம் இருபத்தொன்பதாம் தேதியன்று ஓட இருப்பதாகத் தகவல் வந்திருக்கிறது. இந்த நிலையம் பரிசோதனைக்கு உட்பட்டால், மண் பானைகள் இல்லாத தவறு வெளிப்பட்டு விடும். எனவே, இரண்டு மண் பானைகள் மிக விரைவில் அனுப்பவும். — ஸ்டேஷன்மாஸ்டர்

* * *

தந்தி: 28-5-1963

அதிகாரிகள் இன்ஸ்பெக்ஷன் ஸ்பெஷல் வண்டி நாளை தினம் ஓடுகிறது. மண் பானைகள் கட்டாயம் அனுப்புக.

ஸ்டேஷன்மாஸ்டர்

* * *

ஸ்டோர்ஸ் இலாகா
30-5-63

எஸ். எம். தான்தோன்றிபுரம்

உமது தந்தியின் நகல், மண்பானைக் கண்ட்ராக்டருக்கு அனுப்பப்பட்டிருக்கிறது. இனி, அநாவசியமாகக் கடிதமோ தந்தியோ அனுப்ப வேண்டாம். — தலைமைக் குமாஸ்தா

* * *

22-6-63

தங்கள் 30-5-63 கடிதம் கிடைத்தது.

கனம் கல்வி மந்திரி ஒரு பள்ளிக்கூடத்தின் புதிய கட்டடத்தைத் திறந்துவைக்க 1-7-63 அன்று இவ்வூருக்கு வருகிறார்கள். அதற்குள் மண் பானைகள் கிடைக்கும்படி ஏற்பாடு செய்யவும். — ஸ்டேஷன்மாஸ்டர்

* * *

ஸ்டோர்ஸ் இலாகா
3-7-1963

எஸ். எம்., தான்தோன்றிபுரம்

உமது 22-6-63 கடிதம்.

20-7-63 அன்று காலை 8-32 மணிக்கு உமது ஸ்டேஷனுக்கு வரும் பாஸஞ்சர் வண்டியில் இரண்டு மண் பானைகள் ஸ்பெஷலாக அனுப்பப்படுகின்றன. பெற்றுக் கொள்ளவும்.

—தலைமைக் குமாஸ்தா

* * *

20-7-63 காலை 8-32 மணி பாஸஞ்சர்.

பாயிண்ட்ஸ்மேன் காத்திருந்து வெகு அவசரமாக 'பார்சல் வா'னின் கதவைத் திறந்தான். 'அதோ, அந்த மூலையில் பார்,' என்று சுட்டிக் காட்டினார் கார்டு.

அந்த மூலையில் - ஒரு பானை தூள் தூளாகக் கிடந்தது; மற்றொன்றில் நீண்ட விரிசல்! மூடிகள் இரண்டும் விள்ளாமல் விரியாமல், அழகாய் முழுமையாய் இருந்தன.

'ஐயோ' என்று தலையில் அடித்துக் கொண்டார் ஸ்டேஷன்மாஸ்டர்! — டி. எஸ். கே.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

# வெள்ளை டெட்

## சலவையின் மேன்மை வெண்மை யுடன் தூய்மை

வெள்ளை டெட் பவுடரினால் மட்டும்தான் உங்கள் துணிகளை துப்புரவாகவும், பளிச்சிடும் வெண்மையுடனும் வெளுக்க முடியும். நவீன டெட் ஒன்றுதான் துணிகள் பழுதாகாமல் சலவை செய்ய உதவுகிறது.

வெள்ளை உடைகளோ, வண்ண நிற ஆடைகளோ, பருத்தி, நைலான், கைத்தறி, ரேயான் எல்லாவித துணிகளையும், பழுதாகாமல், சுலபமாக, பளிச்சென்று வெண்மையாக சலவை செய்யும் சாதனம் நவீன வெள்ளை டெட் தான்.

அரை வாளித் தண்ணீருக்கு இரண்டு அல்லது மூன்று டேபிள் ஸ்பூன் அளவே போதும்.




ஸ்வஸ்திக்
ஆயில் மில்ஸ் லிமிடெட் பம்பாய்-1

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

நாளொரு மேனியாக...

# செய்வது எழிலோங்கச் ரெக்ஸோனா




கொஞ்சி உறவாடி நாளொரு மேனியாக உமது எழிலுக்குப் பொலிவை ஊட்டி வளர்ப்பது ரெக்ஸோனா. இதில் வியப்பென்ன? சரும எழிலுக்கான தைலங்களின் கலவையான 'கேடில்' இருக்கிறது ரெக்ஸோனாவிலே. தவிரவும், கமகமவென்று புதுமணம் கமழ்வதனால், மணமோங்கி மலரும் உங்கள் பொலிவு.




**கேடில் அடங்கிய ரெக்ஸோனா உங்கள் சருமத்திற்கு உகந்தது.**

RX. 15A-140 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்